# கடவுளின் வடிவங்கள்




இயற்றியவர்
ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா
1987

# பொருளடக்கம்


| அத்தியாயம் | | பக்கம் |
|---|---|---|
| 1. | பொருள் ஒன்று பெயர் பல | 1 |
| 2. | சூரிய நாராயணன் | 7 |
| 3. | அம்பிகை | 31 |
| 4. | கணபதி | 65 |
| 5. | முருகன் | 86 |
| 6. | மஹாவிஷ்ணு | 107 |
| 7. | சிவன் | 124 |
| 8. | ஆலய வழிபாடு | 153 |
| 9. | பூஜா விதி | 171 |

# 1. பொருள் ஒன்று பெயர் பல

यं शैवाः समुपासते शिव इति ब्रह्मेति वेदान्तिनो
बौद्धा बुद्ध इति प्रमाणपटवः कर्तेति नैयायिकाः ।
अर्हन्नित्यथ जैनशासनरताः कर्मेति मीमांसकाः
सोऽयं वो विदधातु वाञ्छितफलं त्रैलोक्यनाथो हरिः ॥

யம் சைவா: ஸமுபாஸதே சிவ இதி ப்ரஹ்மேதி வேதாந்திநோ
பௌத்தா புத்த இதி ப்ரமாணபடவ: கர்தேதி நையாயிகா:
அர்ஹன்னித்யத ஜைனசாஸனரதா: கர்மேதி மீமாம்ஸகா:
ஸோஅயம் வோ விததாது வாஞ்சிதபலம் த்ரைலோக்யநாதோ ஹரி:

*சைவர் சிவமென்றும், வேதாந்திகள் பிரம்மமென்றும், பௌத்தர்கள் புத்தன் என்றும், நையாயிகர் கர்த்தர் என்றும், ஜைனர் அர்ஹன் என்றும், மீமாம்ஸகர் கர்மமென்றும் வணங்கும் பொருள் மூவுலகுக்கும் இறைவன். அத்தகைய ஹரி நமது விருப்பத்தை நிறைவேற்றுக.*

தூய தான துரிய அறிவெனுந்
தாயும்நீ இன்பத் தந்தையும் நீயென்ருற்
சேயதாம் இந்தச் சீவத் திரளன்ரே
ஆயும் பேரொளி யான அகண்டமே.

பஞ்ச பூதங்களுள் நீர் ஒன்று. அதற்கு வடிவங்கள் பல இருக்கின்றன. ஆவியாக அது எங்கும் வியாபித்திருக்கிறது. அப்பொழுது அது கட்புலனுவதில்லை. அதற்கு நிறம் கிடையாது. நம் காட்சிக்கு எட்டும் வடிவம் அதற்கு இல்லை. அருபப்பொருள் என்று அதைப் பகரலாம். அத்தகைய நுண்ணிய பொருள் உறைந்து பனிக்கட்டியாகி மலையின்மீது இறங்குகிறது. அப்பொழுது

அதற்கு வடிவம் வருகிறது. கண் பூத்துப் போகும்படியான தூவெண்ணிறம் வருகிறது. ஆக, அதற்கு உருவமும் உண்டு; அருவமும் உண்டு. நிறத்தைக் கடந்தும் இருக்கிறது; நிறத்தை எடுத்தும் இருக்கிறது. கடலில் அது நீல நிறம் எடுக்கிறது; கேணியில் கன்னங்கரேலென்று தென்படுகிறது; இமயமலையில் சூரியப்பிரகாசத்துடன் மிளிர்கிறது. பிறகு அது இளகி நீர் ஆகும் பொழுது ஆற்றுநீர் என்றும், சேற்று நீர் என்றும், கேணி நீர் என்றும், குட்டை நீர் என்றும், மழை நீர் என்றும், கடல் நீர் என்றும் பெயர் பெறுகிறது. ஜலம் இத்தகைய பல வடிவங்களிலும், பண்புகளிலும் இருந்த போதிலும் அது வெவ்வேறு பொருள் ஆய்விடுவ தில்லை. ஒரு பொருளே பல பாங்குகளில் புலப்படுகிறது. தெய்வம் அத்தகையது.

एकं सत् विप्रा बहुधा वदन्ति ।

ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி

'மெய்ப்பொருள் ஒன்று. சான்றோர் அதற்குப் பல பெயர் களிட்டிருக்கின்றனர்' என்கிறது வேதம். கடவுள் ஒருவர். அவர் பிரபஞ்சத்தைக் கடந்தும் இருக்கிறார்; பிரபஞ்சமய மாக பிரபஞ்சத்தின் உள்ளும் இருக்கிறார். கடந்தும் உள்ளும் இருக்கின்ற பொருள் கடவுள் என்பதாகிறது.

என்றைக்கும் அழியாததால் இது மெய்ப்பொருள் எனப்படுகிறது. ஸத் என்பதன் பொருளும் இதுவே. ஸத் என்னும் அடிச் சொல்லிலிருந்து ஸத்யம் என்னும் பதம் வருகிறது. இருப்பதை ஸத் என்கின்றோம். இல்லாதது அஸத் ஆகிறது. பிரபஞ்ச சொரூபமாகவும் அதற்கப்பாற் பட்டதாகவும் பரம்பொருள் இருக்கிறது. ஆதலால் அது ஸத் சொரூபமானது என்று அழைக்கப்படுகிறது. நிலை

15-4.



பெற்று இருப்பது மட்டும் அதன் இயல்பு அன்று. அது உணர்வு அல்லது சித் சொருபமானது. சித் என்றால் என்ன என்பதை ஒரு திருஷ்டாந்தத்தைக் கொண்டு நாம் தெரிந்து கொள்ளலாம். கல் இருக்கிறது. மனிதன் இருக்கிறான். இருக்கிறேன் என்கின்ற உணர்ச்சி மனிதனிடத்திருப்பது போன்று கல்லினிடத்து இல்லை. மனிதன் உணர்வு அல்லது சித் வடிவினன். கல்லினிடத்து அத்தகைய உணர்வு இல்லை. அது அசித் வஸ்து. மெய்ப்பொருள் யாண்டும் சித் சொருப மாய் இருக்கிறது. அதனிடத்திருந்தே உயிர்கள் யாவும் உணர்வைப் பெறுகின்றன. இதற்கு மேல் அப்பொருளுக்கு மற்றொரு இயல்பு உண்டு. அது ஆனந்தமே வடிவெடுத்தது. அதனிடத்துள்ள ஆனந்தமே எண்ணிறந்த உயிர்களிடத்து இன்பமாக இலங்குகிறது. இன்பத்தை உணராத உயிர் இல்லை. ஆனந்தம் வேறு, தெய்வம் வேறு அல்ல. இந்த மூன்று இயல்புகளையும் ஒன்றாகக் கூட்டிவிட்டால் அது தெய்வத்தின் முடிவான விளக்கமாகிறது. சத் ஆகி, சித் ஆகி, ஆனந்தம் ஆகி அது இருக்கிறது. ஆதலால் அது சத் சித் ஆனந்தம். அது பிளவுபடாத பெரிய பொருள். ஆதலால் அதை அகண்ட சத் சித் ஆனந்தம் என்கிறது மறைமொழி. இந்த அகண்ட சச்சிதானந்தம் பிரபஞ்சமாகப் பரிணமிக்குமிடத்து உணர்விலும், இன்பத்திலும் ஏற்றத் தாழ்வு இருப்பதாகத் தென்படுகிறது. உண்மையில் அது பரிபூரணமாய், அகண்டமாய் உள்ள சத் சித் ஆனந்தம். இதுதான் அதைப்பற்றிய முடிவான விளக்கம்.

இப்பொருளுக்கு எப்பெயரை வேண்டுமானாலும் இட்டு அழைக்கலாம். இதைப் பரப்பிரம்மம் என்கிறது வேதாந்தம். சதாசிவம் என்று சைவமதம் இதைச் சாற்றுகிறது; மஹா விஷ்ணு என்று வைஷ்ணவ மதம் மொழிகிறது; பராசக்தி

என்று சாக்த மதம் பகர்கிறது; மஹா கணபதி என்று காணபத்ய மதம் கூறுகிறது; முருகவேள் என்று கௌமார மதம் முரசறைகிறது; அல்லா என்று இஸ்லாமிய மதம் அழைக்கிறது; பரலோகத்திலிருக்கும் பிதா என்று கிறிஸ்தவ மதம் பறை சாற்றுகிறது; டோ என்று சீன தேசத்து மதம் செப்புகிறது. பெயர் எதுவாயினும் பொருள் ஒன்றே. பலர் நினைப்பது போன்று ஒவ்வொரு மதத்துக்கும் ஒரு தனித் தெய்வம் இல்லை. பொருள் ஒன்று, அதற்குப் பெயர்கள் பல. எல்லா மதங்களும் தாங்கள் வழுத்தும் தெய்வத்தைப் பேருயிர் என்றும், பேரறிவுப் பொருள் என்றும், பரமானந்தத்தைக் கொடுக்கும் வஸ்து என்றும் விளக்குகின்றன. அதாவது அது அகண்ட சத் சித் ஆனந்தம் என்பதை இத்தனைச் சமயங்களும் ஒத்துக் கொள்கின்றன.

பிரம்மம் என்னும் இம் மெய்ப்பொருளே நிர்க்குணப் பிரம்மமாகவும், சகுண பிரம்மமாகவும் இருக்கிறது. மனம் மொழிக்கெட்டாத நிலையில் அது நிர்க்குண பிரம்மம் என்னும் பெயர் பெறுகிறது. பிரபஞ்சம் முழுதிலும் அந்தர்யாமியாய் இருந்து தன் மகிமைகளையெல்லாம் அது விளக்கிக் கொண்டிருக்கிறது. தூய மனது அதன் மகிமைகளைத் தெரிந்துகொள்ள வல்லதாகிறது. அத்தகைய மகிமைகளைச் சொல்லால் விளக்குவதும் சாத்தியமாகிறது. அப்பொழுது அது சகுண பிரம்மம் எனப் பெயர் பெறுகிறது. சகுண பிரம்மம் கீழ்த்தரமானதென்றும், நிர்குணப் பிரம்மம் மேலானதென்றும் ஒரு சிலர் கருதுகின்றனர். அப்படிக் கருதுவது பொருந்தாது. நீராவிக்கு ஒப்பானது நிர்குணப் பிரம்மம். பெருக்கெடுத்தோடும் நீருக்கும், அசைவற்றுக் கிடக்கும் பனிக்கட்டிக்கும் ஒப்பானது சகுணப் பிரம்மம். இதில் ஒன்று உயர்ந்தது, மற்றது தாழ்ந்தது என்று கருது

வது ஒவ்வாது. எல்லா நிலைகளிலும் அது இருப்பதே அதன் மகிமையாகும். ஆக, நிர்குண பிரம்மமும் சகுண பிரம்ம மும் ஒன்று என்பதை அறிந்துகொள்ளுதல் அவசியம்.

அனந்த கல்யாண குணங்களை உடைய சகுண பிரம்மம் ஒவ்வொரு மதத்திலும் ஒவ்வொரு பெயர் பெற்று இலங்கு கிறது. சொருபத்திலோ ஒவ்வொரு மதத்துக்குரிய தெய்வத் துக்குத் தனி வியக்தி இருப்பதுபோன்று தென்படுகிறது. வீடு ஒன்றை வானத்தில்பறக்கும் ஆகாய விமானத்திலிருந்து பார்த்து விளக்கலாம். அதே வீட்டை வெவ்வேறு திசைகளில் நின்று பார்த்து விளக்கலாம். அப்படி விளங்குங்கால் அந்த விளக்கத்தில் சில ஒற்றுமைகளையும், சில வேற்றுமைகளையும் காண்போம். விளக்கத்திலுள்ள வேற்றுமையை முன்னிட்டு வீடு ஒன்றுக்கு மேற்பட்டதாகவோ அல்லது பலதரப்பட்ட தாகவோ ஆய்விடாது. அதே பாங்கில் சமயங்கள் சாற்று கின்ற வெவ்வேறு விளக்கங்களை முன்னிட்டு ஒரு தெய்வம் பல தெய்வங்கள் ஆய்விட முடியாது. இது சான்றோர் கண் டறிந்த உண்மையாகும்.

புராணங்களில் ஒரு தெய்வத்துக்கு உயர்வு கொடுத் தும் மற்றொரு தெய்வத்துக்குத் தாழ்ந்த இடம் கொடுத்தும் பகர்கின்ற பகுதிகளைக் காணலாம். விஷ்ணு புராணம் மஹா விஷ்ணுவே முழுமுதற் பொருள் என்று விளம்பும். தேவீபாகவதம் பராசக்திக்கு மேற்பட்ட பொருள் இல்லையென்று பகரும். சிவபுராணம் சிவத்துக்கு மிக்க செம்பொருள் இல்லையென்று சாற்றும். இப்படி இவை கள் பகர்வதில் நோக்கம் ஒன்று உண்டு. வழிபடும் சாதகன் ஒருவன் தனது வழிபாட்டுக்குரிய இஷ்ட தெய்வ மாக இவைகளுள் ஏதேனும் ஒன்றை எடுத்துக்கொள் கிறான். அத்தகைய சாதகனுக்கு இஷ்ட நிஷ்டை ஏற்படு

தற்பொருட்டு அவன் வணங்கும் தெய்வமே மிகப் பெரியது என்று அவனுக்குப் புகட்டுவது அவசியமாகிறது. ஒவ்வொரு குழந்தையும் தன் தாயே உலகில் மிக உயர்ந்தவள் என்று எண்ணிக்கொள்கிறது. குழந்தை அப்படி எண்ணுதலில் குற்றம் ஒன்றுமில்லை. அப்படி எண்ணினுல் தான் குழந்தைக்கு மாத்ருபக்தி அதிகரிக்கிறது. அக்குழந்தைக்கு வயது முதிர்ந்த பிறகு அது தன் எண்ணத்தைத் திருத்தியமைத்துக்கொள்கிறது. சாதகன் ஒருவன் ஆரம்ப தசையில் இருக்கும்பொழுது தன் தெய்வம் மற்றவர் தெய்வத்தைவிட மேலானது என்று எண்ணுவது இயல்பு. அவனுடைய எண்ணத்துக்கு இடங்கொடுத்துப் புராணங்கள் தெய்வங்களுக்கிடையில் உயர்வு தாழ்வு ஏற்படுத்திப் பேசுகின்றன. இது முடிவான உண்மையல்ல என்பதை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

வேதத்தை அங்கீகரிக்கும் சமயங்கள் ஆறு நம் நாட்டில் இருக்கின்றன. இந்த ஆறு சமயங்களையும் தொகுத்தே வைதிக மதத்துக்கு ஹிந்துமதம் என்னும் புதிய பெயர் கொடுத்திருக்கிறோம். ஆறு சமயங்கள் தோறும் வேறு வேருய் விளையாடும் பொருள் ஒன்றே. பரம்பொருள் உபாசகன் ஒருவன் தனது உபாசன மூர்த்தியாக இந்த ஆறினுள் எதைவேண்டுமானுலும் எடுத்துக்கொள்ளலாம். சமரச நோக்கம் உடைய அந்தச் சாதகன் தான் வழிபடும் தெய்வந்தான் ஏனைய பெயர்கள் பெற்று வெவ்வேறு சமயங்களில் மிளிர்கிறது என்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். தனது வழிபடு தெய்வமாக எடுத்துக் கொண்ட மூர்த்தியையே அவன் சர்வகாலமும் உபாசித்து வரவேண்டும். உபாசனை வலுக்குமளவு தான் வணங்கும் தெய்வம் தன் மனத்தகத்து எழுந்தருளியிருப்பதை

உணர்வான். மனதில் உணர்ந்தான பிறகு புறத்திலும் அப்பொருள்தான் நிறைந்திருக்கிறது என்பதைக் காண்பான். இப்பிரபஞ்ச மயமாக அதற்கேற்பட்டிருக்கும் தோற்றம் மிகச் சிறியது; இத்தோற்றத்துக்கப்பால் உள்ள அதன் அகண்டாகார நிலை அளப்பரியது என்பதை இறுதியில் அறிந்துகொள்வான். ஆக, பொருள் ஒன்று, அதற்குப் பெயர்கள் பல, வடிவங்கள் பல. அதை ஆராதிப்பதற்கேற்ற முறைகளும் பல இருக்கின்றன. இவ்வுண்மையைச் சாதகன் அறிந்துகொள்ளுதல் அவசியம்.



# உ. சூரிய நாராயணன்

## தியான சுலோகம்

नमस्सवित्रे जगदेकचक्षुषे जगत्प्रसूतिस्थिति नाशहेतवे ।
त्रयीमयाय त्रिगुणात्मधारिणे विरिञ्चिनारायणशंकरात्मने ॥

நமஸ்ஸவித்ரே ஜகதேகசக்ஷுஷே
ஜகத்ப்ரஸூதிஸ்திதி நாசஹேதவே ।
த்ரயீமயாய த்ரிகுணாத்மதாரிணே
விரிஞ்சிநாராயண சங்கராத்மனே ॥

சுருதி யின்கண் முனிவரும் பின்னே
தூமொ ழிப்புல வோர்பலர் தாமும்
பெரிது நின்றன் பெருமை யென் றேத்தும்
பெற்றி கண்டுனை வாழ்த்திட வந்தேன்;
பரிதியே, பொருள் யாவிற்கு முதலே,
பானுவே, பொன் செய் பேரொளித் திரளே,
கருதி நின்னை வணங்கிட வந்தேன்;
கதிர்கோள் வான்முகம் காட்டுதி சற்றே.

ஒற்றைத் திகிரியனை ஒரேழ் பரியானை
கற்றைக் கதிரோனைக் கைம்மலரான்—மற்றினியே
பொய்கையினில் நீராடிப் போற்றிப் புதுஉளத்தான்
வைகறையில் வாழ்த்திடுவம் யாம்.

**கண்கண்ட தெய்வம்**

உலகில் உள்ள நூல்களில் மிகமிகப் பழையது ரிக் வேதம். மற்ற நூல்களெல்லாம் அதன்பின் தோன்றியவைகள் ஆகும். இந்த ரிக்வேதத்தை ஆராய்ந்து பார்த்தால் ஓர் உண்மை விளங்குகிறது. பண்டைக்காலத்துப் பெரியோர்கள் இயற்கையை அன்புடன் வணங்கினர்கள். இயற்கை உயிரோடு இலங்குவது அவர்களுக்குத் தெளிவுபட விளங்கிற்று. இயற்கையுடன் நல்லிணக்கம் வைப்பதே அவர்களுக்குச் சமய அனுஷ்டானம் ஆயிற்று. நிலம், நீர், காற்று, மழை முதலியன தெய்வீக சக்தியுடன் அவர்களுக்குத் திகழ்ந்தன. இத்தகைய இயற்கைப் பொருள்களுள் சூரியன் உயர்ந்ததொரு ஸ்தானம் பெற்று வருவானுயினன். அன்று முதல் இன்றுவரை சூரியனை பிரத்யக்ஷ தெய்வமாகப் போற்றுவது நம் நாட்டு மக்களின் சமய அனுஷ்டானங்களுள் ஒன்றாகும். இயற்கையோடு. வைத்துள்ள தெய்விக இணக்கமே இயற்கைக்கு அப்பால் உள்ளதை ஞானக்காட்சியில் காண்பதற்குத் துணைபுரிந்தது. அத்தகைய ஞானக்கண்ணைப் பெற்றன பிறகு மெய்ப்பொருளைப் பற்றி அவர்கள் ஐயம் திரிபு அற முடிவு கட்டினர்கள். அதாவது உண்மையில் ஒரு பொருள்தான் இருக்கிறது. அப்பொருளை ஐம்பொறிகள் வாயிலாகவும், மனதின் வாயிலாகவும் அறியும்பொழுது அது இயற்கை என்னும் பெயர் பெறுகிறது. அந்த இயற்கையோடு தூய, இனிய இணக்கம் வைப்பதால் ஐம்பொறிகள் பண்படுகின்றன; மனது தெளிவு

அடைகின்றது. பண்பட்ட இந்திரியங்களும், தெள்ளத் தெளிந்த மனதும் பிறகு ஞானக்கண்ணாக மாறிவிடுகின்றன. ஞானக்கண்கொண்டு காண்கின்ற பொருளும், பஞ்சேந்திரியங்கள் மூலமாக அறியும் பொருளும் வெவ்வேறானவைகள் அல்ல. ஒரே பொருள் இந்திரியங்களுக்குப் புலனாகும் பொழுது இயற்கை என்னும் பெயர் பெறுகிறது; ஞானக் கண்கொண்டு காணும்பொழுது தெய்வம் என்னும் பெயர் பெறுகிறது. ஆகவே, தெய்வம் வேறு, இயற்கை வேறு அல்ல.

இப்பொழுது நமது அமைப்பு இந்திரியங்களையும் மனதையும் கொண்டது. ஆதலால் இயற்கைதான் நமக்குப் புலப்படுகிறது. புலப்படுகின்ற இயற்கையைத் தெய்வமாகப் பாராட்டுவது முறை. ஏனென்றால் தெய்வந்தான் இந்த இயற்கையாகத் தோன்றிக் கொண்டிருக்கிறது. இதை தெய்வமாகக் கருதுமளவு பண்பாடு அடைகிறோம். நாம் மேலோராக மாறியமைதற்கும் அதுவே உற்ற உபாயம். தோன்றியுள்ள இயற்கையில் சூரியனைத் தெய்வமாகக் கருதுவது மிகப்பொருத்தமானது. ஏனென்றால் இயற்கைப் பொருளாக இருப்பதற்கிடையில் பரம்பொருளின் தன்மையையெல்லாம் நமக்கு விளக்கிக் காட்டுதற்கு இந்தச் சூரிய நாராயணனே மிகப் பொருத்தமானவன் ஆகின்றான். இவனுடைய அமைப்பைத் துணையாகக்கொண்டு நமக்கு விளங்காத பரம்பொருளை ஏகதேசம் விளங்கும்படி செய்து கொள்ளலாம். சூரியனிடத்து என்னென்ன மகிமைகளையெல்லாம் இப்பொழுது இருந்தபடி நாம் காணக்கூடுமோ அந்த மகிமைகள் யாவும் உண்மையில் பரம்பொருளிடத்து இருக்கின்றன. பரம்பொருளிடத்துள்ள மகிமையின் புறத்தோற்றம் என்றே சூரியப் பிரபாவத்தைப்பற்றிப் பகரலாம். மற்ற தெய்வங்களை வணங்கும்பொழுது அவர்களைப்பற்றி

மனதில் பாவிக்கின்றோம். மனதில் பாவிக்க இயலாதவர்களுக்கு விக்ரக ஆராதனை பயன்படுகிறது. விக்ரகங்கள் அல்லது சின்னங்கள் வாயிலாகத் தெய்வங்கள் வழுத்தப்படுகின்றன. மூலப்பொருள்களை ஞாபகமூட்டுவதற்குச் சின்னங்கள் அமைந்திருக்கின்றன. சின்னங்கள் தாமே மூலப்பொருள் ஆய்விடமாட்டா. சூரிய நாராயணனுடைய வழிபாட்டிலோ சின்னங்களுக்கு அவசியமில்லை. கோயில் ஒன்று கட்டி வைப்பதற்கும் அவசியமில்லை. கண்கூடாக சூரிய நாராயணன் வானத்தில் தென்படுகிறான். காலையிலும் உச்சி வேளையிலும் மாலையிலும் அவனை நேரில் பார்த்து வணங்குவது ஐதிகமாக இருந்து வருகிறது. வணங்க விரும்புகிறவர்களுக்கெல்லாம் அவன் நேரில் தென்படுவதால் அவனைக் கண்கண்ட தெய்வம் என்று பகர்வது பொருந்துகிறது.

## பெரிய பொருள்

மெய்ப்பொருளுக்குப் பிரம்மமென்பது பெயர். பெரியவைகளிலெல்லாம் பெரியது அது என்பது அதன் பொருள். தோன்றியுள்ள பிரபஞ்சமனைத்தும் தெய்வத்தில் அடங்கியிருப்பதால் தெய்வத்தைவிடப் பெரியது ஒன்றுமில்லை. நம் காட்சிக்கு எட்டாது தொலைவில் இருக்கிற பொருள் சிறியதாகத் தென்படுகிறது. அதன் அருகில் வருமளவு அதன் வண்ணம் நமக்கு நன்கு விளங்குகிறது. தெய்வத்தைப்பற்றி நாம் உள்ளபடி அறியுமளவு அது நம் அறிவுக்கு முழுதும் எட்டுவதல்ல என்பதும் புலப்படுகிறது.

சூரியநாராயணன் வெகு தொலைவில் இருக்கின்றான். ஆகையால் அவன் எவ்வளவு பெரியவன் என்பது நமக்குப் புலப்படுவதில்லை. அதைப்பற்றி நாம் எண்ணிப் பார்ப்பதும் கிடையாது. பூமிக்கும் சூரியனுக்கும் இடையிலுள்ள

தூரம் ஒன்பது கோடி மைலுக்குச் சற்று அதிகம். காலை யில் உதயமாகும்பொழுது தங்கத்தட்டுப் போன்று அவன் தென்படுகின்றான். உச்சி வேளையில் வண்ணத்தில் கொஞ் சம் சிறுத்தும் ஒளி நிறைந்தவனாகவும் காட்சிகொடுக்கிறான். அவனை உற்றுப் பார்க்க நமக்கு அப்பொழுது இயலுவதில்லை. அவன் எவ்வளவு பெரியவன் என்பதை நாம் யூகித்தறிவது அவசியம். அதற்கேற்றமுறை ஒன்றை இப்பொழுது கையாளுவோம். நாம் வசிக்கும் இப்பூமி நமக்கு மிகப்பெரி யது. நடந்து இதில் பயணம் போகின்றவர் இது எவ்வளவு பெரியது என்பதை நன்கு யூகிக்க முடியும். இதன் சுற்றளவு சுமார் இருபத்தையாயிரம் மைல். இதை அளவைபாகக் கொண்டு சூரிய பகவானுடைய வண்ணத்தை அளக்க முயன்று பார்ப்போம். சூரியனைப் போன்ற ஒரு கோளத்தை நாம் அளக்க முயலுவதாக வைத்துக்கொள்வோம். அதற் காகவென்று ஒருமணி நேரத்துக்கு ஒரு கூடை மண் கொட்டு கிறோம். அந்த ஒரு கூடை மண் நாம் வசிக்கும் பூமியின் அளவுடையது. இங்ஙனம் பல பூமிகளை எடுத்துக் கொட் டிக்கொண்டே போகின்றோம். ஒரு நாளில் இருபத்து நான்கு பூமிகளைக் குவிக்கிறோம். அப்படி ஓய்வின்றி அல் லும் பகலும் நூற்றைம்பது வருஷங்களுக்கு பூமிகளைக் கொட் டிக் குவித்துக்கொண்டே போனால் அது சூரியனுடைய வண் ணத்துக்குச் சமனாய்விடும். இதை எண்ணிப் பார்க்குங்கால் சூரியன் எவ்வளவு பெரியது, பூமி எவ்வளவு சிறியது என்பது ஒருவாறு விளங்கும். அந்தப் பெரிய பொருளி டத்திலிருந்து சிதறி வந்த ஒரு சிறுதுளி இப்பூவுலகம் ஆயிற்று. அப்படிச் சிதறி வந்தபொழுது அது அக்கினிக் குழம்பாய் இருந்தது. அது ஆறிக் குளிர்ந்து போவதற்கு நெடுங்காலம் எடுத்துக்கொண்டது. ஆயினும் பூமியின்

உட்பகுதி இன்றைக்கும் அக்கினிக் குழம்பாகவே இருக்கிறது. சில இடங்களில் அக்குழம்பு பூமியைப் பொத்துக் கொண்டு வெளியில் வரும்பொழுது அதை எரிமலை என்கின்றோம். பண்டு ஒரு காலத்தில் சூரிய சொருபமாயிருந்த பொருள் இன்றைக்கு பூமி சொரூபமாக ஆயிருக்கிறது. மூலப்பொருள் சூரியன். அதினின்று புதிய வடிவெடுத்த பொருள் பூமி. இதுதான் சூரியனுக்கும் பூமிக்கும் உள்ள தொடர்பு.

இதை உபமானமாக வைத்துக்கொண்டு கடவுளுக்கும் பிரபஞ்சத்துக்குமுள்ள தொடர்வை யூகிக்கலாம். மூலப் பொருள் கடவுள். அவரிடத்திலிருந்து காரியப்பட்டிருப்பது பிரபஞ்சம். அளப்பரியதும், அகண்டாகாரத்தில் விரிந்திருப்பதும் ஆகிய இப்பிரபஞ்சம் ஒரு பரம அணுப் போன்று அவரிடத்தில் ஒடுங்கக்கூடியது. அப்பெரிய பொருளின் ஒரு சிறிய தோற்றம் இப்பிரபஞ்சம். இந்த உண்மையை நாம் யூகித்து அறிந்துகொள்ளுதற்கு சூரியனிடத்திலிருந்து உண்டான பூமி விளக்கிக் காட்டிக்கொண்டிருக்கிறது. கடவுள் மிகப்பெரிய பொருள் என்பதை சூரியநாராயணன் பிரபஞ்ச மயமாய் இருந்து பிரத்யக்ஷமாக நமக்கு விளங்குவதால் அவனை நாம் வணங்கியாகவேண்டும்.

**சுயஞ்சோதியானது**

பரமாத்மாவிடமிருந்து வரும் பிரகாசம் ஒன்றே பிரபஞ்சம் முழுதுக்கும் ஒளி தருகிறது என்பது கோட்பாடு. பரமாத்மனையோ, அவனுடைய ஒளியையோ நமது ஊனக்கண்ணால் காணமுடியாது. ஆனால் பரமாத்மாவின் பிரதிநிதியாகப் பிரபஞ்சத்தில் இருப்பவன் சூரியநாராயணன். இவனுடைய பிரகாசத்தினின்று பரமாத்மப் பிரகாசத்தை நாம் யூகித்து அறிந்துகொள்ளலாம். சூரியன் உதிக்கிறான் என்

றும், மேகத்தில் மறைந்திருக்கிறன் என்றும், அஸ்தமனமா கிறன் என்றும் நாம் இயம்புகிறேம். உண்மையில் அவன் உதிப்பவன் அல்லன்; மேகம் அவனை மறைக்க முடியாது; அஸ்தமனம் என்பதும் அவனுக்கில்லை. நாம் வாழும் பூமி யில் ஏற்படும் மாறுதல்களை முன்னிட்டு சூரியனுக்குப் போக் கையும், வரவையும், மறைவையும் நமக்கு நாம் கற்பித்துக் கொள்கிறேம். எது தன்னைத்தானே விளக்கிக்கொள் கிறதோ, தன் வெளிச்சத்தால் மற்றப் பொருள்களையும் விளக்குகிறதோ அது சுயப்பிரகாசமுடையது. பூமியும் சந்திரனும் சூரியனிடத்திலிருந்து வந்தவைகள். ஆனல் இவைகளுக்கு சுயப்பிரகாசம் இல்லை. கடன் வாங்கிய வெளிச் சத்தால் இவைகள் ஒளிர்கின்றன. சூரியன் தானே வெளிச்ச மயமாய் இருந்துகொண்டு சந்திரனுக்கும், பூமிக்கும் வெளிச் சத்தைக் கொடுக்கின்றன். ஆகவே பிரபஞ்சப் பொருள் களுள் பரமாத்ம சொருபமாய் இருப்பவன் சூரியன் என்று சொல்லுவது முற்றிலும் பொருந்தும்.

சூரியனிடத்திலிருந்து கிளம்பி நாலா பக்கமும் பரவும் கிரணம் அளப்பரியது. கோடிக்கணக்கான மைல்களுக் கப்பாலிருக்கும் கிரகங்களுக்குச் சென்று அவன் வெளிச்சத் தைக் கொடுக்கிறன். ஓயாது வெளிச்சம் அவனிடத்தி லிருந்து போய்க்கொண்டிருக்கிறது. என்றலும் நந்தா விளக்கென்றே சூரிய நாராயணனை நவில வேண்டும். அணையா விளக்காகப் பரமாத்மன் இருப்பது போன்று சூரியனும் இருந்து வருகின்றன். பிரபஞ்சம் யாவும் பரம்பொருளில் தோன்றி அவன் சன்னிதானத்தில் நிலைத் திருந்து அவனிடத்திலேயே ஒடுங்குகின்றன என்று சாஸ் திரங்கள் சாற்றுகின்றன. அப்படிப் பிரபஞ்சம் ஒடுங்குங் கால் அப்பிரபஞ்சத்தின்கண் உள்ள சூரியனும் ஒடுங்கிவிடு

வான் என்பது உண்மை. ஆனால் நமது பூவுலக வாழ்வையும் சூரிய நாராயணனையும் சீர்தூக்கிப் பார்க்குங்கால் அவன் அழியாப்பொருள். அவனிடத்திலிருந்து வந்துள்ள பூவுலகும், பூவுலகில் வாழும் உயிர்களும் சிறிதுகாலம் நிலைபெற்றிருந்து விட்டுப் பின்பு அவனிடத்திலேயே ஒடுங்கிவிடுகின்றன. இக்கோட்பாட்டை விளக்குதற்கும் அவன் கண்கண்ட தெய்வமாகின்றான். தன்னுடைய வெளிச்சத்தைக் கொடுத்து பூவுலகம் போன்ற கிரகங்களை அவன் பாதுகாக்கின்றான். ஓய்வில்லாது அவனிடமிருந்து வந்துகொண்டிருக்கும் ஒளிக் கதிர்களால் உலகம் உய்வு பெறுகிறது. அளப்பரிய ஒளிக் கதிர்களை அவன் வாரிக்கொடுத்துக் கொண்டிருப்பதற்கிடையில் அவன் குறைவில்லா நிறைபொருள் ஆகின்றான். பரம்பொருள் பூரணன் என்னும் கோட்பாட்டைத் தெரிந்து கொள்ளுதற்கும் கதிரவனே எடுத்துக்காட்டு ஆகிறான்.

நாம் எரிக்கும் ஒரு சிறு தீபத்தின் வெளிச்சம் வீண் விரயம் ஆகாதிருத்தற்பொருட்டு அந்தத் தீபத்திற்குப் பின்புறம் பிம்பிப்புக் கண்ணாடி வைத்து வெளிச்சத்தையெல்லாம் நாம் வேண்டுமிடத்துக்குத் திரண்டு வரும்படி செய்கிறோம். ஓர் அண்டத்துக்கே விளக்கு ஆகிய சூரியன் என்னும் தீ। வெளிச்சத்துக்கு அப்படி யாரால் அணைகட்ட முடியும்? எல்லாத் திசைகளிலும் அதன் வெளிச்சம் சிதறியோடிக்கொண்டிருக்கிறது. நம் சிறிய உலகம் போன்றவை சூரியனிடத்திலிருந்து வாங்கிக்கொள்ளுகிற வெளிச்சம் மிகக் குறைந்தது. அளப்பரிய பகுதி வெட்டவெளியில் பரவி மறைந்துபோய் விடுகிறது. அதனால் சூரியனுக்கோ இயற்கைக்கோ ஒரு நஷ்டமும் இல்லை. அவன் அக்ஷரப் பொருள் என்பதற்கு அவனிடத்திலிருந்து வெளியாகிக்கொண்டிருக்கும் வெளிச்சமே எடுத்துக்காட்டாகிறது.

ஜீவர்களாகிய நம்மிடத்திலிருக்கும் ஆத்மப்பிரகாசம் பரமாத்மாவினுடையது. பரமாத்மாவுக்கு அன்னியமாக நமக்கு ஆத்ம ஒளி ஒன்றும் இல்லை. அவன் மூலப்பொருள்; அவனுடைய பிரதிகள் அல்லது தோற்றங்கள் நாம். நூல் ஆராய்ச்சியினின்று வந்துள்ள இக்கோட்பாடு நமக்கு நன்கு புலனாகாது. பரமாத்ம ஞானம் அடையப் பெற்றவர்களுக்கே இக்கோட்பாடு விளங்குகிறது. அதை அறிய முடியாத நமக்குப் பரமாத்ம சொருபமாக சூரியன் இருக்கின்றான். அந்தச் சூரியனிடத்திலிருந்து வாங்கிக்கொண்ட வெளிச்சத்தைக் கொண்டு சந்திரன் பிரகாசிப்பது போன்று ஜீவாத்மன் இருக்கிறான். சந்திரன் என்னும் உடலம் சூரியனிடத்திலிருந்து வந்தது. சந்திரிகை என்னும் பிரபாவமும் சூரியனிடத்திலிருந்து வந்தது. இக்காரணத்தை முன்னிட்டும் சூரியனைப் பிரத்யக்ஷ தெய்வமென்று பகரலாம்.

**சர்வ சக்திமான்**

கடவுள் எல்லாம் வல்லவர் என்று நாம் கேள்விப்படுகிறோம். இவ்வெண்ணம் நமது உள்ளத்தில் ஊறியிருக்கிறது. ஆயினும் அவர் எவ்விதத்தில் எல்லாம் வல்லவர் என்பது நமது சிற்றறிவுக்கு எட்டுவதில்லை. சூரியன் எல்லாம் வல்லவன் என்பது நமது சாமானிய அறிவுக்கும் புலனாகிறது. அவனிடத்திலிருந்து வெளிச்சம் எல்லாத் திசைகளிலும் விரிந்தோடுவது போன்று வெப்பமும் ஓயாது போய்க்கொண்டிருக்கிறது. வெப்பம் எல்லாம் வல்லது என்பதை நாம் கண்டறிந்து கொள்ள முடியும். கோடிக்கணக்கான வருஷங்களாக ஓய்வின்றி அவனிடத்திலிருந்து வெப்பம் வெளிக்கிளம்பிக் கொண்டிருக்கிறது. இன்னும் பல்கோடி வருஷங்களுக்கு அதே பாங்கில் அது போய்க்கொண்டிருக்கும். ஒரு கணப்பொழுதில் எவ்வளவு வெப்பம் போகிறது என்பதை

பௌதிக விஞ்ஞானிகள் ஒருவிதத்தில் கணக்கெடுத்துச் சொல்லுகின்றனர். பூமியிலிருந்து சூரியன் வரையில் உறை பனி ஸ்தம்பம் ஒன்று நிற்கிறது என்று வைத்துக்கொள்ளு வோம். இந்த ஸ்தம்பத்தின் சுற்றளவு மூன்று மைல். அதன் உயரம் ஒன்பது கோடி மைலுக்கு மேலாகிறது. நாலாபக்க மும் சிதறி ஓடுகிற வெப்பத்தைச் சேகரித்து இந்த ஸ்தம்பத் தின்பால் திருப்பினுல் அது ஒரு கணப்பொழுதில் சுவறிப் போய் ஆவியாக மாறிவிடும். சூரிய நாராயணனுடைய வல்லமையை இதினின்று ஒரு சுமாராக நாம் யூகிக்க முடி யும். அவன் சொரூபத்தில் எத்தகைய வெப்பம் நிலேத்திருக் கிறது என்பதை அளவிடமுடியாது. அவனிடத்திருந்து கிர ஹங்கள் சில வெளிக் கிளம்பி வந்து ஆறிப்போய் இருக்கின் றன. அவைகளே நவக்கிரஹங்கள் என்கின்ருேம். பூமி, வியாழன், சனி ஆகிய இந்த கிரஹங்களேயெல்லாம் திரும்ப வும் எடுத்து சூரியன் என்கின்ற உலேக்குள் போட்டால், ஒரு நொடிப்பொழுதில் இவைகள் யதாஸ்தானத்தை அடைந்து விடும். பண்டொரு காலத்தில் இருந்தபடி இவைகள் இமைப் பொழுதில் அக்கினிக் குழம்பு ஆய்விடும். அதன் வெப்பம் எத்தகைய உச்சநிலேயில் இருக்கிறது என்பதை எந்தக் கருவியைக் கொண்டும் நாம் அளக்கமுடியாது. சூரிய நாரா யணனிடத்துள்ள சூடு எவ்வளவு பெரியது என்பதை சூரி யனே அறிவான்.

நமக்கு சூரியன் மிக எட்ட இருக்கிருன். ஆனுல் ஒவ்வொரு நொடிப்பொழுதிலும் நமக்கு உயிர்த் தத்துவம் அவனிடமிருந்து வந்து கொண்டிருக்கிறது. சூரியனுடைய ஆதிக்கம் இல்லாது போய்விட்டால் நமது கதி என்னவாகும் என்பதை இப்பூவுலகமே விளக்கிக் காட்டிக்கொண்டிருக் கிறது. கோடையில் அவன் வெப்பத்தைச் சகிக்க முடியாது.

நாம் நெடுநேரம் மகிழ்ந்து நீராடுகிறோம். அந்த நீரினுள் உள்ள வெப்பம் மிகச் சாமான்யமானது. நமது உயிர் வாழ்க்கைக்கு ஏற்றது. ஆகையால் நாம் மகிழ்வுறுகிறோம். ஆனால் வடதுருவம் அல்லது தென் துருவத்தில் இருக்கும் நீரினுள் நாம் ஒரு நிமிஷம் இருந்தால் உயிர் போய்விடும். உறைபனியினுள் நாம் அகப்பட்டுக் கொண்டாலும் சிறிது நேரத்துக்குள் உயிர் துறந்து விடுவோம். உறைபனி என்பது சூரிய வெப்பம் சிறிதேனும் இல்லாத நீர் எனப் பொருள்படுகிறது. நீரினின்று உஷ்ணத்தை எல்லாம் நீக்கி விட்டால் அது உறைந்து கல்போன்று ஆய்விடுகிறது. அத்தகைய பனிக் கட்டிக்குள் அகப்பட்டுக்கொள்ளும் மனிதனும் உறைந்து உயிர் நீப்பவன் ஆவான். ஆக, இந்த மண்ணுலகிலே ஆதித்தியனுடைய ஆதிக்கம் இல்லாத இடம் அல்லது சூழ்நிலை நமது உயிர் வாழ்க்கைக்குத் தகுதியற்றது என்பது நிரூபிக்கப்படுகிறது. சூரியனுடைய வெப்பத்தால் தான் நாம் உயிர் வாழ்ந்திருக்கிறோம். கதிரவனிடமிருந்து வரும் கனல் வெவ்வேறு படித்தரங்களில் இருந்து நமது உயிரை ஓம்பி வருகிறது. நம் உடலில் உள்ள வெப்பம் அவனிடமிருந்து வந்தது. சரீரத்தில் கதகதப்பு இருக்கும்வரை நாம் உயிர் வாழ்கிறோம். சீதம் உடலெங்கும் பரவினால் உடனே மாய்ந்து போய் விடுகிறோம். நமது உயிரை ஓம்புவது வெப்பம் என்பது வெளிப்படை.

உணவை உண்டு உயிர் வாழ்கிறோம். பற்றி எரியும் தீக்கு விறகுக்கட்டை எப்படிப் பயன்படுகின்றதோ அப்படி நம் உடல் வாழ்வு என்னும் அனலுக்கு உணவு பயன்பட்டு வருகிறது. உணவு என்னும் விறகுக்கட்டையை நம் உடலம் என்னும் அடுப்பிலுள்ள வைச்வானரன் அல்லது ஜடராக்னிக்கு ஊட்டி வருகிறோம். இந்த உணவை ஏற்று

வைச்வானர அக்கினி வளர்ந்து வருகிறது. அது நிலைபெற்றிருக்கும் பரியந்தம் நாம் உயிர் வாழ்கிறோம். நாம் உண்ணும் உணவு சூரிய வெப்பத்தால் உண்டானது. சூரிய வெப்பம் இல்லாத பனிப்பிரதேசத்தில் மரம் செடி கொடிகள் வளரமாட்டா. உணவுப் பொருள் ஆங்கு உண்டாவதில்லை என்பது அதன் பொருள். உணவில்லாவிட்டால் உயிர் இல்லை. ஆக, சூரிய உஷ்ணம் பரவாத இடத்தில் உயிர் வாழ்க்கை இல்லை என்பது வெளிப்படை. அத்தகைய குளிர் பிரதேசங்களில் மக்கள் சென்று வாழ்கின்றார்கள். ஆங்கு விறகுக்கட்டை, உணவுப்பொருள்கள் முதலியவைகளை எடுத்துச் செல்கின்றார்கள். அப்படி அவர்கள் எடுத்துச் செல்லும் உணவு, விறகுக்கட்டை ஆகிய இவை யாவும் வேற்றுருவெடுத்த சூரிய வெப்பமேயாம். அந்த வெப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டிருக்குமளவு நாம் உயிர் வாழ முடியும். சமைப்பதற்கு விறகுக்கட்டை வேண்டுமென்கிறோம். அது அக்கினியாக உருவெடுக்கிறது. இந்த அக்கினி என்பது புதிய உருத்தாங்கிய சூரிய வெப்பமாம். பூமிக்குள்ளிருந்து நிலக்கரி எடுத்துத் தீ மூட்டுகிறோம். இது முன்பொரு காலத்தில் சூரியனிடத்திருந்து வந்த உஷ்ணம்; இப்பொழுது இந்த வடிவத்தில் நமக்குக் கைவசமாகிறது. மண்ணுக்குள்ளிருந்து எண்ணெயை எடுத்து அடுப்பு எரிக்கிறோம். உயிர் வாழ அது உதவுகிறது. இந்த எண்ணெய் முன்பொரு காலத்தில் சூரியனிடத்திருந்து வந்த வெப்பம். பூமியில் நாம் எங்குத் திரும்பி எப்பொருளைப் பார்த்தாலும் அது சூரிய வெப்பத்தின் வெவ்வேறு விளையாட்டாக வந்தமைகிறது. சூரிய வெப்பமின்றி நமக்கு உயிர் வாழ்க்கை இல்லை. மரம் செடி கொடிக்கு வாழ்வு இல்லை; விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் வாழ்வு இல்லை. உயிர்

வாழ்வே இல்லாது போய்விடுகிறது. இதையெல்லாம் கண் கூடாகப் பார்த்துவரும் நாம் சூரியனைச் சர்வசக்திமான் என்று ஏன் பகரலாகாது?

**சொரூப லக்ஷணம்**

சூரியனை விஸ்வரூபியாகிய விராட் புருஷனுடைய கண்களினின்று கிளம்பி வந்தவன் என்று பகர்வதுண்டு. அந்த ஆதி புருஷனுடைய நேத்திரம் சூரியன் என்று பகர்வதும் உண்டு. பின்பு இத்தெய்வம் நமது கண்களுக்கும் அதிஷ்டான தெய்வமாக இருக்கின்றான். நாராயணன் என்னும் சொல்லுக்குப் பொருள் தன்னிடத்திருந்தே உண்டுபண்ணிய பிரபஞ்சத்தின்கண் நீக்கமற எழுந்தருளியிருப்பவன் என்பதாகிறது. சிலந்திப்பூச்சி தன் உடலிலிருந்து உண்டுபண்ணிய வலையின்மீது வீற்றிருப்பதுபோன்று புருஷோத்தமன் தன்னிடத்திருந்து தோன்றிய ஜகத்தினுள் ஊடுருவியிருக்கின்றான். சூரியநாராயணன் தானே தனக்கேற்ற ரதம் ஆகின்றான். அந்த ரதத்தை இழுத்துச் செல்லும் குதிரைகளாகவும் அவனே இருக்கின்றான். ஓட்டும் சாரதியாயிருப்பவனும் அவனே. அதனுள் எழுந்தருளியிருக்கும் தலைவனும் அவனே. அவன் ஊர்ந்து செல்லும் ரதத்துக்கு ஒற்றைச் சக்கரம் அமைந்திருக்கின்றது. விண்ணில் நாம் காணும் பரிதி ஒற்றைச் சக்கரமாகத்தானே இருக்கின்றான்? ஒற்றைச் சக்கரத்தையுடைய அவனுடைய ரதம் விண்ணுலகெங்கும் ஓயாது ஓடிக்கொண்டிருக்கிறது. உண்மையில் ஓடாத பொருளாகிய அவன் நம் பொருட்டு ஓடுபவன் போன்று காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறான். சூரியனைப்பற்றிய உண்மையும் இதுவே. கிரகங்கள் அவனை வலம் வந்து கொண்டிருக்கின்றன. பூமி செய்கின்ற செயலும் அதுவே. உண்மையில் சுற்றிவருவது பூமி. ஆனால் சூரியன் சுற்றிவரு

வது போன்று நமக்குத் தென்படுகிறது. ஒரு பொருளின் காட்சி மெய்க்காட்சியாக நம் இந்திரியங்களுக்கு அமைவ தில்லை என்பதற்கு இது சான்றாகும். தனது ரதத்துக்கு ஏழு குதிரைகளை அவன் பூட்டியுள்ளான். அவையாவும் பச்சை நிறமானவைகள் என்பது ஐதிகம். பச்சை நிறம் செழுமைக்கு அறிகுறியாக அமைகிறது. சூரியநாராயண னிடத்திருந்து வரும் வெளிச்சம் ஏழு நிறங்களாகச் சிதறடை யும் தன்மை உடையது. வானவில் ஏற்படும்பொழுது இவ் வுண்மையை நாம் காண்கிறோம். அதில் ஏழு நிறங்களைக் காணலாம். அவ்வேழினுள் செழுமை உண்டு. இக்கோட் பாட்டைத்தான் குதிரைகள் பச்சையாய் இருந்து காட்டி வருகின்றன. சூரிய கிரணங்கள் செல்லுமிடமெங்கும் ஏழு நிறங்கள் போகின்றன. கவிதை நிறைந்த சான்றோர் இக் கோட்பாட்டைக் குதிரைகளாக உருவகப்படுத்தி அமைத் திருப்பது வியக்கத்தக்க விஷயமாகும். மேலும் வெளிச்சம் ஞானத்தின் சின்னமாகும். பொருளை உள்ளபடி விளக்க வல்லது ஒளி. ஒளியற்ற இடம் இருள் நிறைந்ததாகின்றது. இருளில் மறைந்து கிடப்பவைகளெல்லாம் பிரளயத்தில்ஒடுங் கியவைகள் போன்று தம் பாகுபாட்டை இழந்துவிடுகின்றன. வெளிச்சம் வந்ததும் பொருள் உள்ளபடி தென்பட ஆரம் பித்துவிடுகிறது. ஏழு நிறங்களும் ஒரு பொருளுக்கு ஏழு விதச் செழுமை தர வல்லவை. இன்னும் ஞான பூமிகள் ஏழு இருக்கின்றன என்றும் சான்றோர் பகர்கின்றனர். ஒரேமெய்ப்பொருள் ஒவ்வொரு ஞான பூமியிலும் ஓர் அலாதி சோபையுடன் மிளிர்கிறது. ஏழுவித அழகுகளையும் தொகுத்துணரும்பொழுதே பொருள் முழுதையும் உணர் பவர் ஆகின்றோம். ஏழுவித ஞான நிலையையே ஏழு பிறப்பென்றும் பகர்வதுண்டு. சூரியநாராயணனுடைய ஏழு

குதிரைகளில் இத்தனை கோட்பாடுகளும் அடங்கியிருக்கின்றன.

இந்த ரதத்தை ஓட்டுபவனுக்கு பூஷன் அல்லது அருண சாரதி என்று பெயர். அவனுடைய உடலமைப்பு அலாதியானது. இடுப்புக்குக் கீழ் அவனுக்கு உடலமைப்பு ஒன்றும் கிடையாது. ரதத்தில் உட்கார்ந்திருப்பது, குதிரைகளை ஓட்டுவது ஆகியவைகள் அவன் செயலாகும். சூரியனுடைய பிரபை சர்வகாலமும் சூரியனிடத்திலேயே அமைந்திருக்கிறது; அவனுடைய பிரபை அவன் முன்னிலையில் அமர்ந்திருந்துகொண்டு கிரணங்களையெல்லாம் வெவ்வேறு திசைகளில் ஓட்டுகிறான் என்பதுவே இதன் பொருளாகும். சூரியப் பிரகாசத்தில் நாம் காணும் காட்சியும் இதுவே. அவனுடைய பெருமைக்குக் கவிதையானது இத்தகைய உருவகத்தை அமைத்திருக்கிறது.

ரதத்தினுள் எழுந்தருளியிருப்பவன் சூரிய நாராயணன். தனக்குரிய சங்கு சக்கரங்களை அவன் ஏந்தியுள்ளான். பிரபஞ்சம் யாவும் அவனிடத்திருந்து வந்தவைகள் என்பதைச் சங்கு சுட்டிக்காட்டுகிறது. சப்தப் பிரம்மத்திலிருந்தே ஜகத் அனைத்தும் உண்டாயிற்று. அங்ஙனம் தோன்றியுள்ள பிரபஞ்சம் அவன் ஆணையால் ஒழுங்குப்பாட்டுடன் இயங்குகிறது. சூரிய பகவான் ஏந்தியுள்ள சக்கரம் அக்கோட்பாட்டை விளக்குகிறது. ஹிரண்மயமான தேஜஸ் உடையவன் அவன். பொன்னார் மேனியன் என்பது அதன் பொருள். அவனிடத்திருந்து ஒளிரும் பிரபாவத்தை உயிர்கள் அனைத்தும் சார்ந்திருக்கின்றன. இருளைப் போக்குபவன் அவன். மண்ணுலகுக்கும் விண்ணுலகுக்கும் அவன் வெளிச்சம் கொடுக்கின்றான். அவ்விரண்டுக்கும் இடையிலுள்ள அந்தரிக்ஷத்திற்கும் அவன் வெளிச்சம் தரு

கிறான். தேவர்களுக்கு அமிர்தத்வத்தைக் கொடுப்பவன் அவன். மானுடர்க்கு தீர்க்காயுளைக் கொடுப்பவனும் அவனே. பத்துத் திசைகளையும் பார்க்கும் கண்ணுடையவன் அவன். அவன் காட்சிக்கு எட்டாத இடமில்லை. தோன்றிய யாவும் அவன் கண்காணிப்பில் இருக்கின்றன. உயிர்கள் அனைத்தின் செயலுக்கும் அவன் சாட்சியாய் இருக்கின்றான். மாந்தர் புரியும் நல்வினை, தீவினை ஆகிய வினைகள் அனைத்தையும் அவன் கண்டுகொண்டிருக்கின்றான். தூங்கிக்கொண்டிருப்பவர்களைத் தட்டியெழுப்ப வருபவன் அவன். வினையாற்றாது கிடப்பவர்களை வினையில் தூண்டுபவனும் அவனே. வெவ்வேறு பொருள்களைத் தேடும் பொருட்டு மானுடர்க்கு அவன் உற்சாகமூட்டுகிறான். நோயை விரட்டியோட்டும் வல்லமை அவனுக்குண்டு. பிணி ஒன்றும் வராது தடுப்பவன் அவன். கெட்ட அணுக்களைக் களைபவனும் அவன்.

அபயம் அல்லது எதற்கும் அஞ்சாத் தன்மையை நல்குபவன் நாராயணன் என்பது கோட்பாடு. உயிர் வாழ்பவைகளை அச்சத்தினின்று ஆதரிப்பவனே ஆதித்தியனாக விளங்குகிறான். இருள் சூழ்ந்து கிடக்கும் பொழுது உயிர்கள் என்னென்னவோ எண்ணி அஞ்சுகின்றன. அவைகள் உள்ளத்தில் பீதி நிறைந்துகிடக்கின்றது. ஆனால் சூரியோதயம் ஆகும்பொழுது அச்சம் தவிர்க்கப்படுகிறது. பொழுது புலர்ந்து புதிய உயிரை ஊட்டுகிறான். உறுதிப்பாடு தானே வருகிறது. ஆக, அபயம் கொடுப்பவன் ஆதித்தியன் என்று அழைக்கப்படுகிறான். தெய்வத்துக்குக் காலஸ்வரூபன் என்றும் மற்றொரு பெயர் உண்டு. அதை நாம் கண்கூடாகக் கதிரவனிடத்துக் காண்கிறோம். அவன் துணையில்லாவிட்டால் காலத்தை அளப்பதற்கு நமக்கு இயலாது. வேளையை அல்லும் பகலுமாக நாம் அளப்பதற்கு அவன் பெருந்துணை

புரிந்து வருகின்றான். ஆக, அவனையே காலஸ்வரூபன் என்று பகர்வது பொருந்தும். தோன்றியுள்ள உலகனைத்துக்கும் அவன் பொதுநிலை வகிக்கின்றான். நல்லார்மீதும், பொல்லார்மீதும் அவன் பிரகாசத்தைப் பொதுவாகப் பொழிகிறான். உற்சாகம் ஊட்டுதலிலும் அவன் ஒரே பாங்குடையவனாக இருக்கின்றான். யார் எத்தொழில் புரிந்திடினும் அதற்கேற்ற ஆற்றல் அவனிடத்திருந்தே வந்துகொண்டிருக்கிறது. பாபச்செயல் புரிகின்றவர்களைச் சிறிது சிறிதாகப் பண்படுத்திப் புண்ணியவான்களாக அவன் மாற்றியமைக்கின்றான். நெடுங்காலத்துக்குப் பிறகாவது பாபிகளைப் புண்ணியவான்களாக மாற்றும் செயலை வெற்றிகரமாக அவன் முடித்து வைக்கிறான். அந்த அளவில் அவனை ஜீவர்களுக்கெல்லாம் வரம்கொடுப்பவன் என்று பகரலாம். மனத்தகத்து உதிக்கும் துச்ச எண்ணங்களே பேய், பிசாசு என்னும் பெயர் பெறுகின்றன. சூரியனுடைய சான்னித்தியத்தில் அத்தகைய கீழான எண்ணங்கள் பெரிதும் தவிர்க்கப்படுகின்றன. நல்லெண்ணங்களையே அவன் ஓயாது தூண்டுகின்றான். இப்படி உயிர்களைப் பண்படுத்துதல் அவனுடைய சோர்விலாத செயல்.

### சௌர மதம்

ஆறு சமயங்களுள் சௌர மதம் என்பது ஒன்று. சூரியனை முழுமுதல் தெய்வமாக வணங்குபவர் சௌர மதத்தவர் ஆகின்றனர். இன்றைக்கு இந்தியாவில் மற்ற ஐந்து மதங்களும் மக்கள் தொகையில் உருவெடுத்திருப்பது போன்று சௌர மதத்தினரின் தொகையைக் கண்டுபிடிக்க முடியாது. சூரிய வெளிச்சம் எல்லாத் திசைகளிலும் பரவி மற்ற பொருள்களில் பொருந்திவிடுவது போன்று சௌர மதம் மற்ற எல்லா மதங்களுக்குள்ளும் அந்தர்தானமாய்

விட்டது. ஆக சூரியனை வணங்குவது ஹிந்துக்கள் அனைவர்க்கும் பொதுவானது. உலக முழுதுமே ஏதேனும் ஒருவிதத்தில் சூரியனைப் போற்றி வருகிறது. கடவுள் என்று கருதினல்தான் அவர் போற்றப்படுகிறர் என்பது உண்மையல்ல. நமக்குப் பயன்படும் பொருள், நமக்கு உயிர்கொடுக்கும் பொருள் இப்படியெல்லாம் கருதி ஏதேனும் ஒன்றைப் பாராட்டினல் அப்பாராட்டுதலுக்கும் ஆராதனை என்று பெயர். ஏதேனும் ஒருவிதத்தில் உயிர்களெல்லாம் சூரியனை ஆராதித்து வருகின்றன.

சூரியனுக்குரிய மந்த்ரம் காயத்ரீ என்னும் பெயர் பெறுகிறது. வேதத்திலுள்ள மந்த்ரங்களிலெல்லாம் மிக மிகப் பவித்திரமானது காயத்ரீ. காயத்ரீ மந்த்ரங்கள் பல இருக்கின்றன. ருத்ர காயத்ரீ, தேவி காயத்ரீ, விஷ்ணு காயத்ரீ—இப்படியெல்லாம் அவைகள் பெயர் பெறுகின்றன. அவைகளுள் முதன்மை பெறுவது சூரிய காயத்ரீ. இந்தியாவில் காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரி பரியந்தம் சூரிய காயத்ரீயை ஜபிப்பவர்களையும், தியானிப்பவர்களையும் ஏராளமாகக் காணலாம். எல்லா சமயத்தவர்களுக்கும் இது பொதுவானது. ஒரு மரம் முழுதும் விதையில் அடங்கியிருப்பது போன்று வேதங்கள் யாவும் காயத்ரீயில் அடங்கியிருக்கின்றன. ஆதலால் காயத்ரீயை வித்து என்றும் வேதங்களை விருக்ஷம் என்றும் பகரலாம். சூரிய காயத்ரீ இங்ஙனம் அமைந்துள்ளது.

ओं भूर्भुवःसुवः
ओं तत् सवितुर्वरेण्यं
भर्गो देवस्य धीमहि ।
धियो यो नः प्रचोदयात् ॥

यः யः யார்; नः நः நம்முடைய; धियः தியः அறிவை; प्रचोदयात् ப்ரசோதயாத் தூண்டுகிறாரோ; तत् தத் அந்த; देवस्य தேவஸ்ய சுடருடைய सवितुः ஸவிதுः கடவுளின்; वरेण्यं வரேண்யம் மேலான; भर्गः பர்கः ஒளியை; धीमहि தீமஹி தியானிப்போமாக.

யார் நம் அறிவைத் தூண்டுகிறாரோ அந்தச் சுடர்க் கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக.

அது ஓங்காரம் அல்லது பிரணவத்தில் துவங்குகிறது. பூ: புவ: ஸுவ: என்னும் மூன்று பதங்களும் பூலோகத்தையும், மத்தியலோகத்தையும், சுவர்க்கலோகத்தையும் குறிக்கின்றன. பகிர்முகமாகப் பிரபஞ்சத்தைப் பார்க்குங்கால் இந்த மண்ணுலகத்தையும், வெட்டவெளியையும், அதற்கு மேலாயிருக்கும் வானுலகையும் இவை குறிக்கின்றன. மனிதனுடைய அமைப்பை ஆராயுங்கால் அவனிடத்து மூன்று நிலைகள் மாறி மாறி நாள்தோறும் அமைந்து வருகின்றன. விழிப்பு அல்லது ஜாக்கிரதாவஸ்தையை பூலோகம் குறிப்பிடுகின்றது. கனவு காணும் நிலையை புவர்லோகம் குறிக்கிறது. சுஷுப்தி அல்லது கனவற்ற நித்திரையை சுவர்லோகம் சுட்டிக் காட்டுகிறது. இந்த மூன்று அவஸ்தைகளுள் ஏதேனும் ஒன்றில் மனிதன் மாறி மாறி அமைந்துள்ளான். தத் என்னும் சொல் நாம் வணங்கும் தெய்வத்தைக் குறிக்கிறது. புறத்தில் அதை சூரிய நாராயணன் என்று சுட்டிக்காட்டலாம். அகத்தே அது பிரக்ஞானம் அல்லது பேர் அறிவு சொரூபமாக இருக்கிறது. யாரோ சிலருடைய உள்ளத்தில் தான் இருக்கிறது; மற்றவர்களுடைய உள்ளத்தில் அது இல்லை என்று யாரும் இயம்ப முடியாது. ஜீவகோடிகள் அனைத்தினுடைய உள்ளத்திலும் அது சர்வ

சாக்ஷியாக அமைந்திருக்கிறது. தேவஸ்ய ஸவிது: என்னும் சொற்றொடரில் தேவஸ்ய என்பது பெயர் உரிச்சொல்லாய் இங்கு அமைந்திருக்கிறது. சுடருடைய என அது பொருள் படுகிறது. தேவ என்னும் சொல்லுக்கு அது ஆரும் வேற்றுமை. எது திவ்யமானதோ அது தேவன். சுடர்விட்டுக் கொண்டிருக்கும் பொருள் ஒன்று தேவன் என அழைக்கப் படுகிறது. புறஉலகில் சதா சுடர்விட்டுக் கொண்டிருக்கும் பொருள் சூரியன். நமது சொரூபத்தில் ஆத்மன் சதா சுடர் விட்டுக் கொண்டிருக்கின்றது. சுடரில்லாத சூரியன் இல்லை. பிரகாசமில்லாத ஆத்மனும் இல்லை. ஸவிது: என்பது கடவுளின் எனப் பொருள்படுகிறது. ஸவித்ரு என்னும் பதத்தின் ஆரும் வேற்றுமையாக ஸவிது: என்பது அமை கிறது. இருக்கின்ற அனைத்தையும் ஸவித்ரு தேவதை தோற்றுவித்தது எனப் பொருள்படுகிறது. நாம் வசிக்கும் உலகத்தையும் அதிலுள்ள உயிர்களையும் தோற்றுவித்துள்ள பிரபஞ்ச சொரூபமான தெய்வம் சூரியன். பிரபஞ்சத்துக்கு அப்பால் இருக்கும் பரமாத்மன் பிரபஞ்சத்தையே தோற்று விக்கும் பொருள் ஆகிறான். நமக்கு அவன் அந்தராத்மாவா யிருந்து நம்மைத் தோற்றுவித்திருக்கிறான். பாம்பு தன்மேல் சட்டையை ஒன்றன்பின் ஒன்றாகத் தோற்றத்துக்குக்கொண்டு வருகிறது. சட்டையைக் களைவதால் பாம்பின் சொரூபம் கெட்டுப்போய் விடுவதில்லை. ஆத்மா அங்ஙனம் தேகத்தைத் தோற்றுவிக்கிறது. எத்தனை தேகங்களை வேண்டுமானாலும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோற்றுவிக்க வல்லது அது. விதை யானது மரத்தைத் தோற்றுவித்துவிட்டு தான் மரத்தில் மறைந்து விடுகிறது. ஆனால் பரமாத்மன் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து விட்டு அவன் பிரபஞ்சத்தில் லயமாய்விடு பவன் அல்லன். சனாதன பீஜமாய் இருந்து உலகனைத்தை

யும் உண்டுபண்ணிக் கொண்டே வருகிருன். அதனுல் அவனுடைய சொருபத்துக்கு ஒருவிதமான குறையும் வந்துவிடுவதில்லை. அத்தகைய பொருளை ஸவித்ரு என்னும் பெயர் குறிக்கிறது. தேவஸ்ய—ஸவிது: = அத்தகைய தெய்விகப் பொருளின்; வரேண்யம் பர்க: = மேலான ஒளியை; தீமஹி = தியானிப்போமாக. எது விரும்பி வேண்டப்படுகிறதோ அது வரேண்யம் எனப்படுகிறது. சூரியனுடைய உதயத்தை எல்லாரும் விரும்பி வேண்டுகின்றனர். இது வந்துவிட்டதே என்று நொந்துகொள்வார் யாருமில்லை. கோடைக் கதிரவன் வெண்கதிர் வீசி உலகத்தைக் காய்ச்சுவதும் வேண்டப்படுகிறது. அப்படி உலகம் காய்வது மழை வருவதற்கு ஏதுவாகிறது. ஆக, சூரியன் எந்த நிலையில் இருப்பினும் அவன் வரன் அல்லது விரும்பப்படுபவன் ஆகின்ருன். பர்க: என்பது அவனுடைய பிரகாசம். சூரியனை அவனுடைய பிரகாசத்தினின்று பிரித்துவைக்க முடியாது. சூரியப்பிரகாசம் உலகிலுள்ள கேடுகளை அகற்ற வல்லது. அக்ஞான இருளை அது நீக்குகிறது. இதை நாம் கண்கூடாகக் காண்கின்ருேம். ஆனுல் நமக்குக் கட்புலனுகாது நமது உள்ளத்தினுள் வரேண்யம் பர்க: என்னும் போற்றுதற்குரிய பொருள் ஒன்று ஒளிர்ந்துகொண்டிருக்கிறது. அத்தகைய மேலாம் சொருபத்தைப் போற்ருத உயிர் பிரபஞ்சத்தில் இல்லை. எடுத்திருக்கும் உடல் எதுவாயினும் அவ்வுடலில் எழுந்தருளியிருக்கும் ஆத்ம சொருபம் தன்னுலேயே போற்றப்படுகிறது. தனது ஆத்ம மகிமையைத் தானே உணருங்கால் அது தியானம் எனப்படுகிறது. நமது மேலாம் இயல்பை நாம் எண்ணி அதில் நிலைத்திருக்கும்பொழுது அது தியானம். அத்தகைய தியானத்தால் நமக்கு ஆத்ம வளர்ச்சி உண்டாகிறது. ய: ந: திய: ப்ரசோ

தயாத்—யார் நம்முடைய அறிவைத் தூண்டுகிறாரோ என்பது இந்தச் சொற்றொடரின் பொருள் ஆகும். சூரிய வெளிச்சம் வருவதால் ஸ்தாவரம், ஜங்கமம் ஆகிய எல்லா உயிர்களும் நல்வாழ்வைப் பெறுகின்றன. அவைகளின் வளர்ச்சிக்கும் சூரியப் பிரகாசமே முதற்காரணமாகிறது. அங்ஙனம் அறிவு சொரூபமாகிய நமக்கு உள்ளிருக்கும் ஆத்மப் பிரகாசம் நமது அறிவை மேன்மையில் தூண்டுகிறது. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய புருஷார்த்தங்கள் நான்கையும் பெறும்படி நம்மைத் தூண்டுவது நமது ஆத்ம சொரூபம். நமது உள்ளிருக்கும் மெய்ப்பொருளே நம்மை ஓம்புகிறது. அம்மெய்ப்பொருளை நாடியிருக்குமளவு நமது ஆத்ம வளர்ச்சி விரைவில் வந்தமைகிறது. இது தான் நமது வாழ்க்கையைப்பற்றிய பேருண்மை. இதை அறிந்து முயலுபவன் ஆத்மசாதகன் ஆகிறான். பரிபூரணத்தின்கண் அவன் விரைந்து செல்கின்றான்.

---

## அர்ச்சனைக்குரிய நாமங்கள்

1. ओं सूर्याय नमः — ஓம் ஸூர்யாய நம:
   சூரியன்—செயலில் தூண்டுபவன்
2. ,, अर्काय नमः — ஓம் அர்காய நம:
   அர்க்கன்—போற்றுதற்குரியவன்
3. ,, आदित्याय नमः — ஓம் ஆதித்யாய நம:
   ஆதித்யன்—தேவர்க்கெல்லாம் தேவன்
4. ,, अमृताय नमः — ஓம் அம்ருதாய நம:
   அமிர்தம்—சாகா மருந்து
5. ,, जगदेकचक्षुषे नमः — ஓம் ஜகதேகசக்ஷுஷே நம:
   ஜகதேகசக்ஷுஸ்—ஜகத்துக்கு ஒரு கண்

6. ओं जगदात्मने नमः ஓம் ஜகதாத்மனே நம:
ஜகதாத்மன் — உலகுக்கு உயிர்

7. ,, मित्राय नमः ஓம் மித்ராய நம:
மித்ரன்—அனைவர்க்கும் அன்பன்

8. ,, तपनाय नमः ஓம் தபனாய நமः
தபன்—காய்ச்சுபவன்

9. ,, कालकारणाय नमः ஓம் காலகாரணாய நமः
காலகாரணன் — காலத்தை உண்டுபண்ணுபவன்

10. ,, दिवाकराय नमः ஓம் திவாகராய நம:
திவாகரன்—பகல் செய்பவன்

11. ,, भास्कराय नमः ஓம் பாஸ்கராய நம:
பாஸ்கரன் — ஒளியை உண்டுபண்ணுபவன்

12. ,, खगाय नमः ஓம் ககாய நம:
ககன் — வானத்தில் சஞ்சரிப்பவன்

13. ,, रवये नमः ஓம் ரவயே நம:
ரவி—மாறுதல் ஆக்குபவன்

14. ,, हंसाय नमः ஓம் ஹம்ஸாய நம:
ஹம்ஸம்—ஆத்மன், பரமாத்மன்

15. ,, पूष्णे नमः ஓம் பூஷ்ணே நமः
பூஷ்ணன்—அனைத்துக்கும் உணவு ஊட்டுபவன்

16. ,, ज्योतिषे नमः ஓம் ஜ்யோதிஷே நம:
ஜ்யோதிஷ் — வெளிச்சம்

17. ,, हिरण्यगर्भाय नमः ஓம் ஹிரண்யகர்பாய நம:
ஹிரண்ய கர்பன் — அனைத்தையும் தன்னகத்து அடக்கியவன்

18. ओं विश्वजीवनाय नमः ஓம் விச்வஜீவனாய நம:
விச்வஜீவன்—உலகம் முழுதுக்கும் உயிர்

19. ,, सहस्रभानवे नमः ஓம் ஸஹஸ்ரபானவே நம:
ஸஹஸ்ரபானு—அளப்பரிய ஒளி

20. ,, मरीचये नमः ஓம் மரீசயே நம:
மரீசி—கதிரையுடையவன்

21. ,, सवित्रे नमः ஓம் ஸவித்ரே நம:
ஸவித்ரு—உண்டுபண்ணுபவன்

22. ,, प्रत्यक्षदेवाय नमः ஓம் ப்ரத்யக்ஷதேவாய நம:
ப்ரத்யக்ஷதேவன்—கண்கண்ட தெய்வம்

23. ,, दशदिक्संप्रकाशाय नमः ஓம் தசதிக் ஸம்ப்ரகாசாய நம:
தசதிக் ஸம்ப்ரகாசன்—பத்துத் திக்குகளிலும் வெளிச்சம் [கொடுப்பவன்

24. ,, कर्मसाक्षिणे नमः ஓம் கர்ம ஸாக்ஷிணே நம:
கர்மஸாக்ஷி—செயல்களைப் பார்த்துக்கொண்டிருப்பவன்

25. ,, अंशुमालिने नमः ஓம் அம்சுமாலினே நம:
அம்சுமாலின்—கதிர்மாலையை உடையவன்

26. ,, प्रभाकराय नमः ஓம் ப்ரபாகராய நம:
ப்ரபாகரன்—பிரபையை உண்டுபண்ணுபவன்

27. ,, सूर्यनारायणाय नमः ஓம் சூரியநாராயணாய நம:
சூரிய நாராயணன்—செயலில் தூண்டும் கடவுள்.

---

# 3. அம்பிகை

## தியான சுலோகம்

ओंकार पञ्जरशुकीं उपनिषदुद्यानकेलिकलकण्ठीम् ।
आगमविपिनमयूरीं आर्यामन्तर्विभावयेद्गौरीम् ॥

ஓங்கார பஞ்ஜரசுகீம்
உபநிஷதுத்யான கேளிகலகண்டீம்
ஆகமவிபினமயூரீம்
ஆர்யாமந்தர் விபாவயேத்கௌரீம்.

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி எழில்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள
புஷ்பமிசை வீற்றிருக்கும்

நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சக்தியென்றுன்
நாமமே உச்சரித் திடுமடியார் நாமமே
நானுச்ச ரிக்கவசமோ

ஆரணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ்
அகிலாண்ட கோடியீன்ற
அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூபமயிலே

வாரணியும் இருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவைஅரசே
வரைராஜனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

**நவராத்திரி விழா**

புரட்டாசி மாதம் சுக்லபக்ஷம் முதல் ஒன்பது நாட்களும் திருநாட்களாக நம் நாடெங்கும் கொண்டாடப்படுகின்றன. வடக்கே காஷ்மீரத்திலிருந்து தெற்கே கன்னியாகுமரிவரையிலும், மேற்கே பாஞ்சாலத்திலிருந்து கிழக்கே பர்மாவின் எல்லைப்புறம் வரையிலும் நவராத்திரி நோன்பு நோற்கப்படுகிறது. குறிப்பிட்ட சில ஜாதி சமயத்தார் என்றல்லாது ஹிந்துக்கள் அனைவரும் இப்பூஜையைச் சிறப்பாகச் செய்து வருகின்றனர். சைவர், வைஷ்ணவர், சாக்தர், சூரிய மதஸ்தர், கணபதி மதஸ்தர் ஆகிய எல்லார்க்கும் இவை புண்ணிய நாட்களாம். பராசக்தியைப் போற்றி வணங்குவது இவ்விழாவின் நோக்கமாகும். சக்திபூஜை மாகாணந்தோறும் வெவ்வேறு பெயரிட்டு அழைக்கப்படுகிறது. காஷ்மீரத்தில் சக்தியை அம்பாள் என்றும், ராஜபுதனத்தில் பவானியென்றும், கூர்ஜரத்தில் கல்யாணி என்றும், மிதிலையில் உமையென்றும் சொல்லுகின்றனர். மீனாக்ஷி, காமாக்ஷி, சாமுண்டி, சரஸ்வதி, துர்க்கை, பகவதி என்னும் நாமங்களையும் ஆங்காங்கு அவள் பெற்றிருக்கிறாள். தேவி வழிபாட்டுக்கு ஒப்பானது இந்தியாவில் வேறு எதுவும் இல்லையென்றே இயம்பலாம். ஏனென்றால் இந்நாட்களில் அகில பாரதமும் அம்பாளை ஆடம்பரத்துடனும் ஆர்வத்துடனும் ஆராதிக்கின்றது. இதுபோழ்து மக்களுடைய உள்ளத்தில் புத்துயிரும் ஊக்கமும் உதிக்கின்றன. தனவந்தன், தரித்திரன் ஆகிய எல்லாரும் இத்திரு நாட்களில் மகிழ்வுற்றிருக்கின்றனர்.

பருவமும் இப்பூஜைக்கு முற்றிலும் பொருந்தியதாயிருக்கிறது. மாரியின் மூலம் மண்ணுலகத்துக்கு அமிர்தத்தை விண்ணுலகம் வாரியெத்து வழங்கிவிடுகிறது. வானம் வேண்டியவாறு வருஷித்து ஓய்வுறும்போது உலகத்தவர்

உள்ளத்தில் உவகை இயல்பாகவே பொங்கி யெழுகிறது இயற்கையும் புதிய வனப்புடன் பொலிகிறது. நிலமகள் பச்சைப் பசேலென்ற துகில் தரித்தாலென்னத் தென்படு கிருள். எண்ணிறந்த நிறங்களுடன் பூங்கொத்துக்கள் மரஞ் செடி கொடிகளின்மீது மிளிர்கின்றன. மேடு மடுவு மயமா யிருக்கும் வயல்களில் கதிர் தாங்கிய தானியப் பயிர்கள் மெல்லிய பூங்காற்றில் ஆனந்தமாகத் தலைசாய்ந்து ஊசலாடு கின்றன. மலர்மிசை படிந்துள்ள பனித்துளிகள் நவரத்தி னங்கள் போன்று பாலசூரியனது முன்னிலையில் காட்சி கொடுக்கின்றன. வாழ்வுக்கு இன்பமும் வசதியும் வழங்கும் பண்டங்கள் இக்காலத்தில் ஏராளமாய் அகப்படுகின்றன. இயற்கையின் மாண்பு இப்பருவத்தில் மகோன்னத நிலை எய்துகின்றமையால் शरत्काले महापूजा क्रियते या च वार्षिकी வருஷாந்திர பூஜை சரத்காலத்தில் செய்யப்படுகிறது என்பதாயிற்று. மக்கள் அனைவரும் மகிழ்வுற்றிருப்பதற்கு ஏற்ற காலம் இதுவாம்.

தாயும் ஆனவன்

கிறிஸ்துவர் கடவுளைப் பரலோகத்தில் இருக்கும் பிதா என்பர். இஸ்லாமியர் அவனை ஆண்டவன் என்பர். ஆனால் எல்லாப் பாங்குடனும் அவனைப் பாராட்டுபவர் ஹிந்துக்களே யாம். உறவாடுதற்கு என்னென்ன முறைகளிருக்கின் றனவோ அவையாவற்றையும் ஹிந்து மதத்தில் காணலாம். கடவுளைக் கர்த்தா என்றும், கருணாநிதி என்றும், பிதா என் றும், பிள்ளை என்றும், அண்ணல் என்றும், அரும்பொருள் என்றும், நாயகன் என்றும், நடுநிலை என்றும், மாண்பு என் றும், மெய்ப்பொருள் என்றும், தலைவன் என்றும், தோழன் என்றும் இன்னும் எண்ணரிய விதங்களில் அவர்கள் அழைத்து அன்பு பாராட்டுகின்றனர். இத்தகைய துவந்

வங்களுள் அவனைத் தாய் என்று சொல்லுவது தலையாயது. ஏனென்றால் தாய்க்கும் பிள்ளைக்கும் இடையே உள்ள இணக்கம் ஒப்பற்றது. உலகில் வேறு எதையும் அதனோடு சீர்தூக்க முடியாது. ஆண்டவனிடத்தில் அடிமையானவன் பயபக்திகொண்டு சற்று எட்ட நிற்கின்றான். தந்தையினிடத்திலும் தனயன் மிக நெருங்கி உறவாடுகிறதில்லை. வயது முதிர முதிரப் பிதாவுக்கும் பிள்ளைக்குமிடையே வேற்றுமை அதிகரித்துவிடுகிறது. ஆனால் அன்னையின் இயல்பு என்றைக்கும் மாறாதது. பிள்ளையானவன் நன்றே செய்திடினும், தீதே செய்திடினும் உயர்தன்மை எய்திடினும், தாழ்மையுற்றிடினும் தாயினது அன்புக்கு அந்நியனாகின்றானல்லன். தெய்வத்தின் அன்பும் அதுபோன்றது. அவன் அன்பு வடிவினன். தங்குதடையின்றி அன்பை அளித்துக்கொண்டிருக்கும் அவன் நமக்குத் தந்தைமட்டும் அல்லன், தாயும் ஆனவன் என்கின்றனர் அவனது அன்பை அறிகின்ற தபோதனர். இறைவனது திருவருளில் தேங்கித் திளைத்திட்ட தாயுமான சுவாமிகள் "கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல்போல எனக்கென்று இரங்குவாய் கருணை எந்தாய் பராபரமே" என்கின்றார். ஆக, பக்திப் பிரவாகம் பெருக்கெடுக்கும் போது கடவுளைத் தாய் என்று அழைப்பது இயல்பு.

தாயின் தன்மையுடைய தெய்வத்தை வழிபடுவது மிக எளிதாய்விடுகிறது. பெற்றவளோடு பிள்ளை நெருங்கிப் பழகுதற்குச் சட்டதிட்டம் ஒன்றும் கிடையாது. சாஸ்திர விதிப்படி உபாசனை பண்ணத் தெரியாதிருப்பதுபற்றி பக்தன் கவலைப்படவேண்டியதில்லை. குழந்தை செய்கின்ற வெளிச்சடங்குகளைத் தாய் பொருள்படுத்துகிறாளில்லை. அது காலால் உதைப்பதும் அவளுக்கு இன்பமூட்டுகிறது. எவ்வளவு பரிவுடன் பெற்றவள் பிள்ளையைப் பரிபாலிக்கின்றாள்!

தனது பிராணனையும் பொருட்படுத்தாது அல்லும் பகலும் அவள் சிசுவுக்குப் பணிவிடை பண்ணுகின்றாள். இத்தனைக்கும் காரணம் தாயும் பிள்ளையும் என்ற இணக்கமேயாம். இக்கோட்பாட்டின் மர்மத்தை உணர்ந்து அதைக் கடவுள் வழிபாட்டில் கையாளுபவர் பாக்கியவான்களேயாம். அத்தகையவர்களுக்குக் குறையொன்றுமில்லை. உலகு அனைத்தையும் ஈன்ற இறைவிக்கும் தமக்கும் இடையே உள்ள ஒற்றுமையை அறியாத மாந்தர் மயங்கி வருந்துகின்றனர். தேவியை வணங்குவது அவளுடைய பேராற்றலையும் பேரன்பையும் உள்ளவாறு அறிந்து அனுபவித்தலேயாம்.

சிவ சக்தி

எங்கும் நிறைகடவுளைக் காண நமக்கு இயலாதிருப்பது ஏன் என்ற கேள்வியைச் சிலர் கிளப்புகின்றனர். தோற்றத்திலும் தோற்றத்துக்கு அப்பாலும் இருப்பவன் கடவுள் ஒருவனே. அவனைத்தான் நாம் சதா கண்டுகொண்டிருக்கிறோம். ஆனால் நாம் அவனை அங்கீகரிக்கின்றோமில்லை. கோணலான மனதைக் கருவியாகக்கொண்டு அவனைக் காணுதலே திரிவுபட்ட தோற்றத்திற்குக் காரணமாகும். இந்நிலைமையிலிருக்கும் நாம் ஒழுங்குபடுதற்குச் சக்தி தத்துவமும் சக்தி உபாசனையும் பெரிதும் பயன்படும். சிவம் வேறு, சக்தி வேறு அன்று. சிவம் என்பது மெய்ப்பொருள். முக்காலத்திலும் இது மாறாத, அழியாத தன்மையுடையது. பிரியாது இதனிடத்து நிலைத்துள்ள விபூதி அல்லது சம்பத்துக்கு சக்தி என்று பெயர். ஓர் உதாரணத்தால் இதை நன்கு விளக்கலாம். பாலினிடத்து வெண்மை நிறமிருக்கிறது; ரத்தினத்தில் ஒளி இருக்கிறது. வெண்மையின் உதவியைக்கொண்டும், ஒளியின் உதவியைக்கொண்டும் பாலையும் ரத்தினத்தையும் நன்கு அறிகின்றோம். பாலினின்று

வெண்மையைப் பிரிக்கமுடியாது. ஆதலாலேதான் உமா மகேசுவரன் என்றும் லக்ஷ்மீ நாராயணனென்றும் பரம் பொருளை அழைக்கின்ரேம். உமை அல்லது லக்ஷ்மி என்கின்ற ஐசுவரியத்தையுடைய பரம புருஷன் என்று இப் பெயர்கள் பொருள்படுகின்றன.

அண்டங்கள் அனைத்தும் சிவ சக்தி மயமாயிருக்கின்றன. சிவம் என்பது சேதனம், அறிவுப்பொருள். சக்தியென்பது அசேதனம், ஜடப்பொருள். இவை இரண்டும் இணைபிரியாது உலகெங்கும் இயங்குகின்றன. மானுட அமைப்பை உதாரணமாக எடுத்துக்கொண்டால் அதன் மாட்டு சேதனமும் அசேதனமும் கலந்திருப்பதைக் காணலாம். உடல் அறிவில்லாதது, அசேதனம். ஆனல் அதன் மூலம் அறிவு சொருபியாகிய ஆத்மா பிரகாசிக்கின்றது. இயற்கையிலேயே எத்திசையில் திரும்பிப்பார்த்தபோதிலும் இக்கூற்று நிரூபிக்கப்படுகின்றது. தீ எரிகிறது; காற்றடிக்கிறது; மழை பெய்கிறது; பூமி சுழல்கிறது; பருவம் மாறுகிறது; அண்டங்கள் இயங்குகின்றன; உயிர்வாழ்வன தோன்றி மறைகின்றன—இவையனைத்திலும் சக்தியின் மூலம் சிவம் ஆனந்தத் தாண்டவமாடுகிறது. சிவ-சக்தி, லக்ஷ்மீ-நாராயணன், ராதா-கிருஷ்ணன், சீதா-ராமன், புருஷன்-பிரகிருதி இத்யாதி பெயரிட்டு அழைக்கப்படும் வஸ்து பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது. மக்கள் அனைவரும் அதன் மயம்; அதைத்தான் அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். ஆனல் அவரவர் அறிவுக்கு ஏற்றவாறு அவர்கள் அதைப் பொருள்படுத்துகின்றனர்.

**சக்தியின் ஆற்றல்**

பிரபஞ்சம் முழுதும் மாயாசக்தியின் சொரூபம். மாயை என்னும் பதத்தை சூனியம் என்றும் மித்தை அல்லது

பொய் என்றும் தப்பாகப் பொருள்படுத்துவார் சிலர் உண்டு. மாயாவாதம் என்னும் ஒரு சம்பிரதாயத்தைப் பற்றி மாறுபடும் அபிப்பிராயங்கள் இருந்து வருகின்றன. மித்தையாகிய இவ்வுலகம் முக்காலத்திலும் இல்லவே இல்லையென்று வாதிப்பாரும், இதற்கு மாருக இக்கூற்றைக் கண்டிப்பாரும் ஆகிய இருபிரிவினர் உ.ளர். ஆனல் மாயையை வெறும் வாதமல்லவென்று அறிவது அவசியம். உலகத்தைப் பற்றிய உண்மையை விளக்குவது மாயை. யாண்டும் அழியாது நித்தியமாய் இருப்பது பரம்பொருள். அக்கினியின் உஷ்ணம் போன்று என்றும் பிரியாது இப்பரம்பொருளைச் சார்ந்திருக்கும் ஆற்றலுக்குச் சக்தி அல்லது மாயை என்று பெயர். இந்த சக்தியானது க்ஷணந்தோறும் சலித்துக் கொண்டிருக்கிறது. ஜகத் என்பதன் பொருள் மாறுபடும் தன்மையுடையது என்பதாம். சதா அது உருமாறிக் கொண்டிருப்பதால் குறிப்பிட்ட் ஒரு வடிவம் அல்லது ரூபம் நிலைத்ததன்று. ரூபம் திரிவுபடும் போது அதன் பெயரும் மாறுகிறது. நாம ரூபங்கள் தான் மித்தையேயொழிய ரூபங்களை எடுக்கவல்ல சக்தி மித்தையன்று. அது சிவத்தைச் சார்ந்துள்ள திரு அல்லது விபூதியாகும்.

சக்தியின் திருவிளையாட்டை அணுமுதல் அண்டபகிரண்டம் வரை எங்கும் காணலாம். இப்பூமியைப் போன்ற எண்ணிறந்த கிரஹங்கள் ஒன்றையொன்று அதிவேகமாகச் சுற்றிக்கொண்டு ஓடுகின்றன. இவ்வாறு கிரஹங்களைச் சுழல வைப்பதற்கு ஆகர்ஷண சக்தியென்று பெயர். இச்சக்தியின் வன்மையால் பந்துகள் போன்று அவையாவும் ஆட்டப்படுகின்றன. ஆனல் நிலை குலையாது ஒழுங்காக அவைகள் சுழல்வதினின்று ஆட்டுவிக்கும் சக்தி அறிவு மயமானது என்பது விளங்கும். பராசக்தியின் இத்தகைய விளையாட்டு மனதுக்கு

எட்டாத வண்ணம் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. பரந்த விண்ணுலகத்தினுள் நாம் வசிக்கும் இந்த மண்ணுலக மானது ஓர் அணுப்புள்ளி போன்றது. இதனுள் நடைபெறு கின்ற மாயா சக்தியின் லீலா விசித்திரம் மனிதனை மயக்க முறச் செய்துவிடுகிறது. பர்வதங்கள் ஆகாயத்தை அளாவிக் கொண்டு நிற்பதும், அவைகளினின்று அருவிகள் கர்ஜித்து விரைந்து வீழ்வதும், மேகம் மின்னி ஒளி வீசி இடிப்பதும், மழை தாரை தாரையாகப் பெய்வதும் இயற்கையின் பேராற் றலைப் பற்றி ஞாபகமூட்டுகின்றன. நீராவியும் மின்சாரமும் யந்திரங்களின் மூலம் செய்யும் நானுவித வேலைகள் அதன் வலிமையை விளக்குகின்றன. இனி, உயிர்ப்பிராணிகளின் வாழ்வு முறையை ஆராயுமிடத்தும் சக்தியின் விளையாட்டு வெளியாகின்றது. ஜீவ ஜந்துக்கள் தத்தம் இனம் சேர்ந் திருப்பதும், இனம் காப்பதும், இனம் பெருக்குவதும், சத்ருவோடு சண்டையிடுவதும் சக்தியின் ஜீவ தத்துவத்தைக் காண்பிக்கின்றன. மானுட வர்க்கத்தினுள் இதே இயக்கம் அதிக ஆற்றலுடனும் அறிவுடனும் கூடியதாக இருக்கிறது. ஒரே மின்சாரசக்தி நானுவித வடிவுடைய நானுவித யந்திரங் களை நானுவித முறைகளில் இயக்கி வருவதுபோன்று உயிர் வாழ்வன அனைத்தையும் ஒரே பிராணசக்தி ஆட்டி வைக் கின்றது. வாழ்வில் வைத்திருக்கும் பற்றை நீக்கிப் பரந்த நோக்கத்துடன் பார்ப்பவர்க்கு இவ்வுண்மை விளங்கும்.

ஜடப்பொருளில் இயங்குகின்ற சக்தி ஒன்றுக்கொன்று உடன்பாடாயிருக்கும்போது அதற்குக் கவர்ச்சி (attraction) என்று பெயர்; எதிர்மறையாயிருக்கும் போது அதற்கு விலக்கு (repulsion) என்று பெயர். ஜீவிய தத்துவத்தில் இதே சக்தி விருப்பு வெறுப்பு என்ற பெயர்கள் படைக்கின் றது. இனியதில் விருப்பும் இன்னாதத்தில் வெறுப்பும் கொள்

வது முன்னேற்றம் அனைத்திற்கும் முகாமையாகின்றது. இவையிரண்டையும் கடந்தது அன்பு. பராசக்தி அன்பில் சம்பூரண நிலையடைகின்றாள். இன்சொல் முதலிய மேலாம் தன்மைகள் அன்பினின்று உதிக்கின்றன. துன்பத்தையும் மனக்குழப்பத்தையும் மாற்றுதற்கு அன்பு செறிந்த இன் சொல் ஒன்றே மருந்தாகும். இது அதி சூட்சுமமாய் இருக் கின்றமையால் இதன் ஆற்றல் எளிதில் விளங்குவதில்லை. ஆயினும் உலகனைத்தும் அன்பின் வசப்பட்டிருப்பது உண்மை. இதைக் கரவாது எடுத்து மண்ணுலகில் வழங்கிய வர்களே மகாபுருஷர்கள். "சக்தியாய்ச் சிவமாய்" என்று பகர்ந்த பெரியோர்கள் "அன்பே சிவம்" என்றும் பகர்ந் தருளியிருக்கின்றனர். சிவனுக்குச் சக்திமான் என்பது மற் றொரு பெயர். ஏனென்றால் அவன் அன்பு வடிவினன்; ஆற்றல் அனைத்தும் அவனிடத்திருந்து உதிக்கின்றன. ஆத லால் எல்லாம் வல்ல பரம்பொருளின் இயங்கும் தன்மைக்குச் சக்தியென்றும் இயங்காத தன்மைக்குச் சிவமென்றும் பெயர்.

**ஏககாலத்தில் அன்னையும் கன்னியும்**

குழந்தையைப் பெற்றபின் தாய் வேறாகவும் பிள்ளை வேறாகவும் ஆய்விடுகின்றனர். ஆனால் அண்டங்களை ஈன்றி ருக்கும் நாயகி என்றைக்கும் அவைகளினின்று விலகினவள் அல்லள். அவளே உலகனைத்துமாய் இருக்கின்றாள். பிர பஞ்சம் யாவும் அவள் மயம். ஆதலால் இயற்கையை உள்ள வாறு அறிவது இறைவியை அறிவதாகும். அணுமுதல் அண்டம் வரையிலும், புல் முதல் பிரம்மா வரையிலும் ஆகிய அனைத்திலும் அவளே நிறைந்திருக்கிறாள். பின்பு, சக்தியின் விளையாட்டில் பயன்படாத் தொழில் ஒன்றுமில்லை. யாண் டும் அவள் ஏற்படுத்தி இருக்கும் கிருத்தியங்களில் மேலாம் நோக்கம் உளது. அப்படியாயின் போர்முனையிலும், பஞ்சத்

திலும், பூகம்பத்திலும், கொள்ளை நோயிலும் அவள் கொண்டுள்ள கருத்துத்தான் என்ன என்னும் கேள்வி எழலாம். அழிவு இல்லாத ஆக்கம் கிடையாது. ஓர் அமைப்பை மற்ருென்ருக மாற்றும் போது அது பழைய அமைப்புக்கு அழிவும் புதிய அமைப்புக்கு ஆக்கமுமாம். இவ்வாறு புதுப்பிக்கும் தொழில் இடையருது நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. பகலும் இரவும் மாறி மாறி வருவது போன்று ஜீவர்களுக்கு ஜனன மரணம் வந்து கொண்டிருக்கின்றன. க்ஷணந்தோறும் கோடானுகோடி உயிர்ப்பிராணிகள் மாண்டு கொண்டிருக்கின்றன. முன் மாண்டவை பின் பிறந்து கொண்டிருக்கின்றன. உலகமும் பூகம்பம் போன்ற பல்வேறு விதங்களில் மாறிக்கொண்டிருக்கிறது. பழைய அமைப்பில் பற்றுடையார் மாறுதலை விரும்புவதில்லை. இத்தகைய கொடுமை வருவானேன் என்று மயங்குகின்றனர். ஆனுல் இவ்வையக வாழ்வில் துக்கம் கலவாத சுகமில்லை; மரணமில்லாத ஜனனமில்லை. மரணம் வருவது உறுதியென்ருல் ஒரு நொடிப்பொழுதில் நூறு பேர் மாண்டாலென்ன? கோடிப் பேர் மாண்டாலென்ன? பழையதை விழுங்கிப் புதியதை வருவிப்பது இயற்கைத் தாயின் இயல்பு. இதை அறிந்து கொள்ளாதவன் வீணே அவதிப்படுவான்.

மறைவு-தோற்றத்தின் மூலம் மாயாசக்தி மாந்தர்க்குச் செய்யும் நன்மை என்னவென்ருல், அவர்களுக்கு இன்ப நுகர்ச்சியும் வீடுபேறும் அளிப்பதாம். புல்லாகி, பூடாகி, பறவையாகி, விலங்காகி, மனிதராய், தேவராய்—இவ்வாறு விரும்பிய பிறவிகளையெல்லாம் எடுத்து, வேண்டிய போகங்களையெல்லாம் அனுபவித்துவிட்டு முக்தியடைதலே ஜீவர்களின் நோக்கமாகும். இதற்கு உடந்தையாயிருக்கும் அன்னைக்குப் புக்தி முக்தி ப்ரதாயினி (भुक्ति मुक्ति प्रदायिनी)

என்று பெயர். அதாவது போகத்தையும் மோக்ஷத்தையும் அளிப்பவள் அவளே. போகம் வேண்டுமென்கிற அவா இருக்கும் பரியந்தம் அதற்கேற்ற பிறவிகளை அவள் கொடுக்கிருள். எண்ணிறந்த பிறவிகளை எடுத்து இளைத்த பின்பு முக்தி வேண்டுபவர்களுக்குச் சிவகதிக்கு அவள் வழிகாட்டுகின்ருள். இவ்வாறு வேண்டியவர்க்கு வேண்டியதை வேண்டியாங்கு வகுத்தளிக்கின்றமையால் அகிலாண்டங்களுக்கும் அவள் அன்னையாக இலங்குகின்ருள்.

சென்றதைப் பற்றிச் சிறப்பாகப் பேசுவது ஜகத்திலுள்ளோரது வழக்கம். தங்களது இளமையில் எல்லாம் இன்பகரமாக இருந்தது என்றும், பிறகு காலம் கெட்டுவிட்டதென்றும் உலகம் மாறிவிட்டதென்றும் பகர்வார் பலர் உண்டு. ஆனல் அதே உலகம் இப்போது வேறு சிலருக்கு இன்பகரமாகத் தோன்றுகிறது. வருங்காலத்தில் இன்னும் சிலருக்கு இன்பகரமாகத் தோன்றும். ஆதலால் உலகம் கெட்டுப்போய்விடவில்லை. மனிதனது மனப்பான்மை சீர்பட்டு அல்லது சீர்கெட்டு வருகிறது. அதற்கு ஏற்றவாறு உலகக் காட்சியும் மாறுபடுவது போலத் தோன்றுகிறது. உண்மையில் உலகம் உள்ளபடி இருக்கிறது. பிரகிருதித் தாயின் பூரணத்துக்கு எந்நாளும் குறைவில்லை. யாண்டும் நிறைமாட்சியுடையவளாக அவள் இலங்குகின்ருள். மிகப் பழையவள் எனினும் புத்தம் புதியவளாகவே அவள் பிரகாசிக்கிருள். இயற்கையின் சக்திக்கு அழிவில்லை என்பதை நவீன பௌதிக நூலோர் (conservation of energy) சக்தியின் ரக்ஷணம் என்பர். அண்டகோடிகளை ஈன்ற பிறகும் நிறைகுறையாது எந்நாளும் தன்மயமாய் இருக்கின்றமையால் அவள் ஏககாலத்தில் அன்னையாகவும் கன்னியாகவும் மிளிர்கின்ருள்.

### தேவியின் அம்சங்கள்

வேந்தன் முதல் வேலையாள் வரையில் உள்ள காரியஸ்தர் அனைவரும் அடங்கியது அரசாங்கம். ஒவ்வோர் உத்தியோகஸ்தனுக்கும் பிரத்தியேகமான பிரவிருத்தி உண்டு. அம்முறையில் அம்பாள் அநேக அம்சங்களை உடையவள். யார் யார் எந்த வைபவத்தை விசேஷமாகப் பெற விரும்புகின்றனரோ அதற்கேற்ற தேவியம்சத்தைப் பெரிதும் போற்றி வணங்குகின்றனர். எங்கும் நிறைபொருளாகக் கருதப்படும்போது அவளுக்குப் பூரணி என்றும், பராசக்தி என்றும், ராஜராஜேசுவரி என்றும், மூலப்பிரகிருதி என்றும் பெயர். முத்தொழில்களைச் செய்யுமிடத்து பிரம்மாணி, வைஷ்ணவி, ருத்ராணி என்று அவள் பேர் படைக்கின்றாள். சகுணப் பிரம்மம் அல்லது ஈசுவரனுக்கு ஒப்பாகும்போது அவளுக்குத் துர்க்கை என்னும் திருநாமம் வருகிறது. காலசொரூபிணியாகக் கருதப்படும்போது அவள் காளியாகின்றாள். வித்தையின் வடிவெடுக்கும்போது அம்பாளுக்குச் சரஸ்வதி என்றும் தனதானிய வடிவெடுக்கும் போது லக்ஷ்மி என்றும் பெயர். ஞானத்தை ஆதரிக்கும் மகாதேவியானவள் ஜகதாத்ரியாகவும் பவதாரணியாகவும் பாராட்டப்படுகிறாள்.

### துர்க்கை

பூலோக வாழ்க்கை நன்கு நடைபெறுவதற்குச் சக்தியின் என்னென்ன பகுதிகள் என்னென்ன பாங்கில் அமைந்திருக்கவேண்டும் என்பதைத் துர்க்காதேவியின் சொரூபம் நன்கு விளக்குகிறது. பிரபஞ்சம் முழுதிலும் அவள் வியாபித்திருக்கின்றாள். எனினும் ஆண்டுக்கொரு தடவை அவள் ஹிமாசலத்திலிருந்து பூமியில் சமவெளிக்கு எழுந்



துர்க்கை

தருளுகின்றுள் என்பது கோட்பாடு. புரட்டாசி மாதத்தில் வரும் நவராத்திரி அவளுடைய வருகையைக் குறிக்கிறது. மழைபெய்து ஓய்ந்தான பிறகு நிலவுலகெங்கும் சக்தி எழுந் தருளியிருப்பதன் அறிகுறிகள் தென்படுகின்றன. அவள் மண்ணுலகுக்கு வரும்பொழுது அவளுடைய அம்சங்களாகிய லக்ஷ்மி, சரஸ்வதி, கணேசன், கார்த்திகேயன் ஆகியவர்கள் அவளுடன் வருகிறுர்கள். மண்ணுலக வாழ்வு மாண்புறு தற்கு வாழ்க்கையில் என்னென்ன பகுதிகள் எப்படி அமைந் திருக்கவேண்டும் என்பதை துர்க்கையும் அவளுடைய பரி வாரங்களும் சேர்ந்து விளக்குகிறுர்கள். வாழ்வு நல்வாழ்வு ஆவதற்குத் தனிமனிதன் வாழ்விலும் சமூகத்தின் நடை முறையிலும் ஆட்சியானது சிறப்புற்றிருக்க வேண்டும் என் பதைத் துர்க்காதேவி விளக்குகின்றுள். திறம்பட அவள் செலுத்துகிற ஆணையை மீறி யாரும் செல்லமுடியாது. உயர்ந்த ராணுவ தத்துவமே வடிவெடுத்தவள் என்று அவளைப் பகரலாம்.

மானுட வாழ்க்கையில் எல்லாம் போருக்குரிய சேனை மயமாகப் போய்விடுவது போதாது. வேண்டிய தருணத்தில் சேனை ஒன்று வெற்றிகரமாக வினையாற்றவேண்டும் என்பது மெய். அத்தகைய செயலைச் செய்வதற்குச் சேனை யாண் டும் ஆயத்தமாய் இருக்கவேண்டும். மற்ற மஹிமைகள் வாழ்வை அலங்கரிப்பதற்கு அதனுடன் வந்தமைகின்றன. செல்வத்தைப் பெருக்குதற்குச் சின்னமாகத் திருமகள் இருக் கின்றுள். செல்வத்தைப் பெருக்கி அதைப் பயன்படுத்துப வர்களே இகலோக வாழ்க்கையை நன்கு நடாத்த முடியும். பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பது கோட் பாடு. பின்பு செல்வம் ஒன்றை மட்டும் படைத்திருந்தால் போதாது. கலைகள் பல பயிலுவதும் அவசியமாகிறது. முயலு

கின்றவர்கள் வாழ்க்கையில் விதவிதமான கலைஞானங்களைப் பெறலாம். அதற்கு அறிகுறியாக சரஸ்வதி இலங்குகின்ருள். இவர்கள் இருவரும் துர்க்காதேவியுடன் மண்ணுலகுக்கு எழுந்தருளுவது போன்று கணேசனும் கார்த்திகேயனும் வருகின்ருர்கள். ஞானத்துக்கும் நல்லறிவுக்கும் அறிகுறியாக கணேசன் இருக்கிருன். ஞானமிருக்குமளவு வாழ்வு நல்வாழ்வு ஆகும். இகபரம் இரண்டுக்கும் அது உற்ற துணையாகிறது. பெற்றுள்ள நல்லறிவைச் செயலுக்குக் கொண்டுவரவேண்டும். செயலில் காட்டப்படாத அறிவு ஓங்கியிருப்பதும், மறைந்திருப்பதும் ஒன்ருய்விடுகிறது. வாழ்வில் அதைப் பயன்படுத்தும்பொழுதே உண்மையில் அது ஓங்கியிருப்பதன் மஹிமை முழுதும் வெளியாகிறது. அறிவைச் செயலாக மாற்றுபவன் முருகக்கடவுள். அவன் மூலம் வாழ்வு ஆற்றல் நிறைந்தது ஆகிறது. அம்பிகையின் பகுதிகளாகிய இந்த நான்கு தேவதைகளையும் தொகுத்துப் பார்க்குமிடத்து ஆதிக்கத்துக்கு அறிகுறியாகின்ருள் துர்க்கை. செல்வத்தை வளர்க்கின்ருள் லக்ஷ்மி. கல்வியைப் பெருக்குகின்ருள் கலைமகள். ஞானத்தை ஓங்குவிக்கின்ருன் கணபதி. வாழ்வை ஆற்றல் படைத்ததாக்குகின்ருன் முருகவேள். நிறைவாழ்வின் பொலிவுகளை விளக்குகின்ற சக்திகளாக இப்பகுதிகள் அமைந்திருக்கின்றன.

பூலோகத்துக்கு எழுந்தருளுகின்ற துர்க்காதேவி தத்துவ விளக்கத்துக்கும் சின்னமாகின்ருள். அவள் மஹிஷாசுரமர்த்தினியாக மண்ணுலகுக்கு எழுந்தருளுகின்ருள். சிங்கத்தின்மீது நின்றுகொண்டு அவள் அவ்வசுரனை ஹதம் செய்கின்ருள். கன்னங்கரேலென்ற நிறமுடைய அவன் நிலத்தில் நிற்கின்ருன். அவனுக்குச் சற்று உயரத்தில் சிம்மத்தின் மீது நின்று அம்பிகை ஆட்சி புரிகின்ருள். அவள் மஞ்

சன் மேனியுடையவள். சிவப்பு வஸ்திரம் அணிந்திருக்கின்ருள். ஆயுதங்கள் பலவற்றை அவள் கையாளுகின்ருள். மஹிஷாசுரன் தமோகுணத்தின் பிரதிநிதியாகின்ருன். துர்க்கை ரஜோகுணத்தின் சின்னமாகின்ருள். இந்த அம்பிகையின் தலைக்கு மேல் சதாசிவம் தூவெண் வடிவெடுத்து ஆழ்ந்து ஆத்ம நிஷ்டையில் இருக்கின்ருர். அவரது வெண்ணிறம் சத்துவ குணத்தைக் காட்டுகின்றது. அவர் தன்னில் தானுயிருப்பது பிரபஞ்சத்திலுள்ள கிருத்தியங்களையெல்லாம் கடந்து பரத்தின்பால் செல்லுவது நமக்கு லக்ஷியம் என்பதை விளக்குகிறது. உருவமில்லாத பரம்பொருளிடத்திருந்து சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்கள் வடிவெடுக்கின்றன. தரையில் இருக்கும் தமோகுணத்தின்பால் போராட்டம் அதிகம். ரஜோகுணம் தமோகுணத்தை வெல்லுகிறது. பிறகு அது செல்வமாகவும், கலைகளாகவும், நல்லறிவாகவும் பேராற்றலாகவும் வடிவெடுக்கிறது. அவைகளை நல்வழியில் பயன்படுத்தி சத்வம் என்னும் நடுநிலையின்பால் அது செல்லுகிறது. பிறகு முக்குணத்துக்கும் அப்பாலுள்ள பரம்பொருளில் ஜீவனை அந்தச் சக்தியானது கொண்டு சேர்க்கிறது. இக்கோட்பாட்டை துர்க்காதேவியின் சொரூபம் விளக்குகின்றது. சக்தி எங்கும் நிறைந்தவள் என்பதை அவள் படைத்துள்ள பத்துக் கைகள் விளக்குகின்றன. எட்டுத் திக்குகளில் இருப்பவளும் அவளே; மேலும் கீழும் இருப்பவளும் அவளே என்பதை விளக்குதற்குப் பத்துக்கரங்கள் அமைந்திருக்கின்றன. சக்தியின் அனுக்கிரகத்தைக்கொண்டு வாழ்வு என்னும் போராட்டத்தை ஜீவன் வெற்றிகரமாக முடித்துப் பரத்தின்பால் செல்லுதல் அவனுடைய குறிக்கோள் ஆகின்றது.

மும்மூர்த்திகளில் ஒருவராகிய மகாவிஷ்ணு அம்பாள் மீது பாடிய ஸ்தோத்திரம் பின்வருமாறு:

தேவியாகிய உனக்கு நமஸ்காரம்; மூலப் பிரகிருதி யாகிய உனக்கு நமஸ்காரம்; விரும்பியவைகள் அனைத்தை யும் தருகின்றவளாகிய உனக்கு நமஸ்காரம். சித் (அறிவு) விருத்தி ரூபிணியாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம். சத்-சித்-ஆனந்த ரூபிணியாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம். சம்சார சாகரத்துக்குத் தோணியாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம். பஞ்ச கிருத்தியங்களையும் நடத்துகின்றவளா கிய உனக்கு நமஸ்காரம். புவனேசுவரியாகிய உனக்கு நமஸ்காரம். அனைத்துக்கும் தலைமை வகிக்கின்றவளாகிய உனக்கு நமஸ்காரம். கூடஸ்தையாய் (எல்லாவற்றிற்கும் அடிப்படையாய்) இருக்கின்ற உனக்கு நமஸ்காரம். பொருளனைத்துக்கும் பொருளாயிருக்கும் உனக்கு நமஸ்காரம். ஹிருதயத்தில் பிரகாசிக்கின்றவளாகிய உனக்கு நமஸ்காரம். ஹே அம்ப, இவ் உலகமெல்லாம் உன்னிடத்து இருக்கின்ற தென்பதும், என்னைப் போன்றவர்களது உற்பத்தியும் லயமும் உன்னிடத்திலேயே என்பதையும் உன் திருவடியில் கண்டேன். உன் பாதகமலத்தில் கண்ட காட்சியினாலே நீ அகண்டமான மஹிமையுடையவளாயும், சர்வப் பிரபஞ்ச சொரூபிணியாயும் இருக்கின்றாய் என்பதையும் நான் நன்றாய்த் தெரிந்துகொண்டேன். இது நிச்சயம். ஜீவகோடி களின் நிமித்தம் சிருஷ்டிக் காலத்தில் பிரபஞ்சத்தை சத்-அசத் விசாரத்தோடு விஸ்தாரமாய்ப் படைக்கின்றாய். இந்திரியங்களுக்கு விஷயமாகின்ற நானாவிதத் தத்துவ சொரூபிணியாய் எங்களுடைய சுகானுபவ நிமித்தம் திருவுருவங் கொண்டு பிரகாசிக்கின்றாய். எந்த வஸ்துவையும் அடைதற்கு உன்னைத்தவிர வேறோரிடமுமில்லை. நீயோ எல்லா வஸ்துவிலும் நிறைந்தவளாயிருக்கின்றாய். எந்தப் புத்திமானாலும் வியவகார தருமத்தில் உன்னை விட்டு ஒன்றுஞ்

செய்ய முடியாது. ஹே தேவி, உன்னுடைய பிரபாவத்தினல் எல்லா உலகங்களையும் சந்தோஷிப்பிக்கின்ருய். உன்னுடைய ஒளியினுலே எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கின்ருய். கற்பாந்தரத்தில் நீ அழியாமலே இருக்கின்ருய். வேதம் முதலிய கலைகளையெல்லாம் ஒருங்கே அறியவல்ல பண்டிதன் உன்னுடைய வைபவம் நிறைந்த வரலாற்றையும் எளிதில் அறிந்துகொள்ளலாமென்று எண்ணுவானுயின் அவனுலறியக் கூடுமானதோ? உனது அருளாலன்றி எந்த வித்வானும் உன்னை அறிய வல்லவன் ஆகான்—இங்ஙனம் திருமால் தேவியைப் போற்றினர்.

பூலோகத்தில் அவதார புருஷர்களாகத் தோன்றியவர்களும் தங்களுடைய அரும்பெரும் காரியங்களைச் செய்து முடிப்பதற்கு முன்பு சக்தி பூஜை பண்ணி அவளுடைய அனுக்கிரகத்தைப் பெற்றனர். ராமபிரான் லங்கைக்குப் போகுமுன்பு துர்க்கை பூஜை செய்ததாகவும், கண்ணபிரான் காத்யாயினி பூஜை செய்ததாகவும் சொல்லப்படுகிறது. சங்கராச்சாரியர் சாரதா பூஜை பண்ணி அவளுடைய அனுக்கிரகத்தைப் பெற்ருர். இக்காலத்தில் தோன்றிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் காளியின் வரப்பிரசாதத்தைப் பெற்ருர். அந்தந்தக் காலத்துக்கு ஏற்றமுறையில் பூவுலகில் தர்மம் ஸ்தாபிக்கப்படுவதும் அகிலாண்ட நாயகியின் திருவுளப்பாங்கின்படி நிகழ்கின்றது. ஆதலால் அவ்வப்போது தோன்றும் மதாசாரியர்கள் மாயாசக்தியின் விசேஷ அருட்செல்வர்களாம். அன்னவர்களின் மூலம் அவளது அருள்நோக்கம் நிறைவேறுகிறது. ஜகன்மாதாவின் திருவருள் விலாசத்துக்கு அன்னியமான இச்சாசுதந்தரம் எதுவும் அவதார புருஷர்களுக்குக் கிடையாது. அவளுடைய தெய்விக சக்தியாலும் சம்பத்தாலும் அவளுடைய காரியத்தை அவதார புருஷர்கள் செய்து முடிக்கின்றனர்.

**சக்தி பூஜை**

போஜனம் பண்ணுபவர்க்குப் பசிப்பிணி போம்; தேகம் திடம் பெறும். அவ்வாறே சக்திபூஜை பண்ணுபவருக்கு சக்தி வலுக்கும். காரியத்தைக் கொண்டு காரணத்தை நிர்ணயிக்கலாம். உலகத்தில் மேன்மையனைத்தும் பெற்று இன்புற்றிருப்பவர்களே சக்திமான்கள் ஆவர். முறையுடன் சக்தியைப் பயன்படுத்துதல் பூஜையின் முடிவான நோக்கம். இக்காலத்தவர்களுள் விசேஷமாக மேல்நாட்டவர் சக்தியின் ஜட சொருபத்தைப் பெரிதும் போற்றுகின்றனர். நீராவி, மின்சாரம், ரேடியோ முதலியன ஜடசக்தியின் அம்சங்களாகின்றன. அவைகளின் தத்துவங்களை நன்கு அறிந்திருக்கும் பௌதிக சாஸ்திரிகள் அவைகளைக்கொண்டு நானுவித நன்மைகளை யெய்துகின்றனர். யந்திரங்களின் வாயிலாக மனிதனுக்கு வேண்டிய சௌகரியங்களையெல்லாம் ஜடசக்தி செய்து வைக்கின்றது.

வெறும் வெளிச்சடங்கும் ஆடம்பரமும் பூஜையாய் விடாது என்பதை இக்காலத்திய இந்தியர்கள் தங்கள் வாழ்வின் மூலம் காட்டிவிட்டனர். பராசக்தியை அவர்கள் போற்றும் கோலத்தை நாடெங்கும் காணலாம். ஆனல் உலகில் உள்ள சமுதாயங்களில் இந்தியர்கள்தான் இப்போது சக்தியற்றவர்களாகக் கிடக்கின்றனர். பராதீனமும், தம் காரியத்தைத் தாமே நிர்வகித்துக்கொள்ள இயலாதிருப்பதும் சக்தி உடைத்திருப்பதற்கு அறிகுறிகளாகா. பூஜா விதியில் சடங்கு சரீரம் போன்றது; மனேபாவனை ஜீவன் போன்றது. பாவனையும் உணர்ச்சியும் அற்ற சடங்கு உயிரற்ற உடல் போன்றதாகும். இப்போது இந்தியர்களிடத்தில் உள்ள குறைபாடு இதுவேயாம். உயிர் மெலிந்து கிடக்க உடலை மட்டும் அவர்கள் அலங்கரித்து வருகின்றனர்.

சிலர் உடலாகிய சடங்கையும் அடியோடு ஒழித்துவிட வேண்டும் என்கின்றனர். ஆனால் அது முறையன்று. உடலின் வாயிலாக உயிர் மிளிரும்படி செய்யவேண்டும். சடங்கின் மூலம் சக்தியின் கூறுபாடுகளாகிய தேக வலிவும் மனத்திட்பமும் பெறுதல் அவசியம். இதுவே சக்தி பூஜை யின் அடிப்படையான நோக்கமாகும்.

மேல் நாட்டவர்போன்று இந்தியர் ஜடசக்தியை முழுதும் பயன்படுத்திக்கொள்ளக் கற்கவேண்டும். ஆனால் அது வெறும் சௌகரியத்தைக் கொடுக்குமேயொழிய நிலைத்த சுகத்தைக் கொடாது. மாறாத இன்பம் தூய வாழ்விலும், பரஸ்பர ஒற்றுமையிலும், பேரறிவிலும் பொருந்தியுள்ளது. பராசக்தி பூஜையில் தலையாயது பெண்ணுலகுக்குப் பெருமையளிப்பதாம். அவள் மாதர் வடிவத்தில் மேன்மை யுற்று விளங்குகின்றாள். या देवी सर्वभूतेषु मातृरूपेण संस्थिता, तस्यै नमो नमः சர்வ பிராணிகளிடத்திலும் மாதாவாயிருக்கின்ற தேவிக்கு நமஸ்காரம் என்னும் அரும்பெரும் பிரார்த்தனை பிறந்த நாடு இது. ஆனால் எந்த வீடு அல்லது நாட்டினுள் ஸ்திரீ ஜாதியாருக்கு இன்பமும் மேன்மையும் இல்லையோ அந்த வீடு அல்லது நாடு விருத்தியடையாது என்ற கோட்பாட்டை ஆதியில் அறிந்ததும் இந்நாடே. இந்திய மாதர் தாழ்மையுற ஆரம்பித்ததும் நாடும் தாழ்மையுறலாயிற்று. மேல்நாட்டில் மாதரது மகிழ்வும் சமுதாயத்தின் சௌபாக்கியமும் இணைபிரியாதிருப்பது கருதற்பாலது. ஆனால் அங்கு மாதருள் மனையாட்டி முதன்மை வகிக்கிறாள்; தேக சௌந்தரியத்துக்காக அவள் சிறப்பிக்கப்படுகிறாள். இந்தியாவின் லட்சியமோ அதைவிடப் பன்மடங்கு மேலானது. இங்கு மாதர் உலகில் தாய் தலைமை வகிக்கிறாள். அவள்மீது ஏற்றப்படும் சிறப்பு அனைத்தும் கற்புக்காகவேயொழிய

உடல் அழகுக்காக அல்ல. இப்போது இந்நாட்டு ஸ்திரீகள் தேசீய லட்சியத்துக்கு ஏற்ப தெய்விகத்தோடு திகழும் மாண்பை எய்துதல் அவசியம். ஆதலால் நாம் செய்யும் சக்தி பூஜையில் மாதரைப் பராசக்தியின் வடிவங்களாகப் பாராட்டி அதற்கேற்ற சீரிய ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தல் வேண்டும்.

ஆயுதம் இல்லாதவன் அரைமனிதன் என்று சொல்லப் படுகின்றான். ஆயுதம் உடைத்திருப்பதும் அதை முறையே கையாளுதலும் ஆண்மைக்கு அறிகுறியாகும். ஆனால் இந் நாளில் நம் நாடு செய்கின்ற ஆயுதபூஜை பரிகாசத்திற்கு உரியதாகும். துருப்பிடித்துக் கிடக்கும் பழைய கருவிகளை வருஷமொருமுறை துலக்கிச் சந்தனம், புஷ்பம் சாத்தி அலங் கரித்து வைத்து அவைகளின் எதிரே விழுந்து நமஸ்கரித்து விட்டு மறுபடியும் அவைகளைப் பத்திரப்படுத்தி வைத்துவிடு கின்றனர். இது சக்தி பூஜையின் பெயரால் தோன்றியுள்ள போலி உபாசனையாகும். சக்தியின் உதவியை உண்மையில் நாடுபவன் வல்லவனாகின்றான். அத்தகைய வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். ஆதலால் வல்லவனாகி ஆயுதத்தை ஒழுங் காக உபயோகிப்பவனே ஆயுதபூஜை செய்பவனாகின்றான். அத்தகையவன் வருஷம் ஒருமுறை ஆயுதத்தை அலங்கரிப் பதில் அர்த்தமுண்டு.

சரஸ்வதி பூஜை பண்ணும் நம் நாட்டில்தான் அக்ஞான இருள் நிறைந்து கிடக்கின்றது என்று ஒருவர் பகர்ந்ததில் பொருள்மிக நிறைந்திருக்கிறது. ஏனென்றால் வைதீக விதிப் படி நம்மவர் கலைமகளை வணங்குகின்றாரல்லர். உணவு உட லுக்கு உறுதி தருவதுபோன்று சாஸ்திரங்களின் உட் பொருள் உள்ளத்துக்கு ஒளிவிளக்காக வேண்டும். அங்ஙன மின்றி அது புஸ்தகத்தில் அடங்கியிருப்பதோடு நின்றுவிடு

கிறது. அதுதான் நம்மனோர் மாட்டுள்ள குறை. ஆதலால் தினந்தோறும் கல்வி பயிலுதல் கலைமகளுக்கு உகந்த பூஜை யாகும்.

இகபரம் இரண்டிலும் மக்களுக்கு இன்றியமையாத புருஷார்த்தங்களைப் பராசக்தி பகுத்தருளிய வண்ணமா யிருக்கின்றாள். சுவாசிக்கும் காற்றுப் போன்று அவளுடைய காருண்ய வெள்ளம் தங்குதடையின்றிப் பொங்கிக்கொண்டி ருக்கிறது. உலகனைத்தையும் ஈன்றெடுத்த அன்னை உல குக்கு வேண்டிய யாவையும் பரிவுடன் வழங்கிடக் கைதூக் கிக் காத்திருக்கிறாள். அத்தகைய அகிலாண்ட நாயகியின் அனுக்கிரகத்தைப் பெறவல்ல அறிவையும் ஆற்றலையும் நம்ம னோர் முறையே நாடுவார்களாக.

## தாண்டவத்தில் இரண்டு இயல்புகள்

தெய்வத்தின் திருநடனத்தைப்பற்றிக் கேள்வியுறும் தமிழ் மக்களது எண்ணம் இயல்பாகவே தில்லை நடராஜர் மீது செல்லும். நடராஜர் சன்னிதியைப் பெரிதும் தமிழ் நாட்டிலேதான் காண்கின்றோம். வட இந்தியாவில் சிவ க்ஷேத்திரங்கள் பல இருப்பினும் அவர் அம்பலக்கூத்த னாக ஆங்கு ஆராதிக்கப்படுகின்றாரல்லர். தாண்டவம் புரியும் இயல்பு அத்தேசத்தில் தேவியைச் சார்ந்ததாகும். சிவனும் சக்தியும் ஆலயந்தோறும் சேர்ந்தே எழுந்தருளியிருக்கின்ற னர். ஏனென்றால் சிவனும் சக்தியும் ஒரே தத்துவத்தின் இணைபிரியாத இரண்டு அம்சங்களன்றோ! கூத்தாடும் இயல்பை மட்டும் வடஇந்தியா ஒருவிதமாகவும் தென்னிந் தியா மற்றொரு விதமாகவும் ஓர்ந்து உணர்ந்திருக்கின்றன. மெய்ப்பொருள் ஒன்று எனினும் உணர்பவரது மனநிலைக்கு ஏற்ப அதன் காட்சி வேறுபடுவதை சிவ தாண்டவமும்

சக்தி தாண்டவமும் விளக்குகின்றன. நடராஜரது நாடக மேடை சித் அம்பரம். அதாவது சித் ஆகாசம் அல்லது அறிவுமயமான பரவெளி என்று பெயர். சிதம்பர (சித்+அம் பர) தரிசனம் பெறுவதும் ஈசுவர அனுபூதி அடைவதும் ஒன்றேயாம். பரமாத்மாவே சித் ஆகாசமாய் இலங்குகிறார். அவரது ஆனந்தக்கூத்து ஊனக்கண்ணுக்குப் புலப்படாது. சிதம்பர தரிசனம் பெறுதற்கு ஞானக்கண் வேண்டும். அதை அடையப் பெற்றவர்க்குப் பின்னும் பிறப்பு இறப்பு இல்லை. எனவே தில்லைக்கூத்து ஆத்ம தத்துவத்தை விளக்கு கிறது.

அன்னை பராசக்தி, இயற்கைத்தாய் எங்ஙனம் இயங்கு கின்றாள் என்பதை தேவியின் திருநடனம் தெளிவுறுத்து கிறது. அவளது விளையாட்டை அறிதற்கு ஞானக்கண் வேண்டியதில்லை. பிரகிருதித்தாய் ஐம்பொறிகளுக்கும் புலனாகின்றாள். அகிலாண்டங்களிலும் வியாபித்துள்ள அன்னையின் ஆட்சிமுறை எத்தகையது என்பதை இப்போது நாம் ஆராய்ச்சிக்காக எடுத்துக்கொண்டிருக்கும் சின்னம் விளக்கிக் காட்டுகிறது. தூய உள்ளத்துடன் ஆராய்பவர்க் குத் தாயின் இயல்பு தெற்றெனத் தென்படும். நாம் உறும் இன்பதுன்பங்களும், இம்மை மறுமைப் பயன்களும் நம்மை எவ்வாறு வந்தடைகின்றன என்பதும் இதினின்று நமக்கு நன்கு விளங்கும். சுருங்கச் சொல்லின் பிரபஞ்ச நடைமுறை யும் அதில் ஜீவாத்மாக்கள் அடையும் கதிமோக்ஷமும் அடங் கப்பெற்றிருப்பது அன்னையின் விளையாட்டாம்.

### ஆடுதற்கு ஆதாரம்

முயலகன் என்னும் அரக்கனைக் காலால் மிதித்து மாய்ப்பதன் மூலம் சிவ தாண்டவம் நடைபெறுகிறது. மயக்க

மும் மறைப்பும் வடிவெடுத்து வந்தவன் அந்த அரக்கன். மருள் என்னும் அரக்கனை மிதித்துக் கொன்று தள்ளினு லொழிய ஆத்ம போதம் மேலிடாது. ஆக, முயலகன்மீது நடராஜர் தாண்டவம்புரிவது பொருந்தும். பின்பு, தேவி என்ன செய்கிருள்? விசுவத்துக்கே நாதனுகிய சிவன்மீது அவள் பாதம் நாட்டித் தாண்டவம் புரிகிருள். (படத்தில் பார்க்க) இது என்ன அடாத செய்கை! இக்கூற்றைக் கேட்கும்போதே மனம் கோணுகிறது. இத்தகைய மூர்த்தி யைப் பார்ப்பது சிவனுக்கு அபராதம் செய்வதாகும் என்று சிவபக்தன் ஒருவன் எண்ணக்கூடும். ஆனல் உண்மையைச் சற்று நிதானித்து ஆராயவேண்டும். ஒரே தத்துவம் பரா சக்தி என்றும் மூலப்பிரகிருதி என்றும் மாயை என்றும் சொல்லப்படுகிறது. சேதன சொருபமாகிய தத்துவமோ ஆத்மன் என்றும், பரப்பிரம்மமென்றும், சிவமென்றும், நாரா யணனென்றும் சொல்லப்படுகிறது. விளையாடும் சக்திக்குச் சிவனைத் தவிர வேறு ஆதாரம் ஏது? அவள் நிற்குமிடமெங் கும் சிவமயம். அவர் தேஜோமயம் என்பதை அவரது வெண்மைநிறம் விளக்குகிறது. அவர் அசலம், கூடஸ்தன், போக்கும் வரவும் புணர்வுமில்லாப் புண்ணியன்; ஆதலால் அசைவற்றுச் சிவன் சவம்போன்று கிடக்கிருர். அவரை ஆதாரமாய் வைத்துக்கொண்டு மாயாசக்தி அவர்மீது தாண் டவம்புரிகிருள். சிவம் வேறு, சக்திவேறு அன்று. ஒரே தத்துவத்தில் இரண்டு சொருபங்கள் இருக்கின்றன. அசை வற்றிருக்கும் அறிவுசொருபத்தைச் சிவம் என்கின்ரேம். கிருத்தியங்களே வடிவெடுத்திருப்பது சக்தி. ஆக, அவள் அசைவு வடிவினள் ஆகின்ருள். சிவம் என்னும் ஆதாரத் தின்மீது தேவி ஆடுவதுதான் உண்மை. பார்க்குமிடமெங் கும் நாம் காணும் காட்சியும் இதுவேயாம்.

**தேவியின் சொரூபம்**

பராசக்தியின் பெயர்கள் எண்ணிறந்தவை. அவை களுள் நாம் ஈண்டு ஆராய்தற்கு எடுத்துக்கொண்ட வடிவத் தின் நாமம் காளி என்பதாம். கோடானுகோடி கற்பங்கள் அடங்கப்பெற்ற காலத்தையே அவள் எடுத்து விழுங்கித் தன்னகத்து அடக்குகின்றமையால் அவள் வடமொழி யில் (काली) காலீ என்றும் (कालिका) காலிகா என்றும் அழைக் கப்படுகிருள். காலீ என்னும் பதம் தென்மொழியில் காளியெனத் திரிவுபட்டது. பராசக்திக்கு அன்னியமாகக் காலம் இல்லே. அவளே கால சொரூபிணியாக இருந்து கொண்டு பாரெங்கும் பெரும் மாறுதல்களே விளேவித்து வரு கிருள்.

காளிகாதேவி நீல நிறமுடையவள். எங்கும் பரந்து வியாபகமாயிருக்கும் பொருள் நீலநிறம் எய்துதல் இயல்பு. கையில் கொஞ்சம் ஜலத்தை எடுத்துப் பார்த்தால் அது நிற மற்றதாயிருக்கிறது. ஆனுல் அதே ஜலம் பரந்த கடலில் நீலவர்ணமுடையதுபோல் தோன்றுகிறது. அன்னே பரா சக்தி நீலநிறம் உடையவளாயிருப்பது அவள் எங்கும் நிறை பொருள் என்பதை விளக்குகிறது. எங்குச் சென்ருலும் சக்தியின் தோற்றத்தையே காண்கிரும். அவளே உல கனேத்துமாய் ஆயிருக்கின்ருள். மேலும் அவள் ஆடை அணியாது நிர்வாணமாயிருக்கின்ருள். ஏன்? இயற்கைத் தாயை மூடி மறைப்பதற்கு வேறு என்ன இருக்கிறது? எல் லாத் திக்குகளிலும் அவள் நிறைந்திருக்கிருள். பத்துத் திக்குகளிலும் அவள் பரந்திருப்பதால் திக் அம்பரி (திகம்பரி) என்று அவளுக்குப் பெயர். திக்குகளேயே ஆடையாக அணிந்திருப்பவள் என்பது அதன் பொருள். இயற்கைத் தாய் மறைப்பு இன்றித் தன்னே உள்ளபடி எங்கும் விளக்கிக்

கொண்டிருக்கிருள் என்றும் அவளது நிர்வாண நிலை பொருள்படும்.

வெட்டிய தலைகளை மாலையாகக் கோத்து அவள் அணிந்துகொண்டிருக்கிருள். முண்டமாலினி என்னும் பெயர் அதனுல் அவளுக்கு வந்தது. பலதரமான தலைகள் அந்த மாலையில் அடங்கியிருக்கின்றன. பிள்ளைப் பருவத்திலிருந்து விருத்தாப்பியதசை வரையில் நானுவயதுடையவர்களது தலைகளைக்கொண்டு தொடுக்கப்பட்டது அந்த மாலை. ஜீவப் பிராணிகள் அனைத்தும் மூலப்பிரகிருதியினின்று தோன்றி மீண்டும் அவளோடு சென்று மறைவதற்கு அந்த மாலை அறிகுறியாகும். கட்டுண்டு கிடக்கும் ஜீவர்களை அவள் காலக்கிரமத்தில் தன்னகத்து எடுத்து அடக்குகிருள். பிறந்த ஜீவன் எந்த க்ஷணத்தில் வேண்டுமானுலும் இறக்கும் என்பதை நானுவித வயதுடைய தலைகள் விளக்குகின்றன. துண்டித்த கைகளைச் சரமாகக் கோத்துக் காளிகாதேவி தன் அரையில் அசைத்திருக்கிருள். மக்கள் செய்யும் வினையனைத்திற்கும் சக்தியாயிருப்பவள் அவள் ஒருத்தியே என்பதைக் கைகளால் ஆக்கப்பட்ட சரம் காட்டுகிறது. தேவி பெரிதும் சம்ஹார மூர்த்தியாக இலங்குகிருள் என்பதை அவள் நாவினின்று சொட்டும் ரத்தம் விளக்குகிறது.

ஆடுமிடம்

தேவியின் திருவிளையாடல் மசானத்தில் நடைபெறுகிறது. அவளைச் சுற்றிலுமுள்ள காட்சிகள் சாமானியர்கள் காண்பதற்கு இன்பகரமானவைகளல்ல. வெயிலில் உலர்ந்த எலும்புகள் இறைபட்டுக் கிடக்கின்றன. மாமிசத் துண்டுகளும் அப்படியேதான். செத்த பிணங்களைத் தின்பதற்கு நாய், நரி, பேய், கழுகுகள் அலைந்து திரிகின்றன. ஒருபுறம்

சவம் அக்னிக்கு இரையாய்க்கொண்டிருக்கிறது. பூதகணங்கள் மற்றொருபுறம் கூத்தாடுகின்றன. ரத்தத்தைப் பருகுதற்கும் உலகத்தை அப்படியே எடுத்து விழுங்குதற்கும் தேவி வீராவேசம் பூண்டு நாவை நீட்டிக்கொண்டு ஆடுகிருள். என்ன கோரம்! என்ன வீரம்! கொடுமையென்ருல் இதுதான் கொடுமை! கால தேவதைக்கு இரக்கம் என்பதில்லை! கால சொரூபிணி எதை மிச்சம் வைக்கிருள்? ஜீவராசிகளை க்ஷணந்தோறும் துடைத்து எடுத்துக்கொள்ளுகிருள். அவள் சில வேளைகளில் பெருவாரியாக வந்து வெட்டுகிருள், குத்துகிருள், வாளை வீசுகிருள், மாய்க்கிருள், மக்களை எடுத்து விழுங்குகிருள்; உலகத்தவர் சிந்தும் கண்ணீரைப்பற்றி அவளுக்குக் கவலையில்லை. அவர்கள் படும் கம்பலையைக் காளிகா தேவி கருத்தினில் வைக்கச் சம்மதியாள். ஓயாது சம்ஹாரம் செய்வதை அவள் ஒழித்திடாள். தனி மக்கள் மாய்கின்றனர்; குடும்பங்கள் அடிபடுகின்றன; கிராமங்கள் நசித்துப் போகின்றன; நாடு நகரங்கள் வெறுங் காடாகின்றன. இரும்பைப் போன்று அசைக்கமுடியாத ராஜ்யங்கள் என்று சொல்லப்படுபவைகள் இருக்குமிடம் தெரியாது பொசுங்கிப் போகின்றன. தேவி ஒரு தடவை "ஹூம்" என்று உச்சரிப்பதற்குள் அண்டங்கள் பல தவிடு பொடியாகின்றன. எத்திசையில் திரும்பிப்பார்க்கினும் இத்தகைய சம்ஹாரத் தாண்டவமே நடைபெற்றுக்கொண்டிருககிறது. மசானம் அல்லது ருத்ரபூமி என்பது குறிப்பிட்ட ஓர் இடமன்று. தோன்றியுள்ள சராசரங்கள் அனைத்தும் சுடுகாடு மயமாயிருக்கின்றன. ஒன்றினை ஒன்று எடுத்து விழுங்குவது இயற்கையின் இயல்பு. இத்தகைய காட்சியைக் காண மறுப்பவர் உண்மையைக்காண மறுப்பவராகின்றனர். பயங்கரமான சம்ஹாரத் தொழிலைக் கண்டு மருளு

பவர் உண்மையைப் போற்றுதற்கு, மசானக் காளியைப் போற்றுதற்கு அருகர் ஆகார்.

**பயங்கரமும் பரிவும்**

இவ்வுலகின்கண் நன்மையும் தீமையும் இணைபிரியாது கலந்தே காணப்படுகின்றன. ஒருவிதத்தில் நன்மையைக் காட்டிலும் தீமையே மிக அதிகமாகும். இன்பம் இம்மி யளவு என்றால் துன்பம் சொல்லித் தொலையாத அளவு உளது. இந்த உலகம் நிலையற்றது; துக்கமயமானது. மனிதனோ இக்கூற்றை மெய்யென்று எளிதில் ஏற்றுக்கொள் கிறதில்லை. உலக இயல்புடன் போராடி, அதை வென்று இன்பகரமாக மாற்றியமைக்க வேண்டுமென்று முயலு கிறான். அனாதி காலமாக இம்முயற்சி நடைபெற்று வருகிறது. கலைகள் பல பயிலுவதும், தொழில் அபிவிருத்தி செய்வதும், வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் பல அமைப்பதும், ஒரு தேசம் மற்றொரு தேசத்தோடு போர்புரிந்து ராஜ்யம் நிறுவு வதும், பஞ்ச பூதங்களைக் கட்டி மனிதனுக்கு வேலையாட்க ளாக இருக்கும்படி ஏவுவதும் ஆகிய வியவகாரங்கள் அனைத் தும் துன்பத்தைத் துடைத்து இன்பத்தைப் பெருக்குதற் பொருட்டேயாம். மனிதன் இயற்கையை வென்று முன் னேற்றம் அடைவதன் அறிகுறி ஒருபக்கம் தென்பட்டுக் கொண்டிருக்கிறது. மற்றொரு பக்கம் அவனது துன்பம் நாளடைவில் பன்மடங்கு அதிகரிப்பதன் அறிகுறியும் தெற் றெனத் தோன்றுகிறது. இயற்கைத் தாயின் மாயா விசித் திரத்தை என்னென்பது! ஏன், எதையெதையோ வென்று விட்டதாகப் பெருமை பாராட்டும் மனிதன் துன்பத்தை மட்டும் வென்று விட்டதாகச் சொல்லத் துணியான். உலகு அனைத்தையும் ஆண்டாலும், சித்தியெல்லாம் பெற்றாலும் மனிதனது துன்பத்துக்கு முடிவில்லை என்பதை ஞாபகமூட்டு

தற்காகக் காளிகா தேவி தனது இடது கரம் ஒன்றினில் வாளை ஏந்திக்கொண்டிருக்கிறாள். அது மனிதனுக்குத் துன்பவாளே அன்றி வேறல்ல. துன்பவாள் ஓயாது வேலை செய்து கொண்டிருப்பதை அதில் படிந்திருக்கும் ரத்தம் காட்டுகிறது. ஆணவத்தோடு மனிதன் செய்யும் பிரயத் தனங்களை யெல்லாம் அவள் காலக்கிரமத்தில் பாழ்படுத்து கிறாள். இயற்கை நடைமுறைக்கு விரோதமான மானுடப் பிரயத்தனம் பலிக்காது; அவ்வாறு முயலும் மனிதனே இயற்கைத் தாயின் வாளுக்குப் பலியாகிறான் என்பதை அவள் மற்றொரு கையில் வெட்டிய தலையைப் பற்றிப் பிடித் துக் காட்டுகிறாள். ஆக, ஓங்கிய வாளும் வெட்டுண்ட தலை யும் தேவியின் கோரக் காட்சியை எடுத்து விளக்குகின்றன. உலகில் சுயநலப்பற்றும், பேராசையும், ஆணவத்தடிப்பும், வன்குணமும், பட்சபாதமும் இருக்கும் பரியந்தம் இத்தகைய கோரக் காட்சியும் இருந்தே தீரும்.

ரயில் வண்டியை நகராது தடுக்க முயலுபவன் அதன் சக்கரத்தில் அகப்பட்டு நசுங்கி நாசமடைவான். ஆனால் அதில் ஏறி உட்கார்ந்துகொள்பவன் ரயில் வண்டியால் வரும் பயன் அனைத்தையும் பெறுவான். இயற்கையைத் துர்ப்பிரயோகப்படுத்துபவனும், அதை நல்வழியில் பயன் படுத்தாது வீணே இருப்பவனும் வாளுக்கு இரையாவார்கள். இயற்கைத்தாய் அளிக்கும் நன்மைகளை நல்வழியில் பயன் படுத்துபவனுக்கு அவள் பரிவுடன் அபயம் கொடுக்கிறாள். தீங்கு வரும் என்னும் பயம் அவனுக்கு இல்லை. "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்று சாற்றும் சுதந்திரம் அத் தகைய உத்தமனுக்கே உண்டு. தாயின் இயல்புக்கு உகந்த குழந்தைக்கு அவள் பயத்தைப் போக்கி அபயம் அளிப்பது மட்டுமல்லாது செம்மையனைத்துக்கும் உறைவிடமாகிய சிவ

கதிக்கும் வழிகாட்டுகிருள். அதுவே அவள் அளிக்கும் வரம். எனவே அவளது வலது கரங்களில் அபயமும் வரமும் மிளிர்கின்றன. அவளிடத்து அமைந்துள்ள பயங்கரம், பரிவு ஆகிய இரண்டு இயல்புகளினுள் எவன் எதற்கு உரியவன் ஆகின்ருனே அவன் அதைப் பெறுகின்ருன். உலக நடைமுறையில் நாம் காணும் காட்சி இதுவேயாம்.

**அத்யாத்மிக அமைப்பு**

அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் இருக்கிறது என்று அறிஞர்களால் சொல்லப்படுகிறது. இக்கூற்று உண்மை என்பதை நாம் ஒருவாறு உணரக்கூடும். இதுகாறும் நாம் இயம்பிய தேவியின் திருநடன தத்துவமானது பிரபஞ்சமெங்கும் வியாபித்திருப்பதாகும். அது ஒவ்வொரு மனிதனிடத்தும் அமைந்திருக்கிறது. மனிதன் அறிவற்ற ஜடப்பொருள் அல்லன். அவன் அறிவு சொரூபியாயினும் பேரறிவு அவன் பால் பொலிகிறதில்லை. அவனது சேதனம் பெரிதும் மழுங்கிக் கிடக்கிறது. சிதாபாசன் (சிற்றறிவுடையவன்) என்று அவனை அழைப்பது முற்றிலும் ஒவ்வும். சேதனமயமான சிவம் அவன் மாட்டு சவம் போன்று அடங்கி ஒடுங்கிக் கிடக்கிறது. சிவபோதம் (ஆத்ம போதம்) மேலிடும் பரிபக்குவம் இன்னும் அவனுக்கு வரவில்லை. ஜீவன் பிரகிருதியில் வசப்பட்டுக்கிடக்கிருன். பிரகிருதியின் திருவிளையாடல் மட்டும் காட்சி கொடுக்கிறது. பராசக்தியின் கூறுபாடுகளாகிய தேகம், பிராணன், மனம், புத்தி, அகங்காரம் முதலியவைகள் தாண்டவமாடுகின்றன. அவ்வாறு உடற்கூற்றுகளோடு வியாபாரம் பண்ணும் மனிதன் அவைகளைத் துர்ப்பிரயோகம் பண்ணுவானுகில் நிச்சயமாகவே அவன் கேடுறுவான். துர்ப்பிரயோகங்கள் எவை என்று சிறிது ஆராயவேண்டும். அகங்காரம் அதிகரிப்பது, ஆணவம்

மேலிடுவது, புத்தியில் குயுக்தியும் விபரீத எண்ணங்களும் தோன்றுவது, மனதில் அற்ப ஆசை, பொருமை, வெகுளி முதலிய குற்றங்கள் குடிகொள்ளுதல், அழிவுக்கு ஏதுவாகிய சிற்றின்பங்களிலும் தீய செயல்களிலும் உடல் உழல்வது ஆகிய இவையாவும் இயற்கைத் தாயை முறை தவறி உபயோகிப்பதால் நிகழ்வனவாகின்றன. நெறி வழுவுபவன் அன்னையின் கூரிய வாளினின்று தப்பித்துக்கொள்ள முடியாது. துன்பங்கள் பல துய்ப்பதுமன்றித் திரும்பத் திரும்ப மரணத்துக்கு அவன் ஆளாவான். துன்மார்க்கத்தில் பிரவேசிப்பவனது துச்ச வாழ்வைப் பராசக்தி என்ன செய்கின்ருள் என்பதைத் தேவியின் இடது கரங்கள் காட்டுகின்றன. மரணத்தினின்று மீளமுடியாதவனுக்கு அன்னையின் காட்சி யாண்டும் பயங்கரமாகவே இருக்கும்.

எவன் ஒருவன் இயற்கைத் தாயை நல்வழியில் உபயோகிக்கக் கற்றுக்கொள்ளுகிருனே அவனுக்கு வாழ்வு இன்பகரமாகயிருக்கும். நல்வழியில் உபயோகிப்பது எப்படி என்பதைச் சிறிது ஈண்டு ஆராய்வது அவசியம். அகங்காரம் தேய்வது, ஆணவம் மாய்வது, புத்தியில் கபடமற்ற உண்மையோடியைந்த மேலாம் எண்ணங்களே சதா உதித்தல், மனதில் தூய இனிய உணர்ச்சிகள், அன்பு, அனுதாபம், சாந்தி முதலியன பொழிதல், நன்மை பயக்கின்ற இனிய சொற்களை அடக்கத்துடன் பேசுதல், புலன்கள் அடங்கப்பெற்ற சரீரத்தைக்கொண்டு சமுதாய நன்மைக்காகச் சேவை செய்தல் ஆகிய இவையாவும் அன்னையினின்று பெற்ற ஆற்றலை நல்வழியில் உபயோகிப்பதாகும். அவ்வாறு வாழும் உத்தமன் ஒருவனுக்கு அன்னை பராசக்தி கைதூக்கி அபயம் அளிக்கிருள். ஆதலால் பயமற்றுத் தாயின் செல்வப்பிள்ளை போன்று அவன் உலகில் வாழ்வான். கவலையில்லாது உறங்

கிக் குதூகலத்துடன் எழுந்திருந்து பேருக்கத்துடன் திருப் பணியாற்றுவதே அவனது வாழ்க்கை முறையாகும். பய மற்று இவ்வுலகில் வாழ்வதோடு கூட அவன் பெறும் பேறு மற்றென்று உண்டு. நாளேற ஏற அவனது அறிவு தூயதா கிறது. சிவபோதம் மேலிடுகிறது. சிவசாயுஜ்யம் என்னும் வரத்தைத் தேவி அளிக்கிருள். இமைப்பொழுதும் இறைவன் தன் நெஞ்சத்துள் நீங்காதிருக்கிருன் என்று ஜீவன் அப் போது அறிகிருன். பரம்பொருளில் அவன் இரண்டறக் கலந்து நித்தியானந்தனுகின்ருன். ஆக, தீயவழியில் போகின்றவர்களைப் பயமுறுத்தி மரணத்துக்கு ஆளாக்கி நல்வழியில் திருப்புகின்ருள் தேவி. நல்வழிக்குத் திரும்பின வர்களுக்கு இம்மைப் பயனுகிய அபயமும், மறுமைப்பயனு கிய வரமும் அவள் அளிக்கின்ருள். ஜீவர்களுக்கு இயற் கைத் தாய் செய்யும் அரும்பணி இதுவேயாம்.

### வழிபடும் முறை

காளிகா தேவியை வணங்க விரும்பும் ஒருவன் வீராதி வீரனுய் இருக்கவேண்டும். பயங்கொள்ளிகளுக்கும், எதைக் கண்டாலும் மருளுபவர்களுக்கும் அவள் தன் மேலாம் இயல் பைக் காட்டியருள இசையாள். அவள் மரண சொரூபிணி. கொன்று தள்ளுதலே அவளது தொழில். க்ஷணந்தோறும் அவள் கொலைத் தொழிலை, சம்ஹாரத் தொழிலைச் செய்து கொண்டிருக்கிருள். அத்தகைய அன்னையை வழிபட விரும்புபவன் வாழ்க்கையைத் திரணமெனக் கருதவேண்டும். எப்படியாவது உயிர் வாழ்ந்திருந்தால் போதுமென்று விரும்புபவனுக்கு அன்னையின் அருள் ஒருக்காலமும் சித்திக் காது. 'செத்தாரைப்போல் திரிநெஞ்சே' என்று ஒரு பெரி யார் மனதுக்கு உபதேசம்செய்தார். வாழ்ந்திருக்கும்போதே தன்னை மாண்டுபோனவனுக வைத்துக்கொண்டுஒரு மேலாம்

லட்சியத்துக்காகத் தன்னை ஒப்படைத்துவிடவேண்டும். கம்பீரமாக மாய்தற்கு யாண்டும் ஆயத்தமாயிருப்பதும், மரணத்தை வெறும் விளையாட்டுக்கருவியாகப்பாவிப்பதும் தீரனது பூஷணம். மரணத்தைக் கண்டு மருளாதிருக்கும் வீரனுக்கே இயற்கைத்தாய் அருள் சுரக்கின்றாள். வீரர் நிறைந்த நாடே நாடு. நம் தேசத்தில் அத்தகைய வீரர்கள் எங்கே?

தேவி தாண்டவமாடுமிடம் சுடுகாடு. மனிதன் தன் மனதைச் சுடுகாடாக ஆக்கிக்கொள்வானாக. ஆசை, காமம், வெகுளி முதலியன வெந்து பஸ்பமாய் விடுக. மசானத்தின் கோரக் காட்சிகளுக்கிடையில் அற்ப ஆசைகள் எழுதற்கு அவகாசமில்லை. புலைக்குடி வாழ்வைப் பராசக்தியின் பீடத்தில் பலியாக ஒப்படைப்பவனது உள்ளமே சுடுகாடாய்விடுகிறது. அப்போது அன்னையின் தாண்டவத்தை அங்குக் காணலாம். சக்தியின் தாண்டவம் பின்பு சிவ தாண்டவமாக மாறுகிறது. காலாந்தரத்தில் அழியும் அற்ப வாழ்வை இப்பொழுதே உவகையுடன் காளிகா தேவிக்கு அர்ப்பணம் செய்பவர்க்கு நித்தியானந்தப் பெருவாழ்வு வாய்க்கும்.



## அர்ச்சனைக்குரிய நாமங்கள்

1. **ॐ महेश्वर्यै नमः** ஓம் மஹேச்வர்யை நம:
   மஹேச்வரீ — பேர் அரசி

2. ,, **जगदम्बायै नमः** ஓம் ஜகதம்பாயை நம:
   ஜகதம்பா — உலகுக்கு அன்னை

3. ,, **शङ्कर्यै नमः** ஓம் சங்கர்யை நம:
   சங்கரீ — நலம் செய்பவள்

4 ,, **शिवायै नमः** ஓம் சிவாயை நம:
   சிவா — சிவ: என்பதற்குப் பெண்பால்
   சிவா — மங்களமானவள்

5. ओं अन्नपूर्णायै नमः ஓம் அன்னபூர்ணாயை நம:
அன்னபூரணா—உணவு அளிப்பவள்

6. ,, अभयप्रदायै नमः ஓம் அபயப்ரதாயை நம:
அபயப்ரதா—பயமின்மையை வழங்குபவள்

7. ,, दयाकर्यै नमः ஓம் தயாகர்யை நம:
தயாகரீ—அன்பு பாராட்டுபவள்

8. ,, कल्याण्यै नमः ஓம் கல்யாண்யை நம:
கல்யாணீ—மங்களத்தையுடையவள்

9. ,, उमादेव्यै नमः ஓம் உமாதேவ்யை நம:
உமா—ஆறுவயதுப் பெண் அ+உ+ம ஆகிய ஓங்காரம் இச்சொல்லில் அடங்கியிருக்கிறது

10. ,, अजायै नमः ஓம் அஜாயை நம:
அஜா—பிறவாதவள், எப்பொழுதுமிருப்பவள்

11. ,, अक्षरायै नमः ஓம் அக்ஷராயை நம:
அக்ஷரா—தேயாதவள், எழுத்து அல்லது ஓசை வடிவினள்

12. ,, अपवर्ग प्रदायै नमः ஓம் அபவர்க ப்ரதாயை நம:
அபவர்கப்ரதா—முக்தியளிப்பவள்

13. ,, त्रिपुरसुन्दर्यै नमः ஓம் த்ரிபுரஸுந்தர்யை நம:
த்ரிபுரஸுந்தரீ—ஜாக்ரத, சொப்பன, ஸுஷுப்தி ஆகிய மூன்று புரங்களையும் அலங்கரிப்பவள்

14. ,, महाविद्यायै नमः ஓம் மஹாவித்யாயை நம:
மஹாவித்யா—பெருங்கல்வி, ஆத்ம ஞானம்

15. ,, राजराजेश्वर्यै नमः ஓம் ராஜராஜேச்வர்யை நம:
ராஜராஜேச்வரீ—அனைத்துக்கும் அரசி

16. ,, महाशक्त्यै नमः ஓம் மகாசக்த்யை நம:
மஹாசக்தி—பேராற்றல்

17 ॐ सिद्धिरूपायै नमः ஓம் ஸித்திருபாயை நம:
ஸித்திருபா — தொடுத்த கருமம் வெற்றிகரமாக நிறைவேறச் செய்பவள்

18. ,, कामेश्वर्यै नमः ஓம் காமேச்வர்யை நம:
காமேச்வரி — ஆசையை நிறைவேற்றுபவள்

19. ,, विजयायै नमः ஓம் விஜயாயை நம:
விஜயா — வெற்றி வடிவினள்

20. ,, प्रपन्नदुःखहारिण्यै नमः ஓம் ப்ரபன்ன துக்க ஹாரிண்யை நம:
ப்ரபன்னதுக்கஹாரிணி — தோன்றும் துயரத்தை நீக்குபவள்

21. ,, भवान्यै नमः ஓம் பவான்யை நம:
பவானி — இயற்கையின்கண் உயிரை உண்டுபண்ணுபவள்

22. ,, तमोनाशिन्यै नमः ஓம் தமோநாசின்யை நம:
தமோநாசினி — அக்ஞான இருளை அகற்றுபவள்

23. ,, प्रकृतिरूपायै नमः ஓம் ப்ரக்ருதிருபாயை நம:
ப்ரகிருதிருபா — இயற்கை வடிவினள்

24. ,, त्रिगुणायै नमः ஓம் த்ரிகுணையை நம:
த்ரிகுணை — முக்குண வடிவினள்

25. ,, नाद रूपायै नमः ஓம் நாத ரூபாயை நம:
நாத ருபா — ஓசை வடிவினள்

26. ,, ध्यान गम्यायै नमः ஓம் த்யான கம்யாயை நம:
த்யானகம்யா — தியானத்தால் அடையப்படுபவள்

27. ,, दहराकाशरूपिण्यै नमः ஓம் தஹராகாசருபிண்யை நம:
தஹராகாசருபிணி — சித் ஆகாசம் அல்லது அறிவுவெளி வடிவினள்

---

# 4. கணபதி

தியான சுலோகம்

गजाननं भूतगणाधिसेवितम्
कपित्थजम्बूफलसारभक्षितम् ।
उमासुतं शोकविनाशकारणं
नमामि विघ्नेश्वरपादपङ्कजं ॥

கஜானனம் பூதகணாதிஸேவிதம்
கபித்த ஜம்பூபலஸாரபக்ஷிதம் ।
உமாஸுதம் சோகவிநாசகாரணம்
நமாமி விக்னேச்வர பாதபங்கஜம் ॥

யானை முகத்தனை, உயிர்க்கூட்டங்களால் சேவிக்கப்படுபவனை, விளாம்பழ நாவற்பழ ரசத்தை அருந்துபவனை, உமையின் மைந்தனை, துயரத்தை அழிக்க ஏதுவாயிருப்பவனை, விக்கினங்களையெல்லாம் அழிப்பவனை-அவனுடைய தாமரைத் திருவடிகளில் வணங்குகிறேன்.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

### எல்லார்க்கும் பொதுவானவன்

இந்தியாவில் தோன்றியுள்ள மதங்கள் அனைத்துக்கும் பொதுவாய் எழுந்தருளியிருக்கும் தெய்வம் கணபதி. இத் தெய்வத்தின் துணைகொண்டு தத்தம் தெய்வத்தை மக்கள் வணங்குகின்றனர். தெய்வ வழிபாட்டுக்கு இடம் தராத புத்த மதத்திலும் கணபதிக்கு இடம் உண்டு. பௌத்த

தேவாலயங்களில் சென்று பார்த்தால் இவ்வுண்மை விளங்கும். புத்தர் பெம்மானுடைய வடிவங்கள் வெவ்வேறு பாங்குகளில் அமைக்கப்பெற்றிருக்கின்றன. அவைகளுக்கிடையில் ஏதேனும் ஓர் இடத்தில் கணபதியின் வடிவத்தைக் காணலாம். ஜைனமதத்தினர் கணபதியை இன்னும் சிறப்பாகப் போற்றுகின்றனர். வேதத்தை அங்கீகரிக்கும் மதங்களுக்கு வைதிக மதங்கள் என்று பெயர். அவைகளுள் வைஷ்ணவம் ஒன்று. விஷ்ணு ஆலயத்திலும் கணபதிக்கு இடம் இருக்கிறது. கர்ப்பகிருஹத்துக்கு அண்மையில் உள்ள பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் தும்பிக்கையான் வீற்றிருப்பதை அங்குக் காணலாம். பிறகு சைவ மதத்திலும் சக்தி மதத்திலும் கணேசன் சிறப்புற்று விளங்குகிறான். உமாமஹேசுவரனுக்கு யானை முகத்தவன் மூத்த மகன் ஆகிறான். இளையவன் குமரக்கடவுளோ கௌமார மதத்துக்கு முதல்வன். அவனுடைய வழிபாட்டிலும் கணபதி பூஜையே முன் நிற்கிறது. இவனை வழுத்திய பின்பே மற்ற வழிபாடுகள் ஆரம்பமாகின்றன. இந்த ஐதிகம் வட கயிலையிலிருந்து தென் இலங்கை வரையில் வேரூன்றியிருப்பதைக் காணலாம்.

ஆனைமுகக்கடவுள் எல்லா ஆலயங்களிலும் எழுந்தருளியுள்ளான். அதற்குமேல் தனியாக அவனுக்கென்றே அமைந்துள்ள ஆலயங்களோ எண்ணிக்கையில் அடங்கா. ஏதேனும் ஒரு கிராமத்துக்குச் சென்று பார்த்தால் ஏனைய தேவாலயங்கள் அமையாதவிடத்திலும் ஒரு கணபதி கோயில் இருக்கும். புதிதாகக் கட்டப்பெற்றுள்ள வீடு ஒன்றின் கிரஹப் பிரவேச வேளையில் ஒரு நொடிப்பொழுதில் அது கணபதி கோயில் ஆய்விடுகிறது; பிறகு மக்களின் குடியிருப்பு வீடு ஆகிறது. அவனுடைய வழிபாட்டுக்கு விதியொன்றும் கிடையாது. விளையாட்டுப் பிள்ளைகள் தம் போக்கில்

பிள்ளையாரைப் பேணலாம். அடுத்த க்ஷணத்தில் அதே மூர்த்திக்கு வேத விதிப்படி கிரியா விசேஷங்களுடன் ஆராதனைகள் நிகழும். ஆடவர் மகளிர், கற்றவர் மற்றவர், முதியோர் இளைஞர் ஆகிய அனைவரும் அவரவர்க்கு உகந்த முறையில் விநாயகக் கடவுளை வேண்டியவாறு வழுத்தலாம்.

மூர்த்தி ஒன்று அமைத்து அதன் மூலம் முழுமுதல் பொருளைப் போற்றுவது மாந்தர் கடைப்பிடிக்கும் முறையாகும். கணபதியின் உருவத்தைப் பொன்னால் அமைப்பவர் உண்டு. கல்லில் அதைக் கொத்திக் கோயிலில் எழுந்தருளப் பண்ணிப் போற்றுவது பொது முறையாகும். தாற்காலிகமாக அதை மண்ணில் பிடித்து வைத்து வணங்குவது நெடுங்காலத்து வழக்கம். அதிகாலையில் வீட்டு வாயிலில் பிள்ளையாரைச் சாணத்தில் பிடித்து வைத்துப் பலவிடங்களில் ஏத்துகின்றனர். அப்போதைக்கப்போது ஏற்படும் ஆராதனைக்கு அரிசிமாவிலும் மஞ்சள் தூளிலும் நொடிப்பொழுதில் அவனை உருவாக்கி விடுவார்கள். வேறு சின்னம் ஒன்றும் அகப்படாத இடத்தில் அறுகம்புல் அவனுக்கு அறிகுறியாக வந்து நிற்கும். இங்ஙனம் விநாயகக் கடவுள் தனது வழிபாட்டை எல்லார்க்கும் எளியது ஆக்கியிருக்கிறான்.

தோற்றம்

தோன்றுததும் மறையாததுமாகிய பொருளைத் தோன்றி வந்ததாகக் கருதுவது மாந்தரது போக்கு. பிறப்பையும் இறப்பையும் அறிகிற நாம் கடவுளையும் பிறக்கும்படி செய்து அதில் திருப்தியடைகிறோம். கணபதிக்கு அத்தகைய தோற்றம் கற்பிக்கப்பட்டிருக்கிறது. அதற்கேற்ற காரணத்தையும் புராணம் நமக்கெடுத்துப் புகட்டுகிறது. இயற்கையின் நடைமுறையில் ஒரு குறைபாடு இருப்பதாகத் தேவர்கள் கண்டறிந்தார்கள். வல்லான் வகுத்ததே வாய்க்கால்

என்னும் கோட்பாடே அக்குறைபாடு ஆகும். அசுரர்களும் ராக்ஷஸர்களும் வல்லமை மிகப்படைத்தவர்கள். அவர்கள் நல்லதையும் தீவிரமாகச் செய்யமுடியும்; கெட்டதையும் அப்படியே செய்யமுடியும். மற்றவர்கள் செய்கிற நலத்துக்கு இடைஞ்சல் செய்யவும் அரக்கர்களுக்கு இயலுகிறது. இவ்வண்ணம் இயற்கையின்போக்கு அமைந்துவிட்டால் நல்லவர் முன்னேற்றம் அடையமுடியாது. தீமையே யாண்டும் தலையெடுத்துவிடும். உயிர்களின் வளர்ச்சிக்குப் பிரபஞ்சம் பயன்படாது பாழ்பட்டுப்போம். விக்கின ராஜா ஒருவன் தோன்றவேண்டும். நல்லியக்கங்களுக்கு விக்கினங்கள் எத்தனை வந்தாலும் இறுதியில் அத்தடைகளெல்லாம் தட்டழிந்து போய்விடும். தீய முயற்சிகள் எவ்வளவுதான் ஆற்றல் படைத்திருந்தாலும் முடிவில் அம்முயற்சிகள் முட்டுக்கட்டைகளில் மாட்டிக்கொள்ளவேண்டும். நலத்தை மீட்டுவிப்பதும் பொலத்தைப் பின்னணியில் தள்ளுவதும் ஒரு தெய்வத்தின் தனிச் செயல் ஆகுக. அத்தெய்வத்துக்கு விக்கினேசுவரன் என்னும் பெயர் பாரெங்கும் வழங்கும். இத்தகைய தெய்வத்தைத் தங்களுக்குத் தோற்றுவித்துத் தர வேண்டுமென்று தேவ கணங்கள் ஒன்றுகூடி தேவ தேவனாகிய பரமேசுவரனிடம் பிரார்த்தித்தார்கள். கருணாகரனாகிய முக்கண் மூர்த்தியும் விண்ணவர் விண்ணப்பத்தை அங்கீகரித்தார். இயற்கையின் நடைமுறையில் நிச்சயமாகவே ஒழுங்குப்பாடு இருந்தாகவேண்டும். ஒழுங்குப்பாட்டை நிலையாக வைத்திருக்கும் நாயகன் ஒருவன் தேவை. அதன் பொருட்டுப் பரமசிவன் பார்வதியின் உதவியை நாடினார். சிவசக்தியின் அருள் பிரசாதமாக ஆனைமுகன் உருவெடுத்தான். அவன் விக்கினேசுவரனாக விளங்கினான். தடைகள் பல செய்யவும் தடைகளைத் தவிர்க்கவும் வல்லவன் அவன். இயற்கையின் நடைமுறையில் ஒழுங்குப்பாடு உண்டு.

அதற்கு இழுக்கு ஒன்றும் வந்துவிடாது. தாறுமாறான நிகழ்ச்சிகளுக்கு அதில் இடமில்லை. இங்ஙனம் கணபதியின் பிறப்பால் வந்துள்ள ஒழுங்குப்பாட்டை அறிந்த தேவர்களும் பெருமகிழ்வடைந்திருந்தனர். இயற்கையின் முறைமையைக் காப்பவன் கணபதி.

**விக்னேசுவர பூஜை**

புதிதாகத் துவக்குகிற ஒவ்வொரு காரியத்துக்கும் கணபதியின் துணைவேண்டும். அவன் அருளுக்கு இலக்கு ஆகிற செயல் வெற்றிகரமாக நிறைவேறும். விக்கினேசுவரனை வேண்டிக்கொள்ளாது ஆற்றுகிற வினை விபரீதமாய் விடும். இக்கொள்கை நம் நாட்டு மக்களது உள்ளத்தில் ஆழ்ந்து வேர் ஊன்றிக் கிடக்கிறது. இக்கொள்கைக்கு ஏற்ப அவர்கள் ஏதேனும் ஒருவிதத்தில் விக்கினேசுவர பூஜை செய்கின்றனர். கணபதியை வலம் வருவது ஒருவித வழிபாடு. மும்முறை தலைகுட்டித் தோப்புக்கரணம் போடுவது ஒருமுறை. விநாயகர் முன்னிலையில் தேங்காய் எறிதல், விதவிதமான உணவுப்பொருள் படைத்தல், அவனுக்கு அபிஷேகமும் அலங்காரமும் செய்தல்—ஆகியவைகளால் இன்னும் சிலரால் அவன் ஏத்தப்படுகிறான். கணபதிக்குக் கோயில் கட்டுவிப்பது, கும்பாபிஷேகம் செய்துவைப்பது போன்றவை வேறு சிலரது வழிபாடு ஆகிறது. மற்று இவ்வாறெல்லாம் தும்பிக்கையானைத் தொழாதவர்க்குத் தொல்லைகள் வந்துவிடுகின்றனவா என்பது கேள்வி. விநாயகனை வழுத்தாத நாடுகள் பல வையகத்தில் இருக்கின்றன. அவனைப்பற்றி ஒன்றும் அந்நாட்டவர்கள் அறியவும் மாட்டார்கள். அன்னவர்களுக்கு விக்கினங்களை விலக்க இயலாது என்று இயம்புவது பொருந்தாது. தம்போக்கில் அவர்கள் தடைகளை மீளுகிறார்கள், முன்னேற்றம் அடைகிறார்கள். இறைவன் ஏற்

படுத்திய நியதி என்பதும் இயற்கையின் நியதி என்பதும் ஒன்றே. இது இடத்துக்கு ஒன்ருக, நாட்டுக்கு ஒன்ருக மாறுபட்டு அமைவதில்லை. உலகு அனைத்துக்கும் அது பொதுவானது. அப்படியானல் விக்கினேசுவர பூஜை என்பதன் பொருள் வெறும் சடங்குகளில் அடங்கிவிடாது. பிறர் செய்வதைப் பார்த்துப் பயிலுகிறகிரியைகளைவிட அது இன்னும் பரந்த பாங்குடையதாக இருக்கவேண்டும்.

வழிபாட்டுக்குச் சின்னங்கள் தேவை. விதவிதமான கர்மவிதிகள் வகுத்து வைக்கப்பட்டிருப்பதும் அவசியம். ஆனல் சின்னங்களை வைத்திருப்பதாலேயே மூலப்பொருள் ஆராதிக்கப்படுகிறது என்பது உண்மையன்று. கர்மங்களைச் செய்துவிட்டதினலேயே ஆராதனை நிகழ்ந்து விட்டது என்று எண்ணலாகாது. ஓர் உதாரணத்தைக்கொண்டு இக்கோட்பாட்டை அறிதல் அவசியமாகிறது. கையில் தேசப்படங்கள் வைத்திருப்பவர்கள் எல்லாம் தேசங்கள் அனைத்தையும் பார்த்திருக்கிருர்கள் என்று முடிவு கட்டி விடலாகாது. கையில் தேசப்படங்கள் வைத்திராதவர்கள் ஒருதேசத்தையும் பார்த்ததில்லை என்றும் எண்ணிவிடலாகாது. தேசப்படங்களை வைத்திருத்தலும் வேண்டும்; தேசங்களைச் சுற்றிப்பார்த்தலும் வேண்டும். அப்பொழுது தேசங்களைப்பற்றிய அறிவு, பொருள் நிறைந்த அறிவு ஆகிறது. தெய்வத்தின் சின்னங்களை வைத்துக்கொண்டு, அவைகளுக்குச் செய்கிற கிரியைகள் வாயிலாக உண்மையான விக்கினேசுவர பூஜை நிகழ்தல் வேண்டும். பூஜை மட்டும் உண்மையானதாயிருக்குமானல் தடைகள் யாவும் தவிர்க்கப்படுவதை மனிதன் காண்பான்.

விக்கினேசுவர பூஜையில் உணவு மிக முக்கியமான இடம் பெறுகிறது. நல்ல தின்பண்டங்களைப் படைப்பதே

தும்பிக்கையானைத் தொழுதற்கு உற்ற உபாயம். சத்துள்ள நல்லுணவில் அவன் விருப்பம் மிக வைத்துள்ளான் என்பது கோட்பாடு. அதாவது உடல் வாழ்க்கைக்கு உணவு முற்றிலும் இன்றியமையாதது. முறையாக நல்லுணவை ஏற்பவர்க்கு வாழ்க்கையில் விக்கினங்கள் குறைகின்றன. மிகைபட உண்பவனுக்கும் குறைபட உண்பவனுக்கும் இடுக்கண்கள் பல நேர்கின்றன. அளவுடன் ஆகாரம் ஏற்ற பின்பே அவரவர்க்கு உற்ற அலுவலில் ஈடுபடவேண்டும். குறித்த வேளைகளில் உணவை ஏற்பதே விக்கினேசுவர பூஜையாகும். அவ்வுணவையும் அவனுடைய பிரசாதமாக ஏற்பது அதிலும் நல்ல பூஜை ஆகிறது. கணபதிக்குப் படைத்த கனி, அப்பம், அவல், பொரி போன்ற தின்பண்டங்களைச் சிறுவர்களுக்கு ஏராளமாகப் பகுத்துக்கொடுப்பது முறை. அவர்கள் அடையும் திருப்தி தெய்வத்தின் திருப்தியாகும். ஏதேனும் நல்வினையைத் தொடுப்பவர் நல்லாராகிய சிறுவரைத் திருப்திப்படுத்தக் கடமைப்பட்டிருக்கின்றனர். அதனால் அனுகூலமான சூழ்நிலை சிருஷ்டிக்கப்படுகிறது. விக்கினேசுவர பூஜை என்பது அதுவே. நல்லுணவு படைத்து நல்லாரை மகிழ்விப்பது கணபதி பூஜையாகும். மனக்கசப்புக்கு அதில் இடமில்லை. முரண்பாட்டை அகற்றி உடன்பாட்டை அது உண்டுபண்ணுகிறது. இது விக்கினங்களை அகற்றுதற்கு முதல்படியாகும்.

இயற்கையின் நடைமுறையில் ஒழுங்குப்பாடு இருக்கிறது. உயர்ந்த நோக்கமும் ஒன்று அதன் செயலில் திகழ்கிறது. உயர் நோக்கம் இல்லாவிட்டால் இயற்கை உயிரற்ற யந்திரம் ஆய்விடும். உண்மையில் அதன்கண் உயர்நோக்கம் இருப்பதால் அது உயிர் ஓவியம் என்றும் பேரறிவுப் பொருளின் இயக்கம் என்றும் இயம்

பப்படுகிறது. சிற்றுயிர்களைப் பண்படுத்தி அவைகளைப் பேருயிர்களாக்குவது இயற்கைத் தெய்வத்தின் பெருநோக்கமாகும். உயிர்களின் நலம் தரும் வளர்ச்சியைத் தடுப்பது எதுவோ அது விக்கினம். அத்தகைய விக்கினத்தை விக்கின ராஜாவாகிய கணபதி ஆண்டு வருகிறான். அவனை வழிபடுபவர்கள் அவனுடைய முன்னிலையில் மண்டையைக் குட்டிக்கொள்ளுதல், தோப்புக்கரணம் போடுதல், வலம் வருதல் ஆகிய செயல்கள் யாவும் ஓர் உயர்ந்த கோட்பாட்டை உயிர்களின் உள்ளத்தில் நிலைநாட்டுதற்கு அமைத்தவைகளாம். "இறைவா, என்னுடைய ஜீவபோதமும், ஜீவப் பிரயத்தனமும், உன்னுடைய வாலறிவிலும் வல்வினையிலும் அடங்கியிருக்கட்டும். என் முயற்சி உனது பெருந்திட்டத்துக்கு ஒத்ததாயிருக்குமாகில் நான் வெற்றி பெறுவேன். அப்படியல்லாது நான் உன்னோடு முரண்படுவேனாகில் என் முயற்சி தோல்வியுறும். ஆக, எனக்குத் தோல்வி நேர்ந்தாலும் அதை நான் உன்னுடைய ஆணையாக ஏற்றுக்கொள்வேனாக." இங்ஙனம் ஈசன் செயலுக்கு ஒத்த மனப்பான்மையை வரவழைத்துக்கொள்ளுதல் விக்கினேசுவர பூஜையாகும். இத்தகைய மனப்பான்மையில்லாத வெறும் சடங்குகளும் கிரியைகளும் கணபதி பூஜையாகமாட்டா. பூஜாவிதிகள் என்று பகரப்பெறும் கிரியைகள் இருக்கலாம்; அல்லது இல்லாது போய்விடலாம். ஆனால் ஈசனுடைய பெருந்திட்டத்துக்கு ஒத்த முயற்சி எங்கிருக்கிறதோ அங்கு விக்கினம் நீங்கிவிடுகிறது; வெற்றியுண்டாகிறது. அவனுடைய அமைப்புக்கு மாறான முயற்சிக்கோ விக்கினம் குறுக்கிடுகிறது; அப்படி முயலுகிற உயிர் விக்கினத்தில் கட்டுண்டு தோல்வியடைகிறது.

நீர்வாழும் மச்சம் முற்றிலும் நீரை நம்பியிருக்கிறது. நீரைத்தவிர அதற்கு வேறு உறைவிடம் கிடையாது. மீனின்

முயற்சியெல்லாம் நீருக்குள்ளேயே நின்றுவிடுகிறது. ஆயினும் அதற்கு ஒருவித வல்லமை வருகிறது. விரைந்து வீழ்கிற நீரை எதிர்த்து நீந்தும் திறன் அதற்கு உண்டாகிறது. விக்கினத்தை அது வெல்லுகிறது என்றே இயம்பலாம். முற்றிலும் தெய்வத்தைச் சார்ந்திருப்பவன் அத்தகையவன். தனது இச்சா சுதந்திரங்களையெல்லாம் அவன் தெய்வத்திடம் ஒப்படைத்துவிடுகிருன். யான் எனது என்னும் செருக்கு அறுப்பவனே விக்கினேசுவரனை வழுத்துபவன் ஆகிருன். அதனுல் அவன் உலக நடைமுறை என்னும் நீர் வீழ்ச்சியை எதிர்த்து இறைவனை நோக்கி நீந்த வல்லவனுகிருன்.

**பிள்ளையார்**

அம்மையப்பன் முன்னிலையில் மைந்தன் என்றைக்கும் மைந்தனுகவே இருக்கிருன். தான் யாண்டும் பிள்ளையாகவே இருக்க வேண்டுமென்று கணபதி தீர்மானம் செய்தான். அந்நிலைக்கு அவனைத் தூண்டுதற்கான நிகழ்ச்சியும் ஒன்று நேர்வதாயிற்று. பால கணபதி விளையாடிக்கொண்டிருந்தபோது பெண் பூனையொன்று அவனெதிரில் தென்பட்டது. அதைத் துரத்திப்பிடித்து விளையாடினுன். இவன் செய்த தொந்தரையில் பூனையின் முகத்தில் காயம் ஒன்று உண்டாயிற்று. விளையாட்டின் வேகத்தில் அது ஒரு குற்றமாக அவனுக்குத்தென்படவில்லை. பின்பு அன்னை உமாதேவியிடம் அவன் ஓடினுன். அவள் முகத்தில் காயம் ஒன்றைக் கண்டான். அது எப்படி உண்டாயிற்று என்று கேட்டான். மைந்தனுகிய கணபதி செய்த குற்றம் அது என்று அன்னை விடையிறுத்தாள். தான் அப்படியொன்றும் செய்யவில்லையே என்று அவன் திகைத்து நின்ருன். பெண் உலகு அனைத்தும் தன் வடிவம்; ஆதலால் பூனைக்குச் செய்த ஊறு உண்மையில்

தனக்குச் செய்தது ஆகும் என்ருள் தாய். அதைக்கேட்ட கணபதி தான் என்றும் பிரம்மசாரியாகவே இருக்கத் தீர்மானித்தான். மற்ற தெய்வங்களுக்கு ஏற்ற சக்தி சொருபம் அமைவது போன்று பிள்ளையாருக்குப் பெண்பாகம் இல்லை. ஆண், பெண் என்ற பேதத்துக்கு அப்பாற்பட்டவன் அவன். சித்தி, புத்தி என்ற இரண்டு சக்திகளை அவனேடு இணைத்து வைத்துக் கூறுவது உண்மையில் அவன் மகிமையையே விளக்குவதாகும். வாழ்க்கையில் விநாயக தத்துவத்தை அனுஷ்டித்து வருபவர் தொடுத்த கருமங்களிலெல்லாம் சித்தி பெறுவார்கள்; லாபம் உண்டாகும். அவர்களுக்கு புத்தி அல்லது நல்லறிவு வளர்ந்துகொண்டிருக்கும் என்பது கோட்பாடு. பிள்ளையாரைப் போற்றுகின்ற சிறுவர்கள் ஆற்றலையும் அறிவையும் பெறுவார்கள்.

### மூஷிக வாகனன்

ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒரு வாகனம் இருக்கிறது. உண்மையில் உயிர்கள் எல்லாம் தெய்வத்துக்கு வாகனமாகின்றன. அந்தந்த தெய்வத்துக்குரிய வாகனம் அத்தெய்வத்தின் தனி மகிமையை விளக்குவதாகும். விநாயகக் கடவுள் பெருச்சாளி வாகனன் எனப் பெயர் படைத்துள்ளான். எலியின்மீது அவன் ஊர்ந்து செல்லுதலே அதற்குக் காரணமாகும். எலியின்மீது யானை ஏறிச்செல்வது நகைப்புக்குரிய விஷயமாகும். மிதியுண்டு எலி செத்துப்போய்விடும்; சாகாது அது வேழத்தைச் சுமந்து செல்லுகிறது என்ருல் அது பெருவேதனைக்கு உள்ளாகும். உட்பொருளை உணராதார் இங்ஙனம் ஊகிக்க இக்கோலம் இடம் கொடுக்கிறது.

ஆத்மாவைப் பற்றிய உண்மையொன்று உண்டு. பெரியதிலெல்லாம் ஆத்மா மிகப் பெரியது. நுண்ணியதிலெல்லாம் அது மிக நுண்ணியது. ஜீவாத்மாக்களில் சிறிய

உடலில் இயங்குவது சிறிய ஆத்மாவென்றும், பெரிய உட லில் இயங்குவது பெரிய ஆத்மாவென்றும் எண்ணலாகாது. உடல் சிறியது எனினும் உள்ளிருக்கும் ஆத்மா அளப்பரி யது. வடிவங்களில் அது கட்டுப்படுவதில்லை. ஜடப்பொரு ளுக்கு எடையுண்டு. கனமானதென்றும் இலேசானதென் றும் பூதப்பொருள்களைப்பற்றிப் பகரலாம். அறிவுப் பொரு ளைப்பற்றி அங்ஙனம் பகர்வது பொருந்தாது. அறிவுவளர் வதால் மூளைக்கோ உடலுக்கோ பாரம் அதிகரிக்கிறது என்று சொல்லலாகாது. உடலும் உயிரும் சேர்ந்தது ஜீவாத்மா. உடல் வடிவத்தில் ஆத்மாக்கள் யாவும் எல்லை யில் அடங்கிய சிறு ஜந்துக்களாம். ஆத்ம சொருபத்திலோ ஒவ்வொரு ஜீவனும் அளப்பரிய பெரிய பொருள் ஆகும் தன்மையது. இக்கோட்பாட்டைப் பெருச்சாளி வாகனன் புகட்டுகிறான்.

### மூர்த்தி விளக்கம்

கஜானனன் அல்லது ஆனை முகத்தலைக அவன் உரு எடுத்திருக்கிறான். உடலின் மற்ற பகுதிகள் மானுடனுக்கு இருப்பதுபோன்று அமைந்திருக்கின்றன. தலை ஒன்று மட் டும் வேழத்தினுடையது. யானைத்தலை கணபதிக்கு உண் டாயிருப்பதைப் பற்றிய வரலாறுகள் பல இருக்கின்றன. அவை முக்கியமானவைகள் அல்ல. இவ்வடிவத்தின் வாயி லாகப் புகட்டப்படும் தத்துவமே மிக முக்கியமானது. தத்து வத்தை உருவகப்படுத்தியதில் அமைந்தது அவனது வடி வம். 'ஓம்' என்னும் எழுத்து பல மொழிகளில் பல பாங்கில் எழுதப்பட்டிருக்கிறது. அத்தனை எழுத்துக்களுக்கும் பொது இயல்பு ஒன்று உண்டு. யானையின் காது, தலை, துதிக்கை ஆகிய மூன்றும் சேர்ந்து ஓம் என்பதன் பொது இயல்பா கிறது. யானை முகத்தையுடைய கணபதி ஓங்கார மூர்த்தி

யாகத் திகழ்கிறுன். அவனுடைய தலேயும் துதிக்கையும் அக்கோட்பாட்டை விளக்குகின்றன. வட இந்தியாவில் சில மாகாணங்களில் ஓம் என்னும் எழுத்துக்கு மேல் சந்திர பிந்து (ँ) என்ற குறியிடுகிறுர்கள். அதற்கு ஒப்ப அந்த மாகாணங்களில் உள்ள கணபதியின் விக்கிரகங்களுக்கு சந்திரபிந்து (ँ) கிரீடமாக அமைந்திருப்பதைக் காணலாம்.

பிறகு அவனுடைய உடல் முழுதும் துப்பு ஆர் திருமேனி என்னும் சிறப்பை உடைத்திருக்கிறது. தத்துவத்தை எடுத்து இயம்புங்கால் பிரபஞ்சம் முழுதும் கணபதியின் உடல் ஆகிறது. அதனிடத்து வலிவும், உறுதியும், தூய்மையும், அறிவும் பொலிவதைக் காணலாம். துப்பு என்னும் சொல்லில் இத்தனே கருத்துக்களும் அடங்கியிருக்கின்றன. ஞானமே வடிவெடுத்தவன் கணபதி. இயற்கை என்னும் உடலில் ஒழுங்குப்பாடும் நல்லறிவும் திகழ்வதே அதற்குச் சான்று ஆகும். நமக்குப் புலனுகும் பருத்த உடல்களில் யானேயின் உடல் முதன்மை பெறுகிறது. சிவ சக்தியின் புறத்தோற்றமாய் இருப்பது இயற்கை. இது அகண்டாகாரமாய் விரிந்துள்ளது. இதனுள் இலங்கும் இறைவனேச் சுட்டிக் காட்டுதற்கு யானேத் தலேயையுடைய பருத்த திருமேனியானது பொருத்தமான உருவகமாகிறது.

பருத்த திருமேனிக்கு ஒப்ப லம்போதரம் அல்லது பேழை வயிறு படைத்தவன் ஆகிறுன் இப்பெரிய வீட்டு நாயகன். வீட்டில் உள்ள பொருள்களேப் பேழையில் போட்டுவைப்பது வழக்கம். விதவிதமான உணவுப்பொருள்களேயெல்லாம் அவன் உட்கொண்டான். அவையாவற்றையும் தாங்கிப் பிடிப்பதற்குப் பாம்பு ஒன்றை எடுத்துக் கச்சையாகத் தனது தொந்தியின் மீது கட்டிக்கொண்டான். இது புராண பூர்வமாகப் பகரும் பேச்சு ஆகும். தத்துவ விளக்க

மாக இதை எடுத்து ஓதலாம். அண்டங்கள் யாவும் அவனி டத்து அடங்கிக்கிடக்கின்றன. அவனுக்குப் புறம்பாயுள்ள பொருள் ஒன்றுமில்லை. தன்னிடத்துத் தங்கியிருக்கும் சராசரங்கள் யாவற்றையும் தனது சக்தியால் அவன் தாங் கிக்கொண்டிருக்கிறுன். சர்ப்பம் யாண்டும் சக்தியின் சின்ன மாகும். சர்ப்பத்தைக்கொண்டு தனது தாழி வயிற்றைக் கட்டியிருப்பதன் கோட்பாடு இதுவேயாம்.

ஐந்து கரங்கள் உடையவனுக ஆனைமுகக் கடவுள் இருக்கிறுன். பொதுவாகத் தெய்வ சொருபங்களுக்கு நான்கு கரங்கள் இருப்பதாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. ஆற்ற லிலே மானுடரைவிட அவர்கள் மிக்கார் என்பதைப் பல கைகள் படைத்திருப்பதன் மூலம் அவர்கள் காட்டியருள் கின்றனர். தும்பிக்கையுட்பட கணபதிக்கு ஐந்து கைகள் இருக்கின்றன. உயர்த்திப்பிடித்திருக்கும் இரண்டு கைகளிலே கணேசன் அங்குசம், பாசம் என்னும் இரண்டு ஆயுதங்களை ஏந்தியுள்ளான். யானைப்பாகன் அங்குசத்தைக் கொண்டு யானையை வேண்டியவாறு நடாத்துகிறுன். வேலையில்லாதபொழுது கயிறு அல்லது பாசத்தைக்கொண்டு அதைக் கட்டிவைத்துவிடுகிறுன். யானைமுகக் கடவுள் ஜீவர்களை நல்வழியில் நடாத்துகிறுன். அதற்கு அறிகுறியா யிருப்பது அங்குசம். தீவினையாளரைத் துன்பத்தில் அவன் பாசத்தைக்கொண்டு தளைக்கிறுன். மக்கள் படும் துன்பத் துக்கெல்லாம் காரணம் அவர்கள் தீவினையில் அல்லது அக் ஞானத்தில் தளைக்கப்பட்டிருப்பதேயாம். இங்ஙனம் இரண்டுவிதச் செயல்களினுல் அவன் விக்கினேசுவரன் ஆகிறுன். தடைகளினின்று நல்லாரைத் தவிர்ப்பது ஒன்று. தடைகளைக் கெட்டவர்களுக்கு அதிகப்படுத்திவிடுவது மற் ளுென்று. இன்னும் இரண்டு கைகளில் முறையே தந்தமும்

அக்ஷமாலேயும் இருக்கின்றன. தனது தந்தங்களில் ஒன்றை ஒடித்து எழுதுகோலாகக் கணபதி வைத்திருக்கிருன். கல்வி பயிலுதற்கு அது அறிகுறியாகிறது. சிந்தனை சக்தியை வளர்ப்பது அவசியம் என்பதை ஜபமாலே ஞாபகமூட்டு கிறது. யார் ஒருவன் எண்ணவும் எழுதவும் கற்றுக்கொள் கிருனே அவன் நல்ல மனிதன் ஆகிருன். எண்ணும் எழுத் தும் கண்ணெனத்தகும், என்னும் கோட்பாட்டைக் கணபதி காட்டிக்கொண்டிருக்கிருன். அறிவை வளர்க்க விரும்புபவர் யானே முகனே ஆராதிக்கவேண்டும். ஐந்தாவது கரமாகிய தும்பிக்கையில் அவன் தனக்கு மிகவும் விருப்பமான மோத கம் என்னும் தின்பண்டத்தை வைத்திருக்கிருன். உணவு இல்லாது யாரும் உயிர்வாழ முடியாது. நல்லுணவை உண்டு உயிர்வாழவும், அறிவைப் பெருக்கவும், நல்வாழ்வு வாழவும் மனிதன் கற்றுக்கொள்ளவேண்டும் என்னும் கோட் பாடுகளே ஐந்து கைகளும் விளக்கிக்கொண்டிருக்கின்றன. துதிக்கையானது எப்புறம் வளைந்து சுருண்டிருக்கிறதோ அதன்படி அவன் வலம்புரி விநாயகன் என்றும் இடம்புரி விநாயகன் என்றும் இயம்பப்படுகிருன்.

அம்மையைப் போன்றும் அப்பனேப் போன்றும் கணே சன் முக்கண்ணனுயிருக்கிருன். சாதாரணமாய்த் தென் படும் இரண்டு கண்களும் புறவுலகைக் காண்பதற்கு அமைந் தவைகள். நெற்றியில் உள்ள மூன்ருவது கண் பர ஞானத் தைச் சுட்டிக் காட்டுகிறது. இகம் பரம் ஆகிய இரண்டை யும் உள்ளபடி அறிதலே நல்லறிவு. ஞானக் களஞ்சிய மாகிய விநாயகனிடத்து இத்தகைய நிறைஞானம் பொலிந்து கொண்டிருக்கிறது. தனது அகன்ற யானைக்காதுகளே யாண்டும் விரித்து வைத்த வண்ணமாய் விநாயகன் இருக் கிருன். மனிதன் மிகைபடப் பேசுகிருன்; குறைபடக் கேட்

கிறான். ஆனால் அம்பாளின் மைந்தன் யானைமுகக் கடவுள் பேசுவது குறைந்த அளவிலேயாம். கேட்பதிலோ அவன் எப்பொழுதும் கண்ணும் கருத்துமாயிருக்கிறான். நல்லறிவை வளர்க்க விரும்புபவர் விநாயகனைப் போன்று பேசுவதைக் குறைத்தும் கேட்பதை அதிகப்படுத்தியும் பழகவேண்டும்.

### ஏக தந்தன்

கணபதிக்கு ஏக தந்தன் என்று ஒரு பெயர் உண்டு. ஒற்றைக்கொம்பன் என்று அது பொருள்படுகிறது. வியாச பகவான் மகாபாரதத்தைச் சொல்லிக்கொண்டு போகையில் கணபதி அதை எழுதி முடித்ததாக ஓர் ஐதிகம் உளது. இடையில் எழுத்தாணி உடைந்து போய்விட்டது. ஆனால் எழுதும் வேலையை நிறுத்துவது ஒண்ணாது. தனது தந்தங்களில் ஒன்றை ஒடித்து அவ்வேலையைச் செய்துமுடித்தான். அன்றுமுதல் அவன் ஏகதந்தன் ஆய்விட்டான். தனது உருவத்துக்கு ஊனம் வந்தது. முறித்தெடுத்த தந்தத்தைத் தனது வலக்கரத்தில் அவன் பிடித்திருக்கிறான். இது தியாகத்தின் அறிகுறியாகும். ஒரு நல்ல காரியத்தின் பொருட்டுத் தன்னிடம் இருக்கும் சிறந்தது ஒன்றைத் தியாகம் பண்ணாதவன் செயற்கரியதைச் செய்து சாதிக்க முடியாது. தனக்கு உரியதைப் பொதுமக்களுக்கு உரியதாக்கும் முறையில் தியாகம் செய்யாது யாரும் மேலோர் ஆனது கிடையாது. ஓர் உயர்ந்த காரியத்தின் பொருட்டுத் தனது அவயவங்களில் ஒன்றை இழந்துவிட்டதே கணபதிக்கு அலங்காரமாயிற்று.

### உச்சிஷ்ட கணபதி

மற்ற தெய்வங்களிடத்துக் காணாத சிறப்பு ஒன்று கணபதிக்கு உண்டு. பல வடிவங்களுள் அவன் உச்சிஷ்ட கண

பதி என்னும் இயல்பைப் பெற்றிருப்பதுவே அச்சிறப்பு. எச்சில்பட்ட கணபதி என்று அது பொருள்படுகிறது. தூய்மையே தெய்வ சொரூபம் என்னும் எண்ணத்தில் ஊறியவர் நாம். தெய்வத்தை அடைதற்குத் தூய்மை என்னும் நிலைமை முற்றிலும் இன்றியமையாதது. அதன் பொருட்டு நாம் சதாசாரம் உடையவர்களாக இருந்து பழகுகிறோம். அதை நன்றாகப் பழகிய பிறகு தூய பழக்க வழக்கமே நமக்கு ஒருவித இடையூறு ஆய்விடுகிறது. ஒரு நாள் நீராடாவிட்டால் நாம் கடவுள் வழிபாட்டுக்குத் தகுதியற்றவர் ஆய்விட்டோம் என்று எண்ணிக்கொள்கிறோம். அழுக்குப் படிந்தவரோ, தீட்டுப்பட்டவரோ யாராவது நம்மைத் தீண்டிவிட்டால் தாற்காலிகமாக நாமும் கெட்டுப்போய்விட்டோம் என்று நம்மை நாமே புறக்கணிக்கிறோம். மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களில் நாம் சுத்தமாயிருப்பது முற்றிலும் அவசியம். ஆனால் எக்காரணத்தை முன்னிட்டாவது உடல் அழுக்குப் படிந்துவிட்டால் அதை முன்னிட்டு மனதில் எந்தவிதமான மயக்கமும் வந்துவிடலாகாது. அசுசியான பொருள்களைக் குறித்து அருவருப்பு அடைவது தகாது. சுத்தம் அசுத்தம் ஆகிய இரண்டு நிலையும் கடந்த நிலைக்குப் போவது நமது குறிக்கோள்.

இயற்கையில் மலம் அல்லது அழுக்காகத் தென்படும் பொருளைப் பரந்த மனப்பான்மையுடன் பார்த்துப் பழகினால் அது உண்மையில் அழுக்கு அல்ல என்பது தென்படும். செடிக்கு உணவாவதை நாம் அழுக்கு என்கிறோம். அத்தகைய அழுக்கையே செடியானது உணவாக மாற்றி நமக்குத் திருப்பிக் கொடுக்கிறது. இயற்கை முழுவதிலும் இந்த நிகழ்ச்சியைக் காணலாம். அழுக்கை அழுக்காகக் கருதாதே என்ற பாடத்தை உச்சிஷ்ட கணபதியின் உபாசனை

நமக்குப் புகட்டுகிறது. போஜனம் பண்ணிய பிறகு எச்சில் இலையை எடுத்து எட்ட எறிகிறோம். அது எறியப்படும் இடத்தில் எழுந்தருளியிருப்பவன் உச்சிஷ்ட கணபதி. எச்சில் இலையை எறிந்துவிட்டு உச்சிஷ்ட கணபதிக்கு ஒரு நமஸ்காரம் போடுகிறோம். அவனுக்கு நாம் புறங்காட்டித் தோப்புக்கரணம் போடுவதும் வழிபாடு ஆகிறது. ஒரு மனிதனுக்கு முகம் காட்டாது முதுகு காட்டுவது அவனை அலட்சியப்படுத்துவது ஆகிறது. தெய்வத்தின் சன்னதி பார்த்து வணங்குவது முறை. ஆனால் நீக்கமற எங்கும் நிறைந்துள்ள பொருளுக்கு முன்புறம் பின்புறம் என்பன இல்லை. அத்தகைய உயர்நிலைக்கு நமது மனதை உயர்த்துதற்கே உச்சிஷ்ட கணபதிக்கு முதுகுகாட்டி வணங்குகிறோம். எங்கும் நிறைபொருளாகிய அவன் நமக்கு மலமாகத் தென்படும் பொருளிலும் இருக்கிறான். நமக்கு அழுக்காகத் தென்படும் பொருளை அவனோடு இணைத்துப் பார்த்தால் அது அழுக்கு அல்ல என்பது புலப்படும். இத்தகைய புனிதமான மனப்பான்மையை உச்சிஷ்ட கணபதியின் உபாசனையினின்று நாம் பெறுகிறோம். அசுசியான பொருள்களைக் கையாளுகிற வேளைகளில் மனதை அசுசியாக்காது வைத்திருப்பவர்கள் உச்சிஷ்ட கணபதியைப் போற்றுபவர் ஆகின்றனர்.

வெவ்வேறு வடிவங்கள்

பால கணபதி என்பது அவனுடைய சொரூபங்களில் ஒன்று. இவ்வடிவத்தில் இருக்கும் அவன் நின்றுகொண்டும் நர்த்தனம் புரிந்துகொண்டும் இருக்கிறான். பாலனாய் இருக்கும்பொழுது அவன் தன் தம்பி குழந்தைவேலனுக்கு ஒப்பாகிறான். அசைவற்று அமர்ந்திருப்பதற்குப் பதிலாக நடமாட்டம் மிகவுடையவன் ஆகிறான். ஆரம்ப தசையில் ஞானத்துக்கும் சலனமுண்டு.

கணபதி என்னும் சொல்லில் 'க' என்னும் எழுத்து ஞானத்தைக்குறிக்கிறது. 'ண' என்னும் அக்ஷரம் ஜீவர்களின் மோஹத்தைக் குறிக்கிறது. 'பதி' என்னும் பதம் தலைவன் எனப்பொருள்படுகிறது. பரபிரம்ம சொருபமாயிருப்பவன் கணபதி. ஞானத்துக்கும்மோக்ஷத்துக்கும் அவனே தலைவன்.

ஹிரம்ப என்பது விநாயகனின் பெயர்களில் ஒன்று. 'ஹி' என்னும் எழுத்து திக்கற்ற எளியாரைக் குறிக்கிறது. 'ரம்ப' என்னும் சொல் எளியாரைக் காப்பாற்றுபவன் எனப் பொருள்படுகிறது. உயிர்களைக் காப்பாற்றுபவன் கணபதி. அவனைச் சரணமடையத் தெரிந்துகொள்பவர்க்கு அழிவில்லை.

விநாயகன் என்னும் சொல் நல்லாரை அறநெறியில் நடாத்துபவன் என்பதாகிறது. வி = அற்ற; நாயகன் = தலைவன். தனக்கு வேறு ஒரு தலைவனும் இல்லாத தனிப் பொருள் என்றும் அது பொருள்படுகிறது.

தருண கணபதி, பக்தி விக்னேசுவரன், வீர விக்னேசுவரன், சக்தி கணேசன், சித்தி விநாயகன், ஊர்த்துவ கணபதி, பிங்கள கணபதி ஆகிய பெயர்கள் சர்வ சாதாரணமாக இவனுக்கு அமைந்தவைகளாகும். பிரசன்ன கணபதி நின்று கொண்டிருக்கும் மூர்த்தியாகிருன். அவனுக்கு மேலிருக்கும் இரண்டு கரங்கள் அங்குசத்தையும் பாசத்தையும் பிடித்திருக்கின்றன. கீழிருப்பவைகள வரத கரமாகவும் அபய கரமாகவும் அமைந்திருக்கின்றன. மஹா கணபதி என்பவன் பூரணன். அவன் முழுமுதற் பொருள் ஆகிருன். நிர்க்குண பிரம்மமாயிருப்பவனும் அவனே. வேதாந்தம் பகரும் சகுண பிரம்மம் அல்லது ஈசுவரன் மஹாகணபதியுடன் ஒன்றித்து விடுகிருன். பிரணவப் பொருள் அல்லது ஓங்கார மூர்த்தியெனவும் அவன் அழைக்கப்படுகிருன். பெரிய வீட்டு நாயகனுகிய இவனை உபாசிப்பவர் இகத்தில் யோக க்ஷேமத்தையும் பரத்தில் முக்தியையும் பெறுகின்றனர்.

## அர்ச்சனைக்குரிய நாமங்கள்

1. ॐ गजाननाय नमः ஓம் கஜானனாய நம:
கஜானனன்—யானைமுகத்தையுடையவன்

2. ,, विघ्नराजाय नमः ஓம் விக்னராஜாய நம:
விக்ன ராஜன்—இடைஞ்சல்களுக்கு அரசன்

3. ,, सिद्धिप्रदाय नमः ஓம் ஸித்திப்ரதாய நம:
ஸித்தி ப்ரதன்—தொடுத்த கருமத்தை நிறைவேற்றுபவன்

4. ,, गणाधिपाय नमः ஓம் கணாதிபாய நம:
கணாதிபன்—நல்லார் கூட்டத்துக்குத் தலைவன்

5. ,, पार्वतीतनयाय नमः ஓம் பார்வதீதனயாய நம:
பார்வதீ தனயன்—பார்வதியின் மைந்தன்

6. ,, हेरंबाय नमः ஓம் ஹேரம்பாய நம:
ஹேரம்பன்—போற்றுதற்குரிய வீரன்

7. ,, एकदन्ताय नमः ஓம் ஏகதந்தாய நம:
ஏக தந்தன்—ஒற்றைத் தந்தத்தையுடையவன்

8. ,, वरप्रदाय नमः ஓம் வரப்ரதாய நம:
வர ப்ரதன்—விரும்பியதைக் கொடுப்பவன்

8. ,, अग्रपूज्याय नमः ஓம் அக்ரபூஜ்யாய நம:
அக்ர பூஜ்யன்—முதலில் வணங்கப்படுபவன்

10. ,, बालकप्रियाय नमः ஓம் பாலகப்ரியாய நம:
பாலக ப்ரியன்—பிள்ளைகளுக்கு அன்பன்

11. ओं नित्यब्रह्मचारिणे नमः ஓம் நித்யப்ரஹ்மசாரிணே நம:
நித்திய பிரம்மசாரி—பெண்கள் எல்லாரையும் தாய் சொரூபமாகப் பார்ப்பவன்

12. ,, अश्वत्थमूलवासाय नमः ஓம் அச்வத்தமூலவாஸாய நம:
அச்வத்த மூலவாஸன்—அரசமரத்தடியில் இருப்பவன்

13. ,, योगिहृन्निवासाय नमः ஓம் யோகிஹ்ருந்நிவாஸாய நம:
யோகிஹிருந்நிவாஸன்—யோகியர் ஹிருதயத்தில் வீற்றிருப்பவன்

14. ,, मोदकभक्षकाय नमः ஓம் மோதகபக்ஷகாய நம:
மோதக பக்ஷகன்—கொழுக்கட்டை உண்பவன்

15. ,, दूर्वाङ्कुराराध्याय नमः ஓம் தூர்வாங்குராராத்யாய நம:
தூர்வாங்குராராத்யன்—அறுகம்புல் கொண்டு வணங்கப்படுபவன்

16. ,, विद्याराजाय नमः ஓம் வித்யா ராஜாய நம:
வித்யா ராஜன்—கல்விக்கு அரசன்

17. ,, मूषकवाहनाय नमः ஓம் மூஷகவாஹனாய நம:
மூஷக வாஹனன்—பெருச்சாளி வாஹனன்

18. ,, विनायकाय नमः ஓம் விநாயகாய நம:
விநாயகன்—நன்கு தலைமை வகிப்பவன்

19. ओं अज्ञाननाशकराय नमः — ஓம் அக்ஞானநாசகராய நம:

அக்ஞான நாசகரன்—அறியாமையை நீக்குபவன்

20. ,, पितृभक्तिमते नमः — ஓம் பித்ருபக்திமதே நம:

பித்ரு பக்திமான்—தந்தையிடம் பேரன்பு பூண்டவன்

21. ,, वीरगणपतये नमः — ஓம் வீரகணபதயே நம:

வீரகணபதி—ஆற்றல் படைத்தவர்கூட்டத்துக்குத் தலைவன்

22. ,, ज्ञानगणपतते नमः — ஓம் ஞானகணபதயே நம:

ஞானகணபதி—ஞானியர் கூட்டத்துக்குத் தலைவன்

23. ,, सिद्धसेविताय नमः — ஓம் ஸித்தஸேவிதாய நம:

ஸித்தஸேவிதன்—பக்குவப்பட்டவர்களால் போற்றப்படுபவன்

24. ,, ग्रन्थकृते नमः — ஓம் க்ரந்தக்ருதே நம:

கிரந்த கிருத்—நூல் ஆக்குபவன்

25. ,, लंबोदराय नमः — ஓம் லம்போதராய நம:

லம்போதரன்—தொந்தி வயிறு உடையவன்

26. ,, महेश्वरामोदकराय नमः — ஓம் மஹேச்வரா மோதகராய நம:

மஹேச்வராமோதகரன்—மகேசுவரனை மகிழ்வித்தவன்

27. ,, ओङ्काररूपाय नमः — ஓம் ஓங்காரரூபாய நம:

ஓங்காரரூபன்—ஓம் என்னும் மந்திரவடிவினன்

# 5. முருகன்

தியான சுலோகம்

षडाननं योगिहृद्ध्यानगम्यं
बृहद्वीरकं दिव्यमयूरवाहनम् ।
रुद्रस्य सूनुं सुरसैन्यनाथं
गुहं सदाहं शरणं प्रपद्ये ॥

ஷடானனம் யோகிஹ்ருத்யானகம்யம்
ப்ருஹத்விரகம் திவ்யமயூரவாஹனம்
ருத்ரஸ்ய ஸூனும் ஸுரஸைன்யநாதம்
குஹம் ஸதாஹம் சரணம் ப்ரபத்யே.

ஆறு முகங்களையுடையவன், தியானம் செய்யும் யோகிகள் ஹிருதயத்தில் எழுந்தருளியிருப்பவன், பெருவீரன், அழகிய மயில் வாஹனன், சிவகுமாரன், தேவ சேனைத் தலைவன், நெஞ்சம் என்னும் குகையில் இருப்பவன்—இவனைச் சதா நான் தஞ்சமடைகிறேன்.

எந்தா யுமெனக் கருள்தந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே உமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே.

சிவகுமாரன்

அண்டமெங்குமுள்ள உயிர்கள் அனைத்தும் இறைவனிடத்திருந்து வந்தவைகள். ஆகவே, அவை யாவுக்கும் அவன் அப்பனாகவும் பராசக்தி அன்னையாகவும் இலங்குகிறார்கள். தோன்றிய உயிர்களுள் உயர்வு தாழ்வு உண்டு. கல்லினுள் உயிர் இருக்கிறது; புல்லினுள் உயிர்



முருகன்

இருக்கிறது; ஆனால் கல்லுக்கும் புல்லுக்கும் எவ்வளவு வித்தியாசம் என்பது நமக்குப் புலப்படுகிறது. புல், பூண்டு, மரம் முதலியன ஸ்தாவரம் அல்லது நிலைத் திணை. புழு, பூச்சி, புள்ளினம், விலங்கு முதலியன ஜங்கமம் அல்லது இயங்கு திணை. இயங்கு திணையில் எத்தனை தரங்கள் இருக்கின்றன என்பதும் வெளிப்படை. இனி, விலங்குக்கும் மனிதனுக்கும் உள்ள வேற்றுமையை எவரே கணக்கிடவல்லவர்! இதற்கெல்லாம் மேலாக மக்களுள் அமைந்துள்ள தராதரமோ அளப்பரியது. கல் நிலையிலிருந்து கடவுள் நிலைவரையில் மக்களைக் காணலாம். மனிதன் எவ்வளவு மேலோன் ஆக முடியும் என்பது ஒரு பெரிய கேள்வி. இக்கேள்விக்கு விடையாக சிவகுமாரன் அமைந்துள்ளான். எவ்வளவு நல்ல கனியை மனிதன் உண்டுபண்ண முடியும் என்பதைக் கண்காட்சிசாலையில் அக்கனிகளை வைத்துக் காட்டுகிறார்கள். பசுக்களை எவ்வளவு நல்ல பசுக்களாக உருவெடுக்கும்படி மனிதன் செய்துவிடலாம் என்பதைக் கால்நடைக் கண்காட்சிசாலையில் காட்டுகிறார்கள். இதற்கெல்லாம் மேலாக மனிதன் எவ்வளவு உயர்ந்த தெய்வ சொரூபம் ஆகலாம் என்பதற்குச் சாசுவதமான தெய்வக் காட்சியொன்று உண்டு. சுப்ரமண்யம் என்பது அதுவே.

ஸுப்ரமண்யம் என்னும் சொல்லில் ஸு என்பது உபசர்கம். அது முன்னே நின்று கருத்தைத் தெளிவு படுத்துகிறது. நலம், இனிமை ஆகிய இரண்டும் கூடியுள்ளது என்பதை அந்த உபசர்கம் குறிக்கிறது. பிரமண்யம் என்பதன் பொருள் பிரம்மஞானத்தில் விருப்பத்தை வளர்ப்பது என்பதாகிறது. பிரம்மஞானத்தை நாடுபவர்களிடத்து விருப்பம் கொள்ளுதல என்றும் பொருள்படுகிறது. நலத்தின்கண் நல்லாசையை வளர்ப்பவன் என்றும், நல்லார்க்கு

இனியவன் என்றும் சுப்பிரமணியனுக்கு விளக்கம் கூறலாம். பதமும் பதத்தினுடைய அர்த்தமும் சேர்ந்து பதார்த்தமாகிறது. பதார்த்தங்கள் அனைத்தும் பரம்பொருள் என்னும் பதார்த்தத்தினின்று வந்தவைகள். ஆதி பகவன் முதற்றே உலகு என்கிறது மறைமொழி. ஆக, சுப்ரமண்யன் என்னும் சொல்லை தெய்வத்துக்கு வழங்கும்போதெல்லாம் அதன் அர்த்தத்தை உணர்ந்து சொல்லுவோமானால் அது பொருள் சேர்ந்த பெருஞ்சொல் அல்லது மந்திரம் ஆகிறது.

சூரியனுக்கும் நமக்கும் வெகுதூரம். அதன் அருகில் செல்ல முடியாது. ஒருவேளை செல்ல முடிந்தால், அதை அணுகுதற்கு முன்பே நாம் உரு அழிந்து போவோம். ஆனால் சூரியனது சொரூபமாயுள்ள அக்கினியை அருகில் வைத்துக் கொண்டு அதை வேண்டியவாறு ஆராய்ந்து அதன் மகிமைகளைக் தெரிந்து கொள்ளலாம். சூரியன் போன்றவன் சிவன். சேய்மையில் இருப்பதால் அவன் சேயோன். அழலைப் போன்றவன் அண்ணலின் குமாரன். நமக்கு மிக அண்மையில் அவன் உள்ளான். நம் சொரூபமாக சுப்ரமண்யன் இருக்கின்றான். இந்த சிவகுமாரனை அறியுமளவு நம்மையே நாம் உள்ளபடி அறிகிறோம். நம் சொரூபத்தை நாம் அறியுமளவு நமக்கொரு கேடுமில்லை.

**சரவணபவன்**

உலகை உய்வித்தற்பொருட்டு உண்டுபண்ணப்பட்டவன் முருகக்கடவுள். அவன் உண்டான விதம் வியக்கத் தக்கது. சிவபெருமான் யாண்டும் தம் சொரூபத்திலேயே திளைத்திருந்தார். அவரது நின்ற நிலையைக் கலைக்க முயன்ற காமனை அவர் காய்ந்தார். ஆதிசக்தி அவரைக் குறித்துத் தவம்புரிந்து அவரை அடைந்தாள். பிறகு அவர்களுக்கு

முருகன் மைந்தனானன். ஆகவே அவன் தோற்றத்துக்கும் காமத்துக்கும் எந்தவிதமான தொடர்வும் இல்லை. தவத்தின் விளைவே முருகவேள். சிவனாரது ஐம்பொறிகளினின்று ஐந்து ஒளிப்பிழம்புகள், மனதினின்று மற்றோர் ஒளிப் பிழம்பு ஆக, ஆறு ஒளிப்பிழம்புகள் வெளிக்கிளம்பின. அவைகளின் தேஜஜைசக் கண்டு அம்பிகையே திகைத்துப் போய்விட்டாள். மற்ற தேவர்கள் அஞ்சியதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது! கங்கையை உலர்த்திவிட்டு அவ் ஒளித் திரள் சரவணப் பொய்கையில் பிரவேசித்தது. நாணல் காட்டில் உள்ள நீர்நிலை என்று சரவணப்பொய்கை பொருள் படுகிறது. ஆங்கிருந்து ஆறுமுகம், பன்னிருதோள், ஓர் உடலுடைய தெய்வக் குழவியொன்று உருவெடுத்து வந்தது. ஷண்முகன் என்பவன் அவனே.

கார்த்திகைப் பெண்கள் ஆறுபேர் அவனைப் பராமரிக்க முன்வந்தனர். அவர்கள் பொருட்டு அவன் ஆறு குழந்தைகளாகத் தன்னைப் பிரித்துக்கொள்வதுண்டு. அவர்களிடம் பால் உண்ட பிறகு ஓர் உருவமாக மாறி விடுவான்; விளையாட்டாகக் கணக்கற்ற வடிவங்களை அவன் எடுப்பான். படுத்துறங்கும் பொழுது ஒற்றை மேனியன் ஆய்விடுவான். இங்ஙனம் அவன் வளர்ந்து வருவானாயினன். கார்த்திகை மங்கையர்களால் வளர்க்கப்பட்டமையினால் அவனுக்குக் கார்த்திகேயன் என்னும் பெயர் வந்தது.

ஜீவர்களுடைய தோற்றத்துக்கே முருகக் கடவுள் முன் மாதிரியாகின்றான். சரவணப் பொய்கையானது கருப்பைக்குச் சமமானது. அது முற்றிலும் சக்தி சொரூபம். சிவ சேதனம் என்னும் பிந்து அதன்கண் நாட்டப்பெற்றது. அப்பொழுது பஞ்சேந்திரியங்களும் மனதும் ஒன்றுபட்டு விட்டன. உயிர்வகைகளுள் ஆறு அறிவோடு கூடியது மிக

உயர்ந்தது. பரஞானம் அல்லது கடவுள் ஞானத்தைப் பெறுதற்கு ஆறு அறிவு உயிரே முற்றிலும் தகுந்தது. கண், காது, வாய் போன்ற ஒவ்வோர் இந்திரியமும் தனித்தனியே பயிற்சி பெறுகிறது. கார்த்திகை மாதர் ஆறு பேரிடம் ஆறு வடிவங்களில் இருந்து வளர்க்கப்பெறுவது என்பதன் பொருள் பஞ்சேந்திரியங்களும் மனதும் நல்ல பயிற்சி பெறு தலாம். உறங்கும்பொழுது எல்லா இந்திரியங்களும் மன தும் ஒடுங்கிவிடுவதால் ஓர் உருவமாய்விடுகிறது.

பௌதிக உலகம் பரம்பொருளின் ஸ்தூலத் தோற்ற மாம். காரண வஸ்து, காரிய வஸ்து ஆகிய இரண்டும் வஸ்து என்று எடுத்துக்கொள்ளுமிடத்து ஒன்றேயாம். பரம்பொருளைக் காரண வஸ்து என்றும் பிரபஞ்சத்தைக் காரிய வஸ்து என்றும் வைத்துக்கொள்வோம். பரம்பொருள் ஷண்முகன் ஆனான். கார்த்திகை மகளிர் ஆறு பேர் அவனைப் போஷித்தார்கள். இது பரம்பொருளைப்பற்றிய வரலாறு. இனி, பூதப் பொருளைப்பற்றி பௌதிக விஞ்ஞானிகள் என்ன சொல்லுகிறார்கள் என்று பார்ப்போம். ஒவ்வொரு பூதப்பொருளும் காரண நிலையில் புரடோன் என்றும் எலக்ட்ரோன் என்றும் இரண்டு வடிவங்கள் எடுக்கிறது. புரடோன் என்பது அசையாது நடுவுநிலையெய்துகிறது. அதைச் சுற்றிச் சுற்றி எலக்ட்ரோன் என்பன பல சுழல்கின்றன. அத்தகைய பூதப் பொருள்களுள் கரி (carbon) என்பது ஒன்று. அதில் புரடோன் ஒன்று இருக்கிறது. எலக்ட்ரோன் ஆறு இருக்கின்றன. இந்த எலக்ட்ரோன் எண்ணிக்கையில் ஆறுக்கு அதிகமாகப் போய்விட்டாலும் குறைவாகப் போய்விட்டாலும் உயிர்த் தத்துவத்தை விளக்கும் சக்தியை அது இழந்து விடுகிறது. கரியில் ஆறு எலக்ட்ரோன் சேர்ந்திருந்து உயிர்த் தத்துவத்தை வளர்ப்

பதில் இயற்கையின் நடைமுறையைப்பற்றிய பேர் உண்மை ஏதாவது ஒன்று விளக்கப்பெறலாம். இது பௌதிக விக்ஞானிகளின் ஆராய்ச்சியின் பயன். இதற்கும், குமரன் ஆறு கார்த்திகை மாதர்களால் வளர்க்கப் பெற்றதற்கும் உள்ள ஒற்றுமை கவனிக்கத்தக்கது.

### சொரூப விளக்கம்

ஆறுமுகமும் பன்னிருதோளும் ஒரு மேனியும் உடையவனாக சரவணபவன் தோன்றியதில் பொருள்கள் பல புதைந்து கிடக்கின்றன. இயற்கையின் அமைப்பில் பல தலைகளுக்குத் தேவையில்லை. இரண்டு தலையுடன் ஏதாவது பிறந்தால் அது பிழைக்காது. ஆறு தலைகளுக்கு வேலை என்ன என்பது கேள்வி. பல கைகள் இருந்தால் அவைகளைப் பயன்படுத்தலாம்; பல தலைகளைப் பயன்படுத்த யாருக்கும் முடியாது. ஜீவர்களுள் மனிதனாகப் பிறந்தவனிடத்து உள்ள மகிமைகளெல்லாம் உருவெடுத்தவன் முருகன். உயர்ந்த தத்துவங்களை உருவகப்படுத்தி ஒவ்வொன்றும் ஒவ்வொரு தலையாகக் கருதப்படுகிறது. தலைபெறுகிற சிறப்பை வேறு எந்த அங்கமும் பெறமுடியாது. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தின் வடிவத்தில் இயற்கை இருக்கிறது. இவ்வைந்தின் வகையறிதற்கு ஐம்பொறிகள் அமைந்துள்ளன. இதற்கெல்லாம் மேலாக எண்ணவும் உணரவும் வல்லது மனது. இவை ஆறும் ஆறு முகங்களுக்கு ஒப்பானவை. முகம் போன்று இவை பாராட்டப்படவேண்டும். முறையாக இவைகளை வளர்க்குங்கால் ஒவ்வொன்றும் ஒரு முகத்துக்குச் சமமானது.

மானுட சரீரம் தேவாலயத்துக்கு ஒப்பானது; அல்லது இதற்கு நிகரான தேவாலயம் பிரபஞ்சத்தில் கிடையாது.

இவ்வாலயத்தின்கண் ஷட்சக்கரம் அல்லது ஆறு ஆதாரங்கள் இருக்கின்றன. மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனுஹதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு உடம்பின் கீழ்ப்பகுதியிலிருந்து நெற்றிவரையில் அமைந்துள்ளன. மூலாதாரத்தில் குண்டலினி சக்தி உருப்பெற்று எழுந்து ஒவ்வோர் ஆதாரத்துக்கும் வரும்போது ஒருபுதிய ஞானபூமி காட்சிக்கு எட்டுகிறது. புதிய முகங்கொண்டு காண்பதற்கு அது ஒப்பாகிறது. ஏழாவது சக்கரம் அல்லது ஆதாரத்துக்கு சஹஸ்ராரம் என்று பெயர். ஜீவன் ஆங்குச் செல்லும்போது அவனுக்கு ஜீவபோதம் கிடையாது. சுத்த சிவத்தில் இரண்டற அவன் கலந்துவிடுகிறான். பிறகு சிவகுமாரன் என்று அழைப்பதற்கு ஒன்றும் மிச்சமில்லை. அதற்குக் கீழே ஆறு ஆதாரங்களிலும் அவன் வேறு வேறு சொரூபங்கள் எடுத்து விளையாடலாம். ஆறு ஆதாரங்களை ஆறு படைவீடுகள் என்றும் பகர்வதுண்டு. சரீரத்தில் இருக்கின்ற ஆறு படைவீடுகளுக்கு ஒப்ப மண்ணுலகிலும் அவனுக்கு ஆறு படைவீடுகள் கற்பனையாக அளிக்கப்பட்டிருக்கின்றன. திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், பழமுதிர்சோலை, திருவாவினன்குடி அல்லது பழனி, சுவாமிமலை, திருத்தணி ஆகிய ஆறும் அத்தகைய படைவீடுகளாம். உண்மையில் உலகெல்லாம், உடல் எல்லாம் அவனுக்குப் படைவீடுகள் ஆகின்றன.

பகவான் என்னும் சொல்லுக்கு ஷட்குண சம்பன்னன் என்பது அர்த்தம். ஞானம், வைராக்கியம், வீரியம், ஐசுவரியம், ஸ்ரீ, கீர்த்தி ஆகிய ஆறும் எவனிடத்து ஒன்று சேர்ந்து இருக்கின்றனவோ அவன் பகவான். இந்த ஆறினுள் ஏதேனும் ஒன்று சிறப்பாக அமைந்துவிட்டாலேயே சாதாரண ஜீவன் ஒருவன் பெருமகன் ஆய்விடுகிறான். தெய்வ மஹிமை

கள் ஆறும் ஒன்றுசேர்ந்து மிளிருமானல் அவன் முருகக் கடவுளே ஆய்விடுகிறுன். பிறந்தது நாணல் காடு ஆகிய பிரபஞ்சம். ஆங்கு வளர்ந்திருந்து அடையப்பெறும் பெருமை யாவும் தெய்வ சம்பத்துக்களாம். ஆறுமுகமுடைய குமரே சன் இக்கோட்பாட்டை ஓயாது உயிர்களுக்கு ஞாபகமுட்டிக் கொண்டிருக்கிறுன்.

ஆறுமுகத்துக்கு ஒப்ப அவனுக்குப் பன்னிரு கைகள் அமைகின்றன. ஒவ்வொரு கையிலும் ஒரு தெய்வத்தின் ஆயுதத்தை அவன் ஏந்தியிருக்கிறுன். ஆயுதம் இல்லாதவன் அரை மனிதன். ஆயுதங்கள் பலவற்றைக் கையாளுமளவு மனிதன் நிறைமனிதன் ஆகிறுன். மனிதனுக்கும் மற்ற சிற் றுயிர்களுக்கும் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு. நகங்களே உடைத்திருப்பது சிங்கம் போன்ற விலங்குக்கு ஆயுதம். கூர்மையான அலகை உடைத்திருப்பது கழுகுபோன்ற பறவைக்கு ஆயுதம். பின்பு அத்தகைய ஆயுதங்களே மாற் றிக்கொள்ளும் சுதந்திரம் அவ்வுயிர்களுக்குக் கிடையாது. மனிதனே எண்ணியவாறு கணக்கற்ற ஆயுதங்களே மாற்றி மாற்றியெடுத்துக் கையாளலாம். எழுதுதற்கு ஓர் ஆயுதம், கல் உடைப்பதற்கு ஒன்று, நகை பண்ணுதற்கு ஒன்று, ஓவி யம் தீட்டுதற்கு ஒன்று, இசையைக் கிளப்புதற்கு ஒன்று, ரணவைத்தியம் பண்ணுதற்கு ஒன்று, அதைச் சுத்தம் பண் ணுதற்கு ஒன்று, வீடு கட்டுதற்கு ஒன்று, அதைச் சுத்தம் பண்ணுதற்கு ஒன்று, அதை இடிப்பதற்கு ஒன்று, மலர்தூவி தெய்வத்தை வணங்குதற்கு ஒன்று. உள்ளவை இரண்டு கைகள் என்றுலும் எத்தனை கைகளே உடையவனுக மனிதன் ஆயுதங்கள் மூலமாகத் தன் சொரூபத்தை விரித்தமைத்துக் காட்சி கொடுக்கிறுன் என்பதை நாம் கண்கூடாகப் பார்க் கிறேம். மனிதர்களின் மேலாம் வடிவமாயுள்ள முருகக்

கடவுள் பன்னிருகைகளை உடைத்திருப்பது மக்களுக்கு அவர்களின் ஆற்றலை ஞாபகப்படுத்துதற் பொருட்டேயாம். முயற்சியுடைய மனிதன் பல கைகளையுடையவன் ஆகலாம் என்பது உருவகப்படுத்தி நமக்கு ஷண்முகக் கடவுளால் ஞாபகமூட்டப்படுகிறது.

**சக்தியின் மூவித வடிவினன்**

சிவசொரூபம், சக்திசொரூபம் ஆகிய இரண்டும் ஒன்று சேர்ந்து அமையப்பெற்றவன் சுப்ரமண்யன். சக்தியானவள் இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி ஆகிய மூன்று இயல்புகளையும் முறையாகச் சேர்த்து விளக்கிக்கொண்டு இருப்பவளாம். சக்தியின் விளையாட்டுகளெல்லாம் இம் மூன்றனுள் பூர்த்திபெற்றுவிடுகின்றன. முருகனிடத்திலும் இம்மூன்றும் சேர்ந்து மிளிர்வதைக் காணலாம். கடவுள் விவாஹம் செய்துகொண்டவன் என்பதன் பொருளை உள்ள படி அறிந்துகொள்ளுதல் முற்றிலும் அவசியம். மக்கள் மணந்துகொள்ளுதலில் சேர்தல் பிரிதல் உண்டு. வேற்றுராக இருந்து, பிறகு உற்ருர் ஆகும் பாங்கு உயிர்களுக்கு உண்டு. இறைவனும் இறைவியும் அத்தகையவர்கள் ஆகார். தெய்வத்தையும் அவன் சக்தியையும் பிரித்து வைத்து உணர முடியாது. அக்னியும் அதன் உஷ்ணமும் இணைபிரியாது இருப்பது போன்றும், பாலும் அதன் வெண்மையும் இணை பிரியாது இருப்பது போன்றும் சிவமும் சக்தியும் இணை பிரியாதவர்கள். மக்களது இயல்புக்கு ஒப்ப நாம் திருப்தி யடைதற்பொருட்டு அவர்களுக்கு மணம் முடித்து வைக்கிருேம்.

வள்ளி தெய்வயானை சமேதனுயிருப்பவன் வடிவேலன். இவ்விரு மடந்தையர்களை அவன் அவ்வப்போது மணந்து

கொண்டான் என்றும் மொழிகிறோம். அதன் உட்கருத்தை உணர்வோம். இச்சாசக்தி வள்ளியாக வடிவெடுக்கிருள். அன்புக்கும் அதன் கிளைகளாக வரும் உணர்ச்சிகள் அனைத்துக்கும் பிறப்பிடம் இச்சாசக்தி. காந்தமும் காந்தக்கல்லும் போன்றவர்கள் வள்ளியும் வள்ளீகாந்தனும். ஆகாததை ஆக்கவல்லது அன்பு. அதற்கு அடைக்கும் தாள் இலது. அன்புக்கு உட்பட்டு முருகன் வாகமரம் ஆகின்ருன்; வயோதிகனும் ஆகின்ருன். வள்ளியின் திருமணத்தில் இத்தகைய விளையாட்டுகளைக் காண்கின்ருேம். அவன் இச்சாசக்தி வடிவினன் என்பதே அதன் உட்கருத்து ஆகும்.

கந்தனைக் கதிர்வேலவன் என்பதில் கருத்து ஒன்று உண்டு. சூரியன் போன்ற சுயப்பிரகாசம் உடையது எதுவோ அது கதிர் வீசுகிறது. இருளை நீக்கும் இயல்பு அதற்குண்டு. சுயப்பிரகாசப் பொருளிடத்து இருளைக் காண முடியாது. அது மட்டுமன்று; சூரியன் போன்ற சுயப்பிரகாசமான வஸ்து எப்பொழுதாவது எங்கேயாவது இருளைக் காணவே முடியாது. ஞானம் யாண்டும் சுயப்பிரகாசமானது. சுப்ரமண்யன் ஞான சொருபி. ஞான சக்தியே வடிவெடுத்தவன் அவன். வேலாயுதன் என்பது அவன் பெயர். கேடுகள் அனைத்துக்கும் அடிப்படையாயிருப்பது அக்ஞானம். அக்ஞான அந்தகாரத்தை அகற்ற வல்லது ஞானச்சுடர். வெற்றிவேல் உற்றதுணை என்று இயம்புங்கால் ஞானத்தின் சிறப்பு சிகரத்தில் வைக்கப்படுகிறது. கதிர்வேலவன் ஞானபண்டிதன் ஆகிருன். வேல்முருகனும் ஞான சக்தியும் ஒன்றே.

தேவர்களால் வளர்க்கப்பெற்ற சக்தி தெய்வயானை என்றும் தேவகுஞ்சரியென்றும் பெயர் படைத்திருக்கிருள். தேவர்களுக்குக் கிடைத்திருக்கும் மேலான பதவிகளெல்லாம் ஸத்கர்ம பலனாகும். தேவேந்திரனுக்கே சதக்ரது என்

பது ஒரு பெயர். அதாவது நூறு யாகங்களை வெற்றிகரமாகச் செய்ததின் விளைவாக அவனுக்கு அப்பதவி கிட்டிற்று. மேன்மையடைய விரும்புபவர் நல்வினைகளை ஊக்கத்துடன் செய்தல் வேண்டும். வானவர் அதற்கு நல்ல எடுத்துக் காட்டாக இலங்குகின்றனர். அவர்களிடத்துள்ள கிரியா சக்தியை அவர்கள் முருகனுக்கு மணமகளாகக் கொடுத்தனர். தேவகுஞ்சரி மணாளனும் அம்மடந்தையை மகிழ்வுடன் ஏற்றனன். உண்மையில் அவனிடத்து இயல்பாயுள்ள ஆற்றல் அல்லது கிரியா சக்தியை அவர்கள் அறிந்துகொண்டனர் என்பதே அதன் பொருள் ஆகும். கல்விமான் ஒருவனுக்குப் பண்டிதன் என்னும் பட்டம் கொடுக்கின்றனர். உண்மையில் கல்வி அவனுக்குச் சொந்தமாயிருந்தது; மற்றவர்கள் அதை அறிந்து கொண்டனர் என்பதே பட்டம் கொடுத்ததன் பொருள் ஆகும். அங்ஙனம் ஆறுமுகக் கடவுளிடத்து அவனுடைய சொருபமாயுள்ள கிரியா சக்தியைத் தேவர்கள் அறிந்து கொண்டதே அவனுக்கு அச்சக்தியை மணம் முடித்து வைத்ததாகும். கரும வீரன் ஒருவனுடைய திறமையைக் கரும வல்லுநர்தாமே பாராட்ட வல்லவர் ஆகின்றனர்.

சேனாபதி

நல்லுணர்வும் நல்லறிவும் நல்வினையாக வடிவெடுப்பதே இயற்கையில் எங்கும் நாம் காணும் காட்சியாகும். உள்ளன்புடையவனாகவும் தெளிந்த அறிவுடையவனாகவும் ஒவ்வொரு மனிதனும் ஆகவேண்டும். அத்தகைய பண்பாடு பாராட்டுதற்குரிய சீரிய செயலாகப் பரிணமிக்கிறது. திறமையுடன் நல்வினையாற்றும் நல்லான் ஒருவனைப் பின்பற்றுவது உலகின் இயல்பு. தகைமைக்கேற்றவாறு ஒருவன் தலைவன் ஆகிறான். தகைமையே உருவெடுத்தவன் உமையாள் மைந்தன். எனவே தேவர்களுக்கெல்லாம் அவன் சேனைத் தலை

வன் ஆகின்றான். அவனைப் பின்பற்றுதற்கு அவர்கள் தாமே முன்வந்தனர். அதனால் நலன் அனைத்தும் அவர்களுக்கு உரியனவாயின. மக்களும் முறையாக முருகனைப் பின்பற்றுவார்களாயின், அவர்களுக்கு மேன்மை யனைத்தும் உண்டாகும். 'சேனைத் தலைவர்களுள் நான் ஸ்கந்தன்' என்று கண்ணபிரான் கீதையில் பகர்ந்துள்ளான். தலைமையானது இங்ஙனம் கந்தனோடு இணைக்கப்படுகிறது. தலைமை தாங்குபவன் யார் ஆயினும் அவன் தெய்வப்பெற்றியுடையான் என்பதும் வேலவன் மூலம் வெளியாகிறது.

**யாண்டும் இளமைக்கு இருப்பிடம்**

கந்தவேள் யாண்டும் இயற்கையாக இலங்குகிறான். இயற்கையில் எங்கு பார்த்தாலும் சிவசக்தியின் பொலிவு புலனாகிறது. அன்பும் அறிவும் ஆற்றலும் ஒன்று கூடித் தாண்டவமாடுகின்றன. மூப்பும் அழிவும் தாமாகப் பின் அணிக்குப் போய்விடுகின்றன. ஓயாது தன்னைத்தானே புதுப்பித்துக்கொண்டிருப்பது இயற்கையின் விளையாட்டு. முருகனது பாலலீலை என்பது இதுவே. காலம் அவனை அளந்து பழுதுபடுத்தமுடியாது. புத்தம் புதியவனாக, இளமையே வடிவெடுத்தவனாகக் குமரன் ஒளிர்கின்றான். இளமையே தெய்வப்பெற்றி. இளமையைக் கண்டு இன்புறுதார் யார் உலகில் இருக்கின்றனர்? இளமையை ரசிப்பதும் ஒருவித இறைவணக்கம் ஆகிறது. எதை முழுமனதோடு போற்றுகிறோமோ அதை முதலில் மனோ பாவனையில் அடைகிறோம். பிறகு நம் சொரூபமே போற்றப்படு பொருள்மயமாய் மாறிவிடுகிறது. முருகனைப் போற்றுபவர் ஆத்ம சொரூபத்தின் இளமையைப் போற்றுபவர் ஆகின்றனர். ஆத்மாவானது அக்ஷரம் அல்லது அழிவுபடாத பொருள். இளமையும் ஆத்ம சொரூபமும் இணைபிரியாதவைகளாம்.

அக்னியில் ஒளி இருப்பதுபோன்று இளமையில் அழகு உளது. பலவிதமான பாங்குகளிலே அழகு தன்னைத்தானே விளக்கிக்கொண்டிருக்கிறது. குமார வடிவத்தில் பொலியும் அழகு எல்லார்க்கும் கண்கூடாக விளங்குகிறது. தூய அன்புக்கு ஓர் அழகு உண்டு. தெளிந்த அறிவுக்கு இன்னொருவித அழகு இருக்கிறது. ஒழுக்கம், இன்சொல் ஆகியவைகளில் வேறு ஒருவித இனிமை பிரகாசிக்கிறது. பராக்கிரமம் என்னும் வீரச்செயலுக்கு வீண்போகாத் தன்மையாகிய அழகு இருக்கிறது. முருகன் என்றால் அழகுக்கடவுள் எனப்பொருள்படுகிறது. எல்லாவித அழகும் திரண்டு உருவெடுத்தவன் அவன். அழகைப் போற்றுபவர் அறிந்தோ அறியாமலோ பரமனையே போற்றுகின்றனர். தெளிந்த மனங்கொண்டு பார்ப்பவர்க்குப் பார்க்குமிடமெங்கும் அழகுத் தெய்வத்தின் தரிசனம் தோன்றும். முருகனைத் தவிர இயற்கையில் வேறு ஒன்றுமில்லை.

உயிர்கள் எல்லாம் தெய்வத்துக்கு வாகனங்கள் ஆகின்றன. அவைகளுள் அந்தந்த தெய்வத்துக்குச் சிறப்பாக அமைந்துள்ள வாகனம் அதன் சொருபத்தையோ செயலையோ ஒருவாறு விளக்குகிறது. வேலவனுக்கு வாகனம் மயில் அது பெரிதும் ஒரு பாம்பின் மீது நின்றுகொண்டு தோகையை விரித்து ஆடிக்கொண்டிருக்கும். ஸர்ப்பம் சக்தியின் சின்னமாகும். அது மயிலுக்கு அடங்கி நடக்கிறது. சக்தி வடிவேலன் சக்தியை முற்றும் ஆளுகிறான் என்பது கோட்பாடு. ஆற்றலை வளர்ப்பதே முருகனுடைய உபாசனையாகும். இயற்கையின்கண் உள்ள அழகெல்லாம் அவனைச் சார்ந்தவைகள் என்பதையும் மயில்வாகனம் விளக்குகிறது. உயிர்வகைகளுள் அழகில் மயிலுக்கு ஒப்பானதைக் காண்பது அரிது. முட்டையில் இருக்கும்பொழுது அதன் சௌந்தர்யம்

மறைந்துகிடக்கிறது. குஞ்சாகப் பொரிந்து வருங்கால் அது அவ்வளவு விசித்திரமுடையதாகிறது. முருகனுடைய மஹிமைகளில் லாவண்யம் மிக முக்கியமானது.

**பிரம்மாவைச் சிறையில் வைத்தல்**

உலகைப் படைத்தவனை பிரம்மா என்கிறோம். ரஜோ குணத்தோடுகூடிய மனதே பிரம்மா என்னும் பெயர் பெறுகிறது. தூக்கத்தில் நமது மனது ஒடுங்குங்கால் நமக்கு உலகம் இல்லை. விழிப்பில் மனது விருத்தியடையும்போது உலகும் காட்சிக்கு வருகிறது. இதைப் பொதுவாக அந்தக்கரணம் என்று சொல்லிப் பிறகு மனம், சித்தம், புத்தி, அஹங்காரம் என நான்காகப் பிரிப்பதுண்டு. இந்த நான்கு பிரிவும் பிரம்மாவுடைய நான்கு முகங்களாகின்றன.

மனதின்கண் உள்ள வெவ்வேறு ஆசைகளே சிருஷ்டிக்கு வித்துக்களாகின்றன. ஆசையை வென்றவன் மனதை வென்றவன் ஆகிறான். மனதை முற்றும் வென்றவனே நல்ல மனிதன். மனதை வென்றவனுக்கு இவ்வுலகில் நல்வாழ்வு தானே வந்தமைகிறது. மனதை அடக்கியவன் மாயையைக் கடந்து முக்தி பெறுகிறான். இவை யாவும் மனிதனுக்கே சாத்தியம் என்று முருகன் தனது விளையாட்டின் வாயிலாகக் காட்டுகிறான். சிருஷ்டி கர்த்தாவாகிய நான்முக பிரம்மாவுக்குத் தன் தொழில்புரிய அனுமதி கொடுப்பதும், அல்லது அவனை அடக்கிச் சிறையில் வைப்பதும் சான்றோர்க்குச் சாத்தியமாகிறது என்பதே முருகவேளின் போதனையாம். மனதை அடக்க முயலுபவரே உண்மையில் முருகனை வழிபடுகின்றனர்.

**சூரசம்மாரம்**

முருகக் கடவுள் நல்ல சேனாபதியாயிருப்பதால் நல்ல போர்வீரனாகவும் இருக்கிறான் என்பது வெளிப்படை. அகி

லாண்டத்துக்கும் ஆண்டவனுயிருப்பவன் யாரை எதிர்த்துப் போர்புரிவது என்பது கேள்வி. வாழ்க்கைத் தத்துவத்தை விளக்குவது வேலனுடைய விளையாட்டு. வாழ்க்கையில் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று விளையாட்டு; மற்றொன்று போராட்டம். போராட்டமில்லாத பிரபஞ்ச வாழ்வு கிடையாது. இரண்டுவித இயல்புகள் ஒன்றையொன்று வெல்ல முயல்வது யுத்தகாண்டமாம்.

வாழ்க்கையின் ஆரம்பதசையில் ஆசையும் அஹங்காரமும் முன்னேற்றத்துக்கு முற்றிலும் அவசியமாகின்றன. அஹங்காரத்தின் வளர்ச்சியாலேயே சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிக்கின்றன. ஆசையை நிறைவேற்றுவதன் மூலம் நல்ல அனுபவங்கள் உண்டாகின்றன. நல்ல அனுபவங்கள் ஞானத்துக்கு வித்துஆகின்றன. ஒரு படித்தரத்துக்கு வந்தான பிறகு அஹங்காரத்தையும் ஆசையையும் அறவே களைந்தாகவேண்டும். தென்னங்குரும்பைக்கு மேல் மட்டை முற்றிலும் அவசியமானது. பிறகு தேங்காயை உண்ணுதற்காகத் தென்னை நெற்றினின்று மட்டையை உரித்தாகவேண்டும். மட்டையை உரிப்பது போராட்டமாம். அத்தகைய போராட்டமில்லாது தேங்காயை நாம் பெற முடியாது. அதே பாங்கில் நம் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் அசுர இயல்போடு நாம் போராடியாகவேண்டும். இக்கோட்பாட்டை அறிந்துகொண்டால் யுத்தம் எவ்வளவு அவசியமானது என்பது விளங்கும்.

சூரபத்மன், ஸிம்ஹமுகன், அதிசூரன், பானுகோபன் முதலிய அஸுரர்கள் பராக்கிரமம் மிக வாய்க்கப்பெற்றவர்கள். எவராலும் அவர்களை வெல்ல முடியாது. தேவர்கள் எல்லாம் அவர்களுக்கு அடிமைப்பட்டவர்கள். வேதாந்தக் கோட்பாட்டின்படி அஹங்காரம், காமம், குரோதம் முத

லிய அடாத அந்தக்கரண விருத்திகளே அஸுரர்கள் என்று உருவகப்படுத்தி இயம்பப்படுகின்றன. அஹங்காரத்தினின்றும் ஆசாபாசத்தினின்றும் மனதில் எழும் எண்ணிறந்த புல்லிய எண்ணங்களே அஸுரப்படைகளாகும். தேகம் எடுத்துள்ள யார்தான் அவைகளுக்கு அடிமையாகிறதில்லை? ஆனால் அவைகளை அடக்கி அழிப்பதே வாழ்க்கையின் குறிக்கோள் ஆகும். அம்மையப்பன் அருளால் அவதரித்த கந்தவேள் அஸுரர் கூட்டத்தை வேர் அறுப்பதற்கென்றே முற்படுகிறான். பெரும் போர் நிகழ்கிறது. அரக்கர் கூட்டம் முழுதும் சம்மாரமாகிறது. சேனைத் தலைவன் ஆகிய முருகனை வழிபடுபவர் செய்யவேண்டிய சீரிய செயல் இதுவேயாம். மனத்தகத்து ஓயாது முளைத்துவரும் அற்ப எண்ணங்களை அறவே அகற்றவேண்டும். அவைகளைச் சம்மாரம் செய்யும் ஒவ்வொருவனும் உண்மையாக சிவகுமாரனுடைய பக்தன் ஆகிறான். அவனுடைய அருளைக்கொண்டு அற்பத் தன்மையை அகற்றி அவன்மயம் ஆகவேண்டும்.

**குஹன்**

மலையில் உள்ள பொந்துக்கு குஹை என்று பெயர். உள்ளத்தினுள்ளும் அத்தகைய குஹையொன்று உளது. தஹராகாசம் என்றும், கந்தகோட்டம் என்றும் அதைச் சொல்லுவதுண்டு. ஆங்கு வீற்றிருக்கும் பரம்பொருள் குஹப் பிரம்மம் எனப்படுகிறது. அது எவ்வளவு பெரியது, எவ்வளவு ஆழ்ந்தது, எவ்வளவு வலியது என்பது நமக்குத் தெரியாது. ஆயினும் அதை அறிந்தால்தான் அப்பொருளை நாம் முறையாகப் போற்ற முடியும். வீட்டுக்குள் நாம் உட்கார்ந்துகொண்டிருக்கிறோம். வெயிலும் மழையும் நம்மை உபத்திரவப்படுத்தாதபடி மேற்கூரை நம்மைப் பாதுகாக்கிறது. அத்தகைய கூரையைப் பொத்துக்கொண்டு மேலே

போனல் நாம் எவ்வளவு தூரம் போகமுடியும் என்பதை ஒருநாளும் நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. வாயுவேகம் மனேவேகமாக எத்தனை கோடி வருஷகாலம் போனலும் அப்போக்குக்கு முடிவில்லை. வெட்டவெளி அத்தகைய அகண்டாகாரமானது. அதே பாங்கில் உள்ளத்தினுள்ளே சிந்தனையைச் செலுத்தினல் அது அளப்பரிய ஆழத்திலும் அகலத்திலும் செல்லவல்லது. தஹராகாசம் நமக்குள்ளே அவ்வளவு பெரியதாயிருக்கிறது. அது முழுதும் குஹப்பிரம்ம சொரூபம். சுப்ரமண்யம் நமது ஹிருதய குஹையில் நிறைந் திருக்கிருன். அதை உணர்வதே நல்ல வழிபாடு ஆகிறது.

பெரிய ஆலமரம் ஆகக்கூடிய ஆலம் வித்தானது மிக நுண்பொருளாயிருக்கிறது. ஆயினும் அவ்வளவு பெரிய மரமாய் விரிவடையும் ஆற்றல் அதனுள் மறைந்திருக்கிறது. நமது உள்ளத்தினுள் இருக்கிற நுண் உணர்வு சர்வசக்தி வாய்ந்தது. சக்தி வடிவேல் என்று அதைச் சொல்லலாம். அது பேர் உணர்வு ஆகுமளவு குஹக்கடவுள் சொரூபமாக நாம் ஆகலாம். வடிவத்தில் மனிதன் குமானுஷன் எனப்படு கிருன். வீட்டுக் கூரைக்குமேல் அகண்டாகாரப் பெரு வெளியிருப்பது போன்று மானுட உள்ளத்தினுள்ளே அகண் டாகாரமான அறிவுப் பெருவெளியுள்ளது. அந்தக்கரணத் திரையை நீக்கினல் அதன் தரிசனம் கிட்டும். 'குஹாய நம:' வென்று அதை வழுத்தி அதைச் சார்ந்திருப்பதே திரையை நீக்குவதற்கு உற்ற உபாயம்.

### ஞானபண்டிதன்

எல்லா உயிர்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன் ஒரு வனே. மனசாக்ஷியாக முருகக்கடவுள் மனம் என்னும் மலர்மிசையேகியிருக்கிருன். அவனுடைய ஞானக் களஞ் சியம் அண்டகோடிகளில் உள்ள உயிர்களின் ஞானமாக

ஒளிர்கிறது. அதுமட்டுமல்ல; ஞானத்துக்கு ஏற்ற ஆற்றல் ஒவ்வோர் உயிரினிடத்தும் இருக்கிறது. இவ்வாற்றலைப் பேராற்றல் ஆகும்படி தூண்டுபவன் சித்தமிசை குடிகொண்டுள்ள செவ்வேள் ஒருவனே. ஞானத்தைப் பரஞானமாகும்படி வளர்த்து வருபவனும் அவனே. ஆக, ஆத்மாக்களை ஓயாது பக்குவப்படுத்தி வருபவன் அவனே. மனத்தகத்து அவன் மறைந்திருந்து அவ்வுயிர்களைத் தூண்டி வருவதால் அவன் மறைநாயகன் ஆகிறான். அறிவைச் சிறிது 'சிறிதாக அவன் விரித்து வருவதால் அவன் வேதநாயகன். பிறவிப் பிணியை இறுதியாகப் போக்கிவிடுவதால் அவன் ஞான பண்டிதன். மனசாக்ஷிக்கு இணங்கி நடப்பதே முருகவேள் உபாசனையாம்.

**சுவாமிநாதன்**

குமரக்கடவுளுக்கு சுவாமிநாதன் என்றும் தகப்பன் சுவாமியென்றும் பாலகுருநாதன் என்றும் பெயர்கள் வரலாயின. 'ஓம்' என்னும் பிரணவத்தின் உட்பொருளை அவன் சிவனுக்கு எடுத்து ஓதியதே அதற்குக் காரணமாகும். அழுக்குப்படிந்த நீர் தேவாராதனைக்கு உரிய தூய நீராக மாறவல்லது. சித்தத்தில் உள்ள மலம் அறுபட்டால் ஜீவன் சிவ சொரூபம் ஆகவல்லவன். மகன் தந்தைக்கு ஒப்பானவன். ஆனால் அது தந்தைக்குப் பெருமகிழ்ச்சியூட்டுகிறது. மானுடன் ஒவ்வொருவனிடத்திலும் முருகக் கடவுளின் மஹிமைகள் அத்தனையும் இருக்கின்றன என்பதையே அவன் நமக்கு ஞாபகமூட்டுகிறான். அதற்குமேல் ஒவ்வொரு மனிதனும் சிவ குருநாதன் ஆகலாம் என்பதையும் அவன் அறிவுறுத்துகிறான். அவன் சொரூபம் ஆவதே அவனுக்கு ஏற்புடைய வணக்கமாம்.

## அர்ச்சனைக்குரிய நாமங்கள்

1. ओं कुमाराय नमः — ஓம் குமாராய நம:

2. ,, बालसुन्दराय नमः — ஓம் பாலசுந்தராய நம:

3. ,, कार्तिकेयाय नमः — ஓம் கார்த்திகேயாய நம:
கார்த்திகேயன்—கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவன்

4. ,, कुक्कुटध्वजाय नमः — ஓம் குக்குடத்வஜாய நம:
குக்குட த்வஜன்—சேவல் கொடியுடையவன்

5. ,, कलिप्रत्यक्षदेवाय नमः — ஓம் கலிப்ரத்யக்ஷதேவாய நம:
கலிப்ரத்யக்ஷ தேவன்—கலிகாலத்தில் கண்கண்ட தெய்வம்

6. ,, गुहाय नमः — ஓம் குஹாய நம:
குஹன்—உள்ளத்தில் இருப்பவன்

7. ,, गौरीतनयाय नमः — ஓம் கௌரிதனயாய நம:
கௌரிதனயன்—அம்பிகையின் மைந்தன்

8. ,, गिरिनिवासाय नमः — ஓம் கிரிநிவாஸாய நம:
கிரிநிவாஸன்—மலையில் வசிப்பவன்

9. ,, अग्निसूनवे नमः — ஓம் அக்னிஸூனவே நம:
அக்னிஸூனு—தீயில் தோன்றியவன்

10. ,, दण्डपाणये नमः — ஓம் தண்டபாணயே நம:
தண்டபாணி—கையில் தடி வைத்திருப்பவன்

11. ओं ज्ञानपण्डिताय नमः ஓம் ஞானபண்டிதாய நம:
ஞானபண்டிதன்—ஞானமே வடிவெடுத்தவன்

12. ,, स्कन्दाय नमः ஓம் ஸ்கந்தாய நம:
ஸ்கந்தன்—துள்ளிக்குதிப்பவன்

13. ,, वल्लीदेवसेनापतये नमः ஓம் வல்லீதேவஸேனாபதயே நம:
வள்ளீதேவஸேனாபதி—வள்ளிக்கும் தெய்வயானைக்கும் நாதன்

14. ,, शरवणभवाय नमः ஓம் சரவணபவாய நம:
சரவணபவன்—நாணல் காட்டில் தோன்றியவன்

15. ,, वेदतत्वोपदेशकाय नमः ஓம் வேதத்வோபதேசகாய நம:
வேததத்வோபதேசகன்—வேதத்தின் உட்பொருளை உபதேசித்தவன்

16. ,, महेश्वरगुरवे नमः ஓம் மஹேச்வரகுரவே நம:
மஹேச்வர குரு—சிவனார்க்கு குருவானவன்

17. ,, षडाननाय नमः ஓம் ஷடானனாய நம:
ஷடானனன்—ஆறுமுகன்

18. ,, स्वामिनाथाय नमः ஓம் ஸ்வாமிநாதாய நம:
ஸ்வாமிநாதன்—தகப்பனுக்குத் தலைவன்

19. ,, शिखिवाहाय नमः ஓம் சிகிவாஹாய நம:
சிகிவாஹனன்—மயில் வாஹனமுடையவன்

20. **ओं वेदमन्त्रस्वरूपाय नमः** ஓம் வேதமந்த்ரஸ்வருபாய நம:
வேதமந்த்ர ஸ்வருபன்—வேதமந்த்ரத்தின் வடிவினன்

21. ,, **तारकजेत्रे नमः** ஓம் தாரகஜேத்ரே நம:
தாரகஜேத்ரா—தாரகன் என்ற அரக்கனை வென்றவன்

22. ,, **सेनान्ये नमः** ஓம் ஸேனான்யே நம:
ஸேனானீ—படைத்தலைவன்

23. ,, **रुद्रसंभवाय नमः** ஓம் ருத்ரஸம்பவாய நம:
ருத்ரஸம்பவன்—சிவனார் மகன்

24. ,, **रूपलावण्य विग्रहाय नमः** ஓம் ருபலாவண்ய விக்ரஹாய நம:
ருபலாவண்ய விக்ரஹன்—அழகு தெய்வம்; முருகன்

25. ,, **सुराराध्याय नमः** ஓம் ஸுராராத்யாய நம:
ஸுராராத்யன்—தேவர்களால் வணங்கப்படுபவன்

26. ,, **नादबिन्दुकलातीताय नमः** ஓம் நாதபிந்துகலாதீதாய நம:
நாதபிந்துகலாதீதன்—இயற்கைக்கு அப்பாற்பட்டவன்

27. ,, **सुब्रह्मण्याय नमः** ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:
ஸுப்ரஹ்மண்யன்—பிரம்மத்தை நன்கு சார்ந்திருப்பவன்

## 6. மஹாவிஷ்ணு

सशङ्खचक्रं सकिरीटकुण्डलं
सपीतवस्त्रं सरसीरुहेक्षणम् ।
सहारवक्षः स्थलकौस्तुभाङ्कम्
नमामि विष्णुं शिरसा चतुर्भुजम् ॥

ஸசங்கசக்ரம் ஸகிரீட குண்டலம்
ஸபீதவஸ்த்ரம் ஸரஸீருஹேக்ஷணம்
ஸஹாரவக்ஷ: ஸ்தல கௌஸ்துபாங்கம்
நமாமி விஷ்ணும் சிரஸா சதுர்புஜம்.

சங்கு, சக்கரம், கிரீடம், குண்டலம், மஞ்சள்மடி, தாமரைக் கண், மாலை, மார்பில் கௌஸ்துபம், நான்கு கைகள் — ஆகியவை களையுடைய விஷ்ணுவை வணங்குகிறேன்.

திருவுக்கும் திருவாகிய செல்வா !
தெய்வத்துக்(கு) அரசே! செய்ய கண்ணா!
உருவச்செஞ்சுடர் ஆழி வல்லானே !
உலகு (உ)ண்டா ஒருவா ! திருமார்பா !
ஒருவர்க்(கு) ஆற்றி உய்யும் வகை இன்றால்
உடன் நின்று ஐவர்என் உள்புகுந்(து) ஒழியா(து)
அருவித்தின் றிடஅஞ்சி நின் அடைந்தேன்
அழுந்தூர்மேல் திசைநின்ற அம்மானே !

### திரு அரங்கம்

தமிழகத்தில் முதன்மை பெற்றுள்ள ஆறு பொன்னி ஆறு. இது பெரிதும் காவிரி நதி என்னும் பெயர் பெற்று வழங்குகிறது. பின்பு தக்ஷிணகங்கையென்றும் இதைச்

நம் சிற்றறிவைக்கொண்டு கடவுளைச் சிறிது தெரிந்துகொள்ளலாம். தெரியாத பகுதியோ எல்லையில் அடங்காதது. பரமனை எண்ண எண்ண, அறிய அறிய, மனது அகண்டாகாரத்தில் விரிந்தோடிப் பரத்தின்பால் கலந்துவிடும். தேசத்தின் படமும் வானத்தின் படமும் நம்பொருட்டு அமைக்கப் பெற்றவை. ஆலயத்தினுள் ஒரு மூர்த்தியாகத் தெய்வம் எழுந்தருளியிருப்பதும் நம் பொருட்டே. அவன் எத்தகைய மாண்பொருளென்று நம் மனதை அவன்கண் செலுத்திப் பார்ப்போம்.

பூரணப்பொருளாகிய அவனுக்கு அமைந்த பல்லாயிரம் பெயர்களில் அரங்கநாதன் என்பதும் ஒன்று. அரங்கம் என்னும் பதத்துக்கு அர்த்தம் பல உள. ஆற்றினுள் அமையும் தீவு அரங்கம் என்னும் பெயர் பெறுகிறது. கலைகள் பல பயிலும் இடத்துக்கும் அதே பெயர் வந்துள்ளது. ஆடல், பாடல் நடைபெறும் மேடையும் அங்ஙனம் அழைக்கப்படுகிறது. சான்றோர் கூட்டத்தையும் அதே சொல் குறித்துக் காட்டுகிறது. நிலத்துக்கும் அரங்கம் என்ற பதத்தைப் பிரயோகிக்கலாம். அண்டம் முழுதுக்கும் அதுவே பெயர். பெருநிலமாகிய பரமபதத்துக்கு அதே வார்த்தை வழங்கப் பெறுகிறது. அண்டபகிரண்டமாக, இகபரமாகப் பரந்துள்ள அரங்கத்துக்குத் தலைவனாயிருப்பவன் அரங்கநாதன். தலைவன் இல்லாத குடும்பம் குடும்பமாகாது. ஆங்கு எல்லாம் நிலைகுலைந்துவிடும். பிரபஞ்சம் என்னும் பெரிய குடும்பத்துக்கு அரங்கநாதன் தலைவன் ஆகிறான்.

### எங்கும் நிறைபொருள்

கார்மேக வண்ணன் என்றும், நீல நிறமுடையோன் என்றும் அவன் வர்ணிக்கப்படுகிறான். நிறம், குணம், குறி

ஒன்றுமில்லாதவனுக்கு நிறமும் வடிவமும் வழங்கப்பெற்றுள்ளன. நிறமில்லாத நீர் கடலாக விரியுமிடத்து நீல நிறமுடையதாகத் தோன்றுகிறது. வெட்டவெளிக்கு வர்ணமொன்றுமில்லையெனினும் பார்வைக்கு அது நீல நிறமாகத் தோன்றுகிறது. எங்கும் வியாபகமாக விரிந்திருப்பதற்குத் தோற்றத்தளவில் நீல நிறம் வருவது இயல்பு. இயற்கையின்கண் மலையிலும், கடலிலும், வெட்ட வெளியிலும் இப்பாங்கு நமக்கு நன்கு புலப்படுகிறது. தென்படுகிற இயற்கை போன்று தென்படாத பரமபுருஷன் நீக்கமற எங்கும் நிறைந்தவன். விஷ்ணு என்னும் பதத்துக்குப் பொருள் எங்கும் வியாபகமானவன் என்பதாகிறது. விரிந்து பரந்துள்ள பொருள் நீல நிறமுடையவனாகக் கருதப்படுவது பொருத்தமானது.

இப்பரம்பொருளுக்கு ஆதிதேவன் என்று பெயர். இவன் ஆதிசேஷன் என்ற சர்ப்பத்தின்மீது சயனித்து இருக்கிறான். அனைத்துக்கும் முன்னிருப்பவன் ஆதிதேவன். அவனுக்கு முந்தையது ஒன்றுமில்லை. ஏனென்றால் அவன் ஆதிதேவன்; என்றாலும் அனாதியானவனே. அவனுக்குத் துவக்கம் கிடையாது. அங்ஙனமே அந்தம் அல்லது முடிவும் அவனுக்கில்லை. அண்டங்களின் ஒடுக்கம் அவனுக்கு இடைஞ்சல் உண்டுபண்ணமாட்டாது. குடியிருந்த வீடு இடிந்துபோனால் நாம் அல்லற்படுகிறோம். அவனுக்கோ அதொன்றுமில்லை. வீற்றிருக்கும் பாங்கை முன்னிட்டு அவனுக்கு நாராயணன் என்ற பெயர் வந்தது. நாரா என்றால் புருஷனிடத்திருந்து தோன்றிய பூதங்கள் முதலிய பிரபஞ்சப்பொருள்கள். அயனன் என்றால் அமர்ந்திருப்பவன். நாரா + அயனன் = நாராயணன் என்றானது. தன்னிடத்திலிருந்து உண்டான நூல் வலையில் சிலந்திப்பூச்சி குடியிருப்

பது போன்று தன்னிடத்திலிருந்து உண்டான பிரபஞ்சம் முழுதிலும் பரமபுருஷன் அந்தர்யாமியாய் வீற்றிருக்கிறான். எனவே அவன் நாராயணன். ஆதிசேஷன் மீது அவன் சயனித்திருக்கிறான். சேஷம் என்றால் எஞ்சியிருப்பது. உலகெல்லாம் ஒழிந்துபோன பிறகு எஞ்சியிருப்பது எது என்ற கேள்வி வருகிறது. வளர்கின்ற செடி கொடிகள் முதிர்ந்து தேய்ந்து போன பிறகு எஞ்சியிருப்பது எது? அவைகளில் உண்டான விதைகள் தான் மிஞ்சியிருக்கின்றன. அண்டங்களெல்லாம் ஒடுங்கி அவ்யக்த நிலைக்கு வருவதைக் கடல் விளக்குகிறது. எங்கும் அசைவற்ற ஒரே நீர்மயம். ஓரளவு அது பிரளயத்தைக் குறிக்கிறது. அப்பொழுது அண்டங்கள் அனைத்துக்கும் சேஷமாயிருப்பது ஆதிசக்தி. 'மூலப்பிரகிருதி என்பதும் இதுவே. சர்ப்பம் எப்பொழுதும் சக்தியின் சின்னம். ஆதிசேஷன் என்னும் சர்ப்பம் ஐந்து தலையுடையவனாகவும் ஆயிரம் தலையுடையவனாகவும் கருதப்படுகிறான். ஐந்து தலைகள் பஞ்சபூதங்களைக் குறிப்பனவாகும். ஆயிரம் தலைகளோ எண்ணிக்கையில் அடங்காத உயிர்களைக் காட்டுகின்றன. இவையாவும் ஒடுங்கிக் காரண நிலைக்குப் போய் விடுகின்றன. இப்படி மிஞ்சியிருக்கிற ஆதிசக்தியும் ஆதிதேவனுக்குப் புறம்பானதல்ல. அவன் அந்த சக்திக்கும் ஆதிமூலம். பொருளை நிழல் சார்ந்திருப்பது போன்றும், அக்னியில் உஷ்ணம் அபின்னமாயிருப்பது போன்றும் மூலப்பிரகிருதியானது மாதவனை இருப்பிடமாய்க் கொண்டிருக்கிறது. தோற்றத்திலும் ஒடுக்கத்திலும் நல்லவனுக்கு அன்னியமாக சக்தியிருக்க முடியாது. இக்கோட்பாட்டை உருவகப்படுத்திக் கவிதைரசம் பொருந்தப் பாம்பின்மீது பள்ளிகொண்ட பெருமாள் என்று பகர்கிறோம்.

**ஆதிமூலம்**

அண்டங்கள் அனைத்துக்கும் சிருஷ்டி கர்த்தாவாயிருப்பவர் பிரம்மா. இவருக்கு நான்கு முகங்கள் உண்டு. நான்கு முகங்களை வாச்சியார்த்தமாக எடுத்துக் கொள்ளுவது பொருந்தாது. லட்சியார்த்தமாகப் பார்த்தால் நான்கு முகங்களுக்குப் பரந்த பொருளுண்டு. நான்கு வேதங்கள், நான்கு புருஷார்த்தங்கள், நான்கு அந்தக்கரணங்கள், நான்கு வர்ணங்கள், நான்கு ஆச்ரமங்கள், நான்கு அவஸ்தைகள் சிருஷ்டியில் இருக்கின்றன. பெருமாளின் பெயர்களில் ஒன்று பத்மநாபன். தாமரை போன்ற நாபியை அவன் உடைத்திருக்கிறான். அது சூரியன் போன்று பிரகாசமானது. அந்த நாபிக் கமலத்தினின்று நான்முகன் தானாகத் தோன்றி வந்தான். ஆகையால் அவனுக்கு ஸ்வயம்பு என்னும் பெயர் வந்தது. பிரகாசிக்கின்ற பொன் போன்ற முட்டையாக முதலில் அவன் வெளியே வந்தான். ஆதலால் அவனுக்கு ஹிரண்யகர்ப்பன் என்ற நாமம் நிலைத்தது. தான் தோன்றிவந்த தாமரையின் தண்டு வழியாகப் பிரம்மதேவன் உள்ளே சென்று பார்த்தான். தனக்குப் பிறப்பிடமாகிய தாமோதரனைப் பற்றி அவன் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. அறிய அறிய, அறிவில் அடங்காதவனாய் அவன் அகண்டாகாரத்தில் விரிந்து போய்க்கொண்டிருந்தான். தனது ஆதிமூலத்தை அறிந்துக்கொள்ள முடியாதவனாய் அயன் வெளியில் தோன்ற ஆரம்பித்தான். ஸ்வயம்பு என்பதன் பொருள் இதுவே. பஞ்சபூதங்களாக, அண்டங்களாக, உயிர்வகைகளாக இயற்கையனைத்துமாய் வந்துள்ளது பிரம்மாவின் தோற்றம். காலதேச நிமித்தமாய்ப் படைப்புக் கடவுள் காட்சிக் கொடுத்துக்கொண்டிருக்கிறான். இயற்கை வேறு, பிரம்மா வேறு அல்ல. ஒரே பொருள்

ஹிரண்யகர்ப்பன் என்றும், பிரம்மாவென்றும், இயற்கையென்றும், பிரபஞ்சமென்றும், ஜகத் என்றும் பெயர் பெறுகிறது. இதைத்தான் அரங்கம் என்றும் சொல்லுகிறோம். இதற்குத் தலைவனாயிருப்பவன் ஜகந்நாதன் அல்லது அரங்கநாதன். அரங்கம் அமைந்திருப்பது அரங்கநாதனது அற்புதங்களை விளக்குதற்கென்றேயாம். ஒரு வீட்டுக்குத் தலைவன் நம் காட்சிக்குத் தென்படாவிட்டாலும், வீட்டின் அரிய அமைப்பைக்கொண்டு அந்த வீட்டுக்கு உடையவனின் உயரிய பாங்கைத் தெரிந்துகொள்ளலாம். அரங்கத்தின் மூலம் அரங்கநாதன் தம் மகிமைகளை விளக்குவது அவனுடைய தடஸ்த லக்ஷணமாகும். இனி, அரங்கநாதனை அழகன் என்று இயம்பலாம். தெய்வ சம்பத்துக்களில் அழகு ஒன்று. அழகை ரசிப்பவர்கள் தங்களையறியாது தெய்வ சொரூபத்தில் லயமாகிறார்கள். வடிவத்திலும், ஓசையிலும், ஒளியிலும் அழகுண்டு. அங்ஙனம் அசைவிலும் அழகுண்டு. ஆடும் தெய்வம் அசைவிலுள்ள அழகைக் காட்டுகிறது. சயனித்திருப்பதில் சௌந்தரியம் உண்டா என்னும் கேள்வி வருகிறது. படுத்துறங்குபவர் பொதுப்படப் பிணம்போன்று கிடக்கின்றனர். காட்சிக்கும் அவர்கள் பிணத்துக்கு ஒப்பாவார்கள். முகத்தில் களையொன்றுமிராது. அச்சத்தை அல்லன் அருவருப்பை உண்டுபண்ணும் பாங்கு யாண்டும் புலப்படும். அனந்தசயனம் அத்தகையதன்று. அரங்கத்து அம்மான் பள்ளிகொண்டிருப்பதில் பொலிவொன்று உண்டு. பார்க்கப் பார்க்கஅது பூரிப்பை உண்டுபண்ணுகிறது. காந்தம் ஊசியைக் கவர்வதுபோன்று அன்பர் உள்ளத்தை அது கொள்ளைகொண்டு போகிறது. நாம் இருக்கவேண்டிய பெருநிலை அது என்ற பெற்றி நம் புத்தியிலே தோன்றுகிறது. ஏனென்றால் அது தெய்வத்தின் தூக்கம். தெய்வத்தின் தூக்கத்தில்

களையும் லாவண்யமும் உள. அதை அறிபவர் தெய்வத்தையே அறிபவர் ஆகின்றனர். அரங்கநாதன் அணிந்திருக்கும் கிரீடமும், கௌஸ்துபம் என்னும் ஆபரணமும் சேர்ந்து அவனுடைய அழகைப் பன்மடங்கு அதிகப்படுத்துகின்றன. ஆபரணத்தின் தன்மையொன்று உண்டு. அழகை அது மேலும் அழகுபடுத்துகிறது. அழகற்றதை அது அதிகம் அழகற்றதாக்கிவிடுகின்றன. அரங்கநாதனிடத்தோ அணியும் அழகும் அவன் மயமாய்த் திகழ்கின்றன. சயனித்திருக்கும் பொழுதும் அவன் சௌந்தரியமே வடிவெடுத்தவன்.

அப்புருஷோத்தமன் ஸ்ரீநிவாசன் என்று அழைக்கப்படுகிறான். திருமகளுக்கும் அவனே இருப்பிடம். அவனுடைய இருதய கமலத்தில் கமலாசனி குடியிருக்கிறாள். அத்தகைய லக்ஷ்மியின் பிரபாவம் அண்டங்களனைத்திலும் வியாபித்துள்ளது. அவளது கடாக்ஷம் உயிர்கள் அனைத்துக்கும் புருஷார்த்தங்கள் நான்கையும் வழங்க வல்லது. அருளுக்குப் பிறப்பிடமாகிய ஸ்ரீதேவியும் ஸ்ரீமானும் ஒன்றே. அரங்கநாதனது மகிமை இத்தகையது.

**ஸர்வ சக்திமான்**

சதுர்புஜம் அல்லது நான்கு திருக்கரங்களையுடையவனாயிருக்கிறான் திருமால். அவைகள் அவனுடைய தெய்வப் பெற்றியை விளக்குகின்றன. மனிதனது ஆற்றலுக்கு அறிகுறி இரண்டு கரங்கள். அவைகளில் ஒரு கையில்லாவிட்டாலும் அவன் பல காரியங்களுக்கு உதவாதவன் ஆய்விடுகிறான். இரு கைகளையுடையவன் எதையும் செய்ய வல்லவனாகிறான். ஆயினும் மானுட ஆற்றல் அளவைக்கு உட்பட்டது. தெய்வத்தின் ஆற்றல் அளப்பரியது என்பதை நான்கு கைகள் விளக்குகின்றன. ஒரு கையில் சங்கு உடைத்திருக்கிறான் அப்பெரிய பொருள். சங்கு ஊதுமிடத்து உண்டா

கும் ஒலி ஓங்காரம். ஓம் என்னும் ஓசைக்கு நாதபிரம்மம் என்று பெயர். இது ஒரு மொழியிலும் ஒரு சமயத்திலும் கட்டுப்படாதது. இயற்கை முழுதும் இயங்குவதால் உண்டாகும் சப்தமே ஓங்காரம். அது பிரணவம் என்றும் பகரப்படும். தன் கையில் சங்கை உடைத்திருப்பதன் மூலம் தான் பிரணவப் பொருள் என்பதை அரங்கநாதன் அறிவுறுத்துகிருன். அகர, உகர, மகரம் அடங்கப்பெற்றது ஓங்காரம். பிரபஞ்சத்திலுள்ள ஓசை, ஒலி யாவும் இதன் வெவ்வேறு தோற்றங்கள். ஓசைதான் உலகிலுள்ள அனைத்துக்கும் வித்து ஆகிறது. ஓசை உருப்பட்டே ஒவ்வொரு வஸ்துவும் ஆகிறது. ஒரு பொருளைப் பதார்த்தம் என்கிறோம். பதமும் அதன் அர்த்தமும் சேர்ந்தது அந்த வஸ்து. வித்து அகப்பட்டால் அதிலிருந்து மரத்தை உண்டுபண்ணலாம். சொல் என்னும் வித்திலிருந்து பொருள் உண்டாகிறது. மந்திரம் என்பது சொல். அதை ஓயாது உச்சரித்தால் அதன் வடிவம் வந்துவிடும்.

'நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.'

ஓம் என்பதும் நாராயணன் என்பதும் மந்திரம். அதை உருப்போடுகிறவர்களின் மனது அந்த வஸ்துவின் வடிவெடுக்கிறது. பிறகு நாராயணனைக் காணவும், அவனை அடையவும் முடியும். இப்பொழுது அவன் யாரென்று நமக்குத் தெரியாது; ஆனால் அந்தச் சொல் நமக்குத் தெரியும். தெரிந்ததை உறுதியாகப் பிடித்துக்கொண்டால் தெரியாததை அடையலாம். இக்கோட்பாட்டை அனைவர்க்கும் விளக்குதற்கென்றே அவன் சங்கைக் கையில் ஏந்திக்கொண்டிருக்கிருன். பிரணவம் அல்லது அவனுடைய நாம உச்சாரணத்தால் அவனை அறவே பெற்றுவிடலாம்.

## அறவாழி அந்தணன்

சக்கரபாணி என்று அரங்கராஜனை அழைக்கிறோம். அண்டங்களின் நடைமுறையை விளக்குவது சக்கரம். கோளங்களெல்லாம் சுழன்று சுழன்று வருகின்றன. வட்டமிடுவது அவைகளின் இயல்பு. நக்ஷத்திரங்கள் பல நேரே ஓடிக்கொண்டிருப்பவைகள் போலத் தென்படுகின்றன. பெரு வேகத்துடன் பல்லாண்டு பல்லாண்டு பறந்தோடி அவைகள் ஒரு வட்டத்தை நிறைவேற்றுகின்றன. ஒன்றுக்கு அப்பால் ஒன்று அனந்தம் சக்கரங்கள் ஓயாது சுழல்கின்றன. அவை யாவும் ஹரியின் திருக்கரத்தில் தாங்கப்பெற்றிருக்கின்றன. அண்டங்கள் யாவையும் உண்டுபண்ணுதலும், நிலைபெறச் செய்தலும் பின்பு அவைகளை நீக்குதலும் நாராயணனுடைய நிரந்தரமான செயல்கள்; சக்கரம் சுழல்வது போன்று இச் செயல்கள் சுற்றிச் சுற்றி வருகின்றன. முடிவில்லாத விளையாட்டாக முகுந்தன் அம்முத்தொழிலைச் செய்து வருகிறான்.

அரங்கன் ஆழியங்கை அம்மான் ஆகிறான். தர்ம சக்கரம் அல்லது அறவாழி அவன் கையில் இருக்கிறது. ஏனென்றால் அவன் தர்மகோப்தா; அறத்தைப் பாதுகாத்து வருகிறான். இயற்கையின் நடைமுறையிலுள்ள ஒழுங்குப்பாடு அறமெனப்படுகிறது. உயிர் வகைகள் செய்யும் செயலில் முன்னேற்றத்துக்கு ஏதுவானவைகள் தர்மமெனப்படுகின்றன; அவைகள் ஏற்கனவே அடைந்துள்ள நிலைகளினின்று கீழே இழுத்துச் செல்லும் செயல்கள் அதர்மமெனப்படுகின்றன. தர்மத்தின் முடிந்த பயன் இன்பம். அதர்மத்தின் முடிவு துன்பம். ஆழியங்கை கருமேனியன் உயிர்களைக் காக்கும் கடவுள். தர்மசக்கரத்தைக் கொண்டு அவன் அனைத்தையும் காத்து வருகிறான். அறம் செய்கின்றவர்களை ஆழிகாப்

பாற்றுகின்றது. கேடு செய்கின்றவர்களை அது துன்புறுத்து கிறது. சக்கரத்துக்கு மறைந்திருந்து யாரும் எச்செயலும் செய்யமுடியாது. எங்கும் வியாபகமாய் எல்லா உயிர் களிடத்தும் மனசாக்ஷி என்னும் பெயரெடுத்து, அது ஊடுரு விப் பாய்ந்திருந்து ஆணைசெலுத்துகிறது. மஹாவிஷ்ணு வின் தர்ம சக்கரத்துக்கு உட்பட்டு நடப்பவர் நலம் அனைத் தையும் அடையப்பெறுபவர்.

அதே ஆழியைக் காலச்சக்கரம் என்றும் பகரலாம். ஆத்யந்தமில்லாத காலமாக அது சுழல்கிறது. சென்றது, நிகழ்வது, வருவது எல்லாம் ஒரு வட்டமாய் வருகிறது. அதற்கு இருப்பிடம் திருமாலின் திருக்கரம். திருமாலே காலசொரூபம். காலம் முழுதையும் நாம் அறிய முடியாது. அக்காரணத்தை முன்னிட்டே அவன் கருமேனியனாக நமக் குத் தென்படுகின்றான். காலம் என்னும் ஆழியை நன்கு பயன்படுத்துவது அரங்கனது ஆராதனையாகும்.

மற்றிரண்டு கைகளில் மாதவன் கதையையும் கமல புஷ் பத்தையும் பற்றியுள்ளான். ஜீவர்களின் முக்கால நிலையை அவன் அறிகிறான். ஆகையால் அவன் பெயர் கோவிந்தன். ஜீவர்களை அவன் யாண்டும் காக்கிறான். எனவே அவன் கோபாலன். ஜீவர்களைப் பரமபதத்துக்காகவென்று பக்கு வப்படுத்துவதற்காகப் புருஷோத்தமனிடத்து இரண்டு பாங்குகள் அமையவேண்டும். அவைகளுள் வல்லியல்பு ஒன்று, மெல்லியல்பு மற்றொன்று. இரண்டும் அறிவினது வெவ்வேறு தோற்றங்களேயாம். கடலில் கொந்தளிப்பு முண்டு; அமைதியுமுண்டு. மாலுமிகளைக் கொந்தளிப்பு ஒரு விதத்தில் பக்குவப்படுத்துகிறது. அமைதி இன்னொரு விதத் தில் பக்குவப்படுத்துகிறது. வளரும் விருக்ஷங்களைப் புசல் காற்று ஒரு பாங்கில் பக்குவப்படுத்துகிறது. மெல்லிய பூங்

காற்று இன்னொரு பாங்கில் பக்குவப்படுத்துகிறது; பரமபுருஷன் கதாதரனாய் இருந்து உயிர்களை ஒருவிதத்தில் ஓம்புகிறான். தாமரைக் கையனாய் இருந்து இன்னொரு விதத்தில் ஓம்புகிறான். எந்த உயிரை எப்படி ஆயத்தப்படுத்துவது என்று பேரறிஞனாகிய கோவிந்தன் அறிகிறான். அசுரப் பாங்குடையவர்களைக் கதையால் அடித்துத் துன்புறுத்தித் திருத்துகிறான். துன்பம் மக்களை எவ்வளவு தூரம் தூய்மைப்படுத்துகிறது என்பதை அவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. முன்னேற்றத்திற்குத் துன்பம் உதவுவது போன்று இன்பம் உதவுவதில்லை. துன்பம் வழங்கும் வல்லியல்புக்குச் சின்னமாயிருப்பது கதை என்னும் ஆயுதம். அவன் நரசிம்மமூர்த்தியாகுமிடத்து வல்லியல்பே வடிவெடுத்துவிடுகிறான்.

மெல்லியல்பின் இனிமைக்குச் சின்னம் தாமரைப்பூ. அன்பர்களிடத்து அவன் இனிமையே வடிவெடுத்தவன் ஆய்விடுகிறான். பக்தர்களுக்கு அவனது வண்ணம் முழுதும் கமலம் போன்றது. அவன் யாண்டும் நல்லார்க்கினியன். நலமுடையார்க்கு அவனே செல்வம்.

வல்லியல்பும் மெல்லியல்பும் ஒருங்கே அமையப்பெற்றிருப்பவனே உலகம் யாவையும் ஆளவல்லவன். அரங்கத்தில் நல்லாருமுளர்; பொல்லாருமுளர். அரங்கநாதன் அவரவர்க்கு ஏற்ற முறைகளைக் கையாண்டு ஜகத்தின்மீது ஆட்சி செலுத்துகிறான் என்பதை அவன் கைகளிலுள்ள கதாயுதமும் கமலமும் காட்டுகின்றன.

## யோக நித்திரை

அரங்கன் அரவணையில் துயிலுறுதலின் மகிமை இவை யாவினும் மேலானது. சிற்றுயிர்களின் உறக்கம் போன்ற

நன்று அது. அறிதுயில் என்றும், தூங்காத தூக்கம் என்றும், நினைவில் சுழுத்தியென்றும், யோகநித்திரை என்றும் அது சிறப்பித்துக் கூறப்படுகிறது. உலகுக்கும் நமக்கும் தொடர்பற்ற நிலையைத் தூக்கம் என்கிறோம். உலகத்தைப் பற்றிய உணர்ச்சி நமக்கு ஆங்கில்லை. அரங்கநாதன் அரங்கத்தில் சயனித்திருக்கிறான் என்றாலும் அவன் ஒருநாளும் அரங்கத்தைச் சார்ந்திருப்பவன் அல்லன். அரங்கம் அவனைச் சார்ந்திருக்கிறது. பார்வைக்குக் கண்வளர்பவன் போன்று காணப்படுகிறான். நாம் விழித்திருக்கும்போது உலகுக்கு அடிமை; உறங்கும்போது உறக்கத்துக்கு அடிமை. அவன் ஒன்றுக்கும் அடிமையல்லன். இதுவே அவன் உறக்கத்துக்கும் நம் உறக்கத்துக்கும் உள்ள வித்தியாசம். நமக்குத் தூக்கத்தில் எல்லாம் கார் இருள்; ஒன்றும் புலப்படாத நிலைமை. அரங்கனுக்கோ எல்லாம் தெளிந்த நிலைமை. அகண்ட தேஜோமயம். அது என்ன என்று விளங்காத நமக்குப் பாற்கடலில் பள்ளிகொண்ட பெருமாள் என்றால் ஒருவாறு விளங்குகிறது. நம்மைப்பற்றிய உணர்ச்சி நமக்கு உறக்கத்தில் இல்லாததுபோன்று ஆய்விடுகிறது. அவனோ ஆத்மவான், சதாயோகி, தன் பூரணப் பிரக்ஞையினின்று அணுவளவும் பிசகாதவன். கண்வளர்பவன் போன்று காணப்படுகிறான். உண்மையில் பேரறிவே வடிவெடுத்தவனாயிருக்கிறான். பரிபூரணப் பொருளாகிய அவனுடைய சந்நிதியில் உலகம் யாவும் தோன்றுதலும், நிலைபெறுதலும், நீங்குதலும் முடிவில்லாத விளையாட்டாக நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. அரங்கத்தம்மானின் அதிசயம் இதுவே.

அவனைச் சேவிக்க நாம் கற்றுக்கொண்டால் அவனை அடையலாம். நமது உடல் அவனுடைய அரங்கம். சராசரம் அனைத்திலும் பள்ளிகொண்டுள்ள அவன் இதனுள்

ளும் பள்ளிகொண்டிருக்கிருன். உடலை நம்முடையதாக்கி அவனைப் புறக்கணித்திருக்கிரும். ஆகையால் உள்ளிருந்தும் இல்லாதவன்போன்று மறைந்திருக்கிருன். காயத்தை அவனுக்கு உகந்த பெரிய கோயிலாக்கி, அவனுக்கே பணிவிடை செய்து அவனுக்கென்று வாழ்ந்திருந்தால், நமது மனது பாற்கடல் போன்று பொலிவு பெறும். யாண்டும் பரமன் பள்ளிகொண்டிருப்பது ஆங்கு யோகானுபூதியில் விளங்கும். பின்பு பாரகமெல்லாம் பேரரங்கமாகப் புலப்படும். பரமபதம் என்னும் பெருநிலம் அதுவே. அனைத்தும் நாராயண சொருபம்.

---

## அர்ச்சனைக்குரிய நாமங்கள்

1. **ओं विष्णवे नमः** ஓம் விஷ்ணவே நம:
   விஷ்ணு—எங்கும் வியாபித்திருப்பவர்

2. ,, **नारायणाय नमः** ஓம் நாராயணுய நம:
   நாராயணன்—தன்னிடத்திருந்து தோன்றி வந்த உலகில் வீற்றிருப்பவன்

3. ,, **वासुदेवाय नमः** ஓம் வாஸுதேவாய நம:
   வாசுதேவன்—எல்லா உயிர்கள் உள்ளத்திலும் வீற்றிருப்பவன்

4. ,, **ध्रुवाय नमः** ஓம் த்ருவாய நம:
   த்ருவன்—அசையாதவன்

5. ,, **अच्युताय नमः** ஓம் அச்யுதாய நம:
   அச்யுதன்—நெறிபிறழாதவன்

6. ,, **हृषीकेशाय नमः** ஓம் ஹ்ருஷீகேசாய நம:
   ஹ்ருஷீகேசன்—இந்திரியங்களுக்கு அதிபதி

7. ओं पुरुषोत्तमाय नमः ஓம் புருஷோத்தமாய நம:
புருஷோத்தமன்—பெருமாள்

8. ,, लक्ष्मीपतये नमः ஓம் லக்ஷ்மீபதயே நம:
லக்ஷ்மீபதி—திருமகளின் தலைவன்

9. ,, गोविन्दाय नमः ஓம் கோவிந்தாய நம:
கோவிந்தன்—ஜீவர்களின் நிலையை அறிபவன்

10. ,, शङ्खचक्रधराय नमः ஓம் சங்கசக்ரதராய நம:
சங்க சக்ரதரன்—சங்கையும் சக்கரத்தையும் தரித்திருப்பவன்

11. ,, जगन्नाथाय नमः ஓம் ஜகந்நாதாய நம:
ஜகந்நாதன்—உலகுக்குத் தலைவன்

12. ,, परमात्मने नमः ஓம் பரமாத்மனே நம:
பரமாத்மன்—பிரபஞ்சத்துக்கு அப்பால் உள்ள ஆத்மன்

13. ,, योगेश्वराय नमः ஓம் யோகேச்வராய நம:
யோகேசுவரன்—யோகத்துக்குத் தலைவன்

14. ,, आदिदेवाय नमः ஓம் ஆதிதேவாய நம:
ஆதிதேவன்—முதல்வன்

15. ,, आदिमूलाय नमः ஓம் ஆதிமூலாய நம:
ஆதிமூலம்—அனைத்துக்கும் முதல் காரணம்

16. ,, त्रिविक्रमाय नमः ஓம் த்ரிவிக்ரமாய நம:
த்ரிவிக்ரமன்—மூவடியால் உலகு அளந்தவன்

17. ,, जनार्दनाय नमः ஓம் ஜனார்த்தனாய நம:
ஜனார்த்தனன்—மக்களால் வணங்கப்படுபவன்

18. ,, पद्मनाभाय नमः ஓம் பத்மநாபாய நம:
பத்மநாபன்—தனது நாபியினின்று உலகை உண்டுபண்ணிய வன், மலர்மிசை யேகியவன்

19. ओं केशवाय नमः ஓம் கேசவாய நம:
கேசவன்—க-பிரம்மா, அ-விஷ்ணு, ஈச-ருத்ரன்—மும்மூர்த்தி வடிவினன்

20. ,, हरये नमः ஓம் ஹரயே நம:
ஹரி—பாவத்தைப் போக்குபவன்

21. ,, धर्मसंस्थापकाय नमः ஓம் தர்மஸம்ஸ்தாபகாய நம:
தர்ம ஸம்ஸ்தாபகன்—தர்மத்தை நிலைநாட்டுபவன்

22. ,, दुष्टनिग्रहकारिणे नमः ஓம் துஷ்டநிக்ரஹகாரிணே நம:
துஷ்டநிக்ரஹகாரி—கெட்டவர்களை அழிப்பவன்

23. ,, शिष्टरक्षकाय नमः ஓம் சிஷ்டரக்ஷகாய நம:
சிஷ்டரக்ஷகன்—நல்லாரைக் காப்பவன்

24. ,, क्षेत्रपालकाय नमः ஓம் க்ஷேத்ரபாலகாய நம:
க்ஷேத்ர பாலகன்—உடலைக் காப்பவன்

25. ,, सर्वतोमुखाय नमः ஓம் ஸர்வதோமுகாய நம:
ஸர்வதோ முகன்—எங்கும் சான்னித்திய முடையவன்

26. ,, सत्यधर्मपरायणाय नमः ஓம் ஸத்யதர்மபராயணாய நம:
ஸத்யதர்ம பராயணன்—சத்தியத்திலும் தர்மத்திலும் கண்ணாயிருப்பவன்

27. ,, महायज्वने नमः ஓம் மஹாயஜ்வனே நம:
மஹா யஜ்வன்—பெருவேள்வி வடிவினன்

# 7. சிவன்

हृत्पुण्डरीकान्तरसंनिविष्टं
स्वतेजसा व्याप्तनभोऽवकाशम् ।
अतीन्द्रियं सूक्ष्ममनन्तमाद्यं
ध्यायेत्परानन्दमयं महेशम् ॥

ஹ்ருத்புண்டரீகாந்தரஸன்னிவிஷ்டம்
ஸ்வதேஜஸாவ்யாப்தநபோவகாசம்
அதீந்த்ரியம் ஸூக்ஷ்மமநந்தமாத்யம்
த்யாயேத்பராநந்தமயம் மஹேசம்.

மனமாகிற தாமரையினிடத்து நன்கு எழுந்தருளி இருப்பவனும், தனது தேஜஸால் அனைத்தையும் ஒளிவிடச் செய்பவனும், பொறிபுலன்களுக்கு எட்டாதவனும், நுண்ணியவனும், ஆதியந்தம் இல்லாதவனும், பேரின்ப வடிவினனும் ஆகிய இந்த மஹேசனைத் தியானித்திடுக.

தோடுடையசெவி யன்விடை யேறியோர்
தூவெண் மதிசூடிக்
காடுடை யசுட லைப்பொடி பூசியென்
உள்ளங் கவர்கள்வன்
ஏடுடை யமல ரான்முனை நாட்பணிந்
தேத்த அருள்செய்த
பீடுடை யபிர மாபுரம் மேவிய
பெம்மா னிவனன்றே.

**திரிலோக குடும்பி**

இந்திரியங்களின் துணைகொண்டு அறியப்படுவது உலகம். அந்தக்கரணமாகிய மனது புறக்கரணங்களாகிய கண், செவி ஆகிய இவைகளிடத்து உண்டாகும் கேடுகட்கு

ஏற்ப வெளியுலகம் கேடுடையதாகத் தென்படுகிறது. உண்மையில் உலகில் கேடு இல்லவே இல்லை. அவரவரிடத்துள்ள கேடுகளுக்கு ஒப்ப அது குற்றமுடையதாகக் காட்சி கொடுக்கிறது. மனதும் இந்திரியங்களும் வேலை செய்யாது ஒடுங்கி விட்டால் புறவுலகின் காட்சியும் நின்று விடுகிறது. மனதையும் இந்திரியங்களையும் நன்கு பண்படுத்த நமக்கு இயலுகிறது. சமய அனுஷ்டானங்களும் ஆத்ம சாதனங்களும் மனதைப் பண்படுத்துதற்கென்றே அமைந்துள்ளன. தெளிந்த மனங்கொண்டு, திண்ணிய கரணங்கள் கொண்டு காணுமிடத்து இதே உலகம் சிவமயம் என்பது விளங்கும். பூரண விழிப்பு அல்லது ஆத்ம போதம் மனிதனுக்கு உண்டாகக்கூடும். பூரண விழிப்பு உண்டாகிக் கருவி கரணங்கள் ஓய்ந்தவிடத்து எஞ்சியிருப்பது சுத்தசிவம். அப்பொருளைப் பல பெயரிட்டுச் சமயங்கள் கூறுகின்றன.

இவ்வுலகை உள்ளபடி காண்பவன் கடவுளைக் காண்கிறான். கடவுள் எத்தகையவர் என்று இயம்புவதன் மூலம் இவ்வுலக நடைமுறையே விளக்கப்பெறுகிறது. குடும்பிகளுள் அவர் பெருங்குடும்பி. குடித்தனமோ, துரைத்தனமோ எனப்படுகிறது. உலகெல்லாம் அவர் குடும்பம். அதன் முறை பிறழாத நடையே அவரது ஆட்சி. சிதறடையும் உலகம் அவரது ஆட்சிக்கு உட்பட்டு ஒன்று சேர்ந்திருக்கிறது. முரண்பாடுகளெல்லாம் அவரது ஆணையால் ஒழுங்குப்பாடு பெறுகின்றன. அவரது குடும்பத்தை ஓர் எல்லையில் அடக்கி வைத்துப் பார்த்தால் இவ்வுண்மைகள் நன்கு விளங்கும்.

திருக்கயிலாயகிரியிலே பார்வதி சமேதராய்ப் பரமசிவன் வீற்றிருக்கிறார். பரிவாரங்கள் அனைத்தும் புடை சூழ்ந்திருக்கின்றன. மனைவாழ்க்கையின் பொறுப்பு, பேறு,

பண்பு அனைத்தும் ஆங்கு ஒன்றுசேர்ந்து மிளிர்கின்றன. பேறுகளில் தலையாயது மக்கட்பேறு. தன்மகன் என்று ஒருபதுமை பிறந்துவிட்டால் போதாது. அவன் அறிவறிந்த மகன் ஆதல் வேண்டும். ஞானக்களஞ்சியமாக மிளிர்கிறான் கணபதி. இனி, தனியறிவு போதாது. அது வெறும் சப்பாணி; செயலுக்கு உதவாது. மூத்தவனுக்கு அனுசரணையாக ஆற்றலும் துடுக்கும் வடிவெடுத்தவன் ஆகிறான் இளையவன் கார்த்திகேயன். அறிவும் ஆற்றலும் எவனிடத்து ஒன்று சேர்ந்து ஒளிர்கின்றனவோ அவனே பண்புடைய மகனாகிறான். இவ்விரண்டு மேன்மைகளைத் தனித்தனியே விளக்குவதற்கு அவைகள் இருபிள்ளைகளாக ரூபகப்படுத்தி விரிவாக விளக்கப்படுகின்றன. அறிவும் ஆற்றலும் ஒருங்கே வாய்க்கப்பெற்றவன் சிவனை அறிய வல்லவனாகிறான். அவனே உண்மையில் சிவகுமாரனாகிறான்.

பரமேசுவரன் எதிரே அவரது ஊர்தியாகிய காளையொன்று படுத்திருக்கிறது. இறையவர் இடது பாகத்தில் அம்பிகை அமர்ந்திருக்கிறாள். பக்கத்தில் அவளுடைய வாகனம் சிம்மம் இருக்கிறது. அப்பன் அண்டையில் மூத்தவன் கணபதியும், அம்மையின் மருங்கில் மைந்தன் முருகனும் இடம் பெற்றிருக்கிறார்கள். தந்தை மூத்தவனையும் தாய் இளையவனையும் நேசித்தல்தானே இயல்பு! மூத்தவன் முன்பு மூஷிகம் விளையாடுகிறது. முருகன் மருங்கில் மயில் குலாவுகிறது. தந்தையின் மேனியில் பாம்பு நெளிந்து நெளிந்து ஊர்கிறது. இடையிடையே அது படமெடுத்து ஆடுகிறது. மேற்பூசலாகப் பார்ப்பவர்களுக்கு இக்காட்சியில் அதிசயம் ஒன்றுமில்லை. ஐதிகத்துக்கு உட்பட்டுக் கன்னத்தைக் கரத்தால் அடித்துக்கொண்டு "ஹரஹரா" வென்று ஆரவாரித்து அண்ணலை வணங்குவதோடு அவர்களது வேலை முடிந்துவிடுகிறது.

சிறிது சிந்தித்துப் பார்ப்பவர்க்கு இதில் விநோத மொன்று விளங்கும். காளையும் காளையைக் கொன்று தின்கின்ற சிங்கமும் பக்கம் பக்கம் அமர்ந்திருக்கின்றன. அவைகளின் இயல்புகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவைகள். ஒரே உலகில் அவைகள் வாழ்ந்திருக்கின்றன. வருத்தப்படும் தன்மை காளையினிடத்து இருக்கிறது. வருத்தப்படுத்தும் தன்மை சிம்மத்திடம் இருக்கிறது. தன் உயிருக்கு எப்பொழுதுவேண்டுமானாலும் கேடு வரலாம் என்ற கவலை காளைக்கு உண்டு. உணவுப்பொருளைச் சும்மாவிட்டு வைப்பானேன் என்ற துடிப்பு மற்றதனிடத்து மேவுகிறது. மூத்தவனுடைய வாகனமாகிய எலி துள்ளிக் குதித்து விளையாடுகிறது. தன் தலைவனுக்குப் படைத்திருக்கும் உணவு வகையில் அது உரிமை பாராட்டுகிறது. நினைத்தபொழுதெல்லாம் அதில் கொஞ்சம் கொரித்துத் தின்கிறது. இங்குமங்கும் ஓடித் திரிகிற எலியின்மீது திடீரென்று பாம்பு பாய்ந்துவிடலாம். ஆனால் பாம்பு பயமற்றுத் திரிதற்கு இடமில்லை. ஏனென்றால் அதேவேளையில் மயில் குதித்தோடி வந்து பாம்பைக் குத்திக் கொல்லவும் கூடும். சிற்றுயிர்களுக்கிடையில் இத்தனை விதமான போராட்டங்கள் இருக்கின்றன. இனி, பேருயிரின் பிரதிநிதிகளாகிய பிள்ளையாரும் குழந்தைவேலனும் விவகாரமற்ற சாந்த மூர்த்திகளல்லர். மூத்தவனது முறம் போன்ற காதைக் கிள்ளுதற்குக் கள்ளத்தனமாக மெள்ள முருகன் அருகில் வருவான். தனது மதிநுட்பத்தால் அதைக் குறிப்பறியும் கணபதியோ இளையவன் தலையில் ஓங்கிக் குட்டிவிடுவான். சிறார் சண்டை மூண்டுவிடும். ஆக, சிவனார் குடும்பம் அவ்வளவு சாந்தமானதன்று. எந்த வேளையில் வேண்டுமானாலும் விவகாரம் வந்துவிடும். வாழ்க்கை என்பதே விவகாரம். தொல்லைகள் பல அதில்

துலங்குகின்றன. ஆயினும் அதைப்பற்றி அவர் அல்லற்படுவதில்லை. மனைவாழ்க்கையை மாற்றியமைக்க வேண்டும் என்ற ஏக்கமும் கிடையாது. உள்ள ஏற்பாடே உயர்ந்த ஏற்பாடு என்ற சித்தாந்தம் சிவபெருமானுக்கு நெடுநாள் ஆராய்ச்சியின் பயனுய்த் தோன்றியது போலும்!

கயிலையங்கிரியில் மட்டுமல்ல, காணுமிடமெங்கும் இயற்கையில் இதே காட்சிதான் தென்படுகிறது. உலக வாழ்க்கையில் முரண்பாடுகளுக்கு முடிவில்லை. இன்பம் வேண்டுபவனைத் துன்பம் துரத்துகிறது. நட்பு நாடுகிறவனுக்குப் பகை பலாத்காரமாக வருகிறது. அமைதிதேடுபவனுக்கு நிலைகுலைவு தென்படுகிறது. இந்த மாறுபாடுகளுக்கு இடையில் வாழ்க்கை உறுதிப்பாடுடையதாகவேண்டும். உறுதிப்பாடே இல்வாழ்க்கையின் நோக்கம். யாரிடத்து உறுதிப்பாடு உண்டோ அவர் தக்கார். யாரிடத்து அது இல்லையோ அவர் தகவிலர். இயற்கையின் அமைப்பும், அதில் மனிதன் கடைப்பிடிக்கும் இல்லறம் என்னும் நல்லறமும் சேர்ந்து தக்க பயிற்சியை அவனுக்கு அளிக்கின்றன. பார்வதி சமேதராகிய பரமசிவனது விநோதமான குடும்பத்தினின்று நாம் பெறும் பாடம் இதுவே.

**எல்லாம் சிவமயம்**

ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அவரவர் பொறுப்புக்கும் அந்தஸ்துக்கும் ஏற்ப வண்டி வாகனங்களை உடையவராகின்றனர். இறையவரது குடும்பத்தில் அமைந்த வாகனங்களும் அங்ஙனம் முற்றும் பொருத்தமானவைகள். தலைவனது தகைமைக்கும், பொறுப்புக்கும், அமைதிக்கும் ஏற்ப அவருக்கு ரிஷபம் வாகனம்; தாய் பராசக்தியின் பராக்கிரமத்துக்கு ஏற்ப அவளுக்குச் சிங்கம்; முருகனது அழகுக்கு

அவனுக்கு மயில்; மூத்தவனது அறிவு எதையும் துருவி ஆராயவல்லது என்பதற்கு அறிகுறி, எதையும் பொத்துத் துளைக்கிற எலி—இங்ஙனம் ஊர்திகள் ஏற்பட்டிருக்கின்றன. எல்லா உயிர்களுக்கும் அந்தர்யாமியாயிருந்து இறைவன் அவைகளை ஆட்டுவிக்கிறான் என்பதே வாகனம் என்பதன் உட்கருத்து. உண்மையில் உயிர்களெல்லாம் அவருக்கு வாகனம். பாம்பு, பறவை, உக்கிரமான மிருகம், சாந்தமான மிருகம், சிறிய உயிர், பெரிய உயிர் எல்லாம் அவருக்கு வாகனம். ஜீவர்களைச் சிவனோடு இணைத்துக் காணுமளவு கேடு இல்லை என்ற கோட்பாட்டையும் அவரது குடும்பம் விளக்குகிறது. அக்கோட்பாட்டின் உயர்வைத் தம் தலைமுடியில் அவர் வைத்துள்ளார். சந்திரனுக்கும் பாம்புக்கும் என்றும் பகை. ராகு, கேது என்ற ஸர்ப்பங்கள் சந்திர சூரியர்களை விழுங்கக் காத்துக்கொண்டிருக்கின்றன என்பது ஐதிகம். ஆனால் சிவனரது ஜடாமுடியில் ஸர்ப்பமும் சந்திரனும் பகைமையை இழந்து பண்புற்றிருக்கின்றன. அவர் மயமாய்க் காணுங்கால் பாம்பும் பயத்துக்குரியதல்ல. வேறுபாடுகளெல்லாம் அவரது வெவ்வேறு விளையாட்டுகளாய் அமைந்துவிடுகின்றன.

புலிவேஷம் போட்டுக்கொண்டு அண்ணன் தன் தங்கையைப் பயமுறுத்தப்போனான். அவள் கோவென்று கதறிக் கீழே விழுந்தாள். அவ்வேளையில் அவன் வேஷத்தை நீக்கினான். 'ஓ இது அண்ணன்தானா!' என்று அவள் அருகில் ஓடிவந்தாள். இக்கோட்பாடு எல்லா உயிர்களுக்கும் மெய். அண்ணல் அளவில் அடங்கா வடிவங்களை எடுத்து விளையாடுகிறார். அறிவிலிகள் அதை அறியாது அவரது வடிவங்களில் வேண்டுவன வேண்டாதன என வகைப்படுத்துகின்றனர். சிவஞானம் பெறுகின்றவர்களுக்

குப் பாம்பும், புலியும், பசுவும், சிங்கமும் ஒன்றே. பூதங்களுள் புனலும் அனலும் அவரிடத்துப் பொலிந்திருக்கின்றன. சிவம் என்னும் சொல்லுக்குப் பொருள் மங்களம். உலகைச் சிவத்துக்கு அன்னியமாகக் காணுமிடத்தே அது அமங்களம். அதைச் சிவமயமாகக் காணுமிடத்து அது மங்களகரமானது. எல்லாம் சிவமயம். இவ்வுண்மையை அறிந்து அதற்கு ஒப்ப ஒழுகுபவர்க்கு வாழ்க்கை நலன் அனைத்தையும் தர வல்லது.

சிவ சக்தி

சமதரையில் நின்றுகொண்டு பார்ப்பவருக்கு மேடு, பள்ளம், மரம், புல் இவைகளுக்கிடையில் வித்தியாசம் நன்கு தெரிகிறது. மலையின்மீது ஏறஏற வித்தியாசம் மறைகிறது. எல்லாம் ஒரே சமவெளியான காட்சியாகிறது. இறைவனை இயற்கை மயமாய்க் காணுமிடத்து எல்லாவித வேறுபாடுகளுக்கும், மாறுபாடுகளுக்கும் ஆங்கு இடமுண்டு. அவர் சொருபத்தில் மற்றொரு காட்சி காணலாம். அர்த்த நாரீசுவரன் என்பதும் அவரது வடிவம். மாது ஒருபாகம் ஆனவர் என்று அது பொருள்படுகிறது. ஒரே வடிவத்தில் பாதி ஆண், பாதி பெண். இது இயற்கைக்கு ஒவ்வுமோ என்னும் கேள்வி எழலாம். கொஞ்சம் துருவி ஆராய்ந்தால் இதுவே இயற்கையின் இயல்பு என்பது விளங்கும். ஸ்தாவர உலகில் ஒரே வடிவத்தில் ஆண் இயல்பு, பெண் இயல்பு இரண்டும் சேர்ந்திருக்கின்றன. ஒரே புஷ்பத்தில் ஆண்பாகம், பெண்பாகம் ஆகிய இரண்டும் இருக்கின்றன. அவ்விரண்டினுடைய பேர்பாதிக் கூட்டுறவால் புதிய விதை உண்டாகிறது. ஜங்கமங்களுள் ஒவ்வோர் உயிரும் அதனதன் தாய் தந்தையரின் பாதிப்பகுதி அம்சம் பெற்றே உண்டாகின்றது. ஜன சமூகம் முழுதையும் ஓர் உருவாய்க் கருதி

ஞல் அதில் ஒரு பகுதி ஆணும், மற்ெருரு பகுதி பெண்ணும் ஆகிறது. இதே உண்மை விலங்கு, பறவை, நிலேத்திணை ஆகிய எல்லா உயிர்களுக்கும் பொருந்துகிறது.

சைதன்யம், ஜடம் ஆகிய இரண்டு தத்துவங்களே உடையது இயற்கை. அறிவும் ஆனந்தமும் சைதன்யத்தைச் சேர்ந்தவைகள். எது அறிகிறதோ, உணர்கிறதோ, மகிழ்கிறதோ அது சைதன்யம். எந்த உடலின் மூலமாக, மெய்யின் மூலமாக, கருவியின் மூலமாக அறிவு மிளிர்கிறதோ அந்தக் கருவிக்கு ஜடம் என்று பெயர். உயிரும் மெய்யும் இணங்கியிருப்பது வாழ்க்கை. உயிர்த்தத்துவம் சிவம்; உடல் தத்துவம் சக்தி. உடல் இல்லாது உயிர் தன்னே விதவிதமாக விளக்காது. உயிர் இல்லாது உடல் ஒன்றுக்கும் உதவாது; உயிரும் மெய்யும் கொள்ளுகிற கூட்டுறவால் இயற்கைத் திட்டம் இனிது நிறைவேறுகிறது. எல்லா ஜீவர்களிடத்தும் இக்கோட்பாடு உறுதிப்பாடு பெறுகிறது. சிவ தத்துவத்துக்கும் சக்தி தத்துவத்துக்கும் புறம்பாக இயற்கையில் ஒன்றுமில்லே. மாது ஒரு பாகம் ஆனவனுய்—அர்த்த நாரீசுவரனுய்—அவர் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பது, விவேகம் என்னும் கண்கொண்டு காண்பார்க்கு உண்மையாகும்.

ஆலயங்களில் சிவ வழிபாட்டுக்குரிய சின்னமாய் அமைந்திருப்பது சிவலிங்கம். பரந்த கருத்துக்கள் பல இச்சின்னத்தில் புதைந்து கிடக்கின்றன. ஆவுடையாள் என்னும் கீழ்ப் பகுதி சக்தியின் சின்னம். அதில் நாட்டப்பெற்றிருக்கும் லிங்கம் சிவத்தின் சின்னம். சிவசக்தியின் ஐக்கியத்தால் சராசரங்கள் அனைத்தும் தோன்றியுள்ளன என்பதை அது குறிக்கிறது. உருவமற்ற பொருள் உருவம் எடுக்கவும் வல்லது என்பதையும் இச்சின்னம் குறிக்கிறது.

மனைமாட்சி

உலகில் உள்ள உயிர்கள் காமத்துக்கு வசப்பட்டுக் குடும்ப வாழ்க்கையில் இறங்குகின்றன. சிவமும் சக்தியும் அவர்களுக்குப் புகட்டும் பாடம் அதற்கு மாறுனது. ஆசையை வெல்லுபவரே அரிய வாழ்க்கை வாழவல்லவர் ஆகின்றனர். அண்ணலின் அருளுக்குப் பாத்திரமாதற் பொருட்டு உமா தேவி நெடுங்காலம் கடுந்தவம் புரிந்தாள். சிவபெருமானே தமது நிறைநிலை கலையாது பூரணப் பொருளாகவே யாண்டும் நிலைத்திருந்தார். அந்த நிலைக்கு உக்கிர தபசு என்றும் கோர தபசு என்றும் பெயர். உமாதேவியார் அவரை ஆராதித்துக் கொண்டிருந்தபொழுது அவருடைய உக்கிர தபசைக் கலைக்க மன்மதன் முன்வந்தான். காமன் என்பது அவனுடைய மற்றொரு பெயர். காமபாணத்தைத் தொடுத்து அவன் இறைவன் மீது எய்தான். தவவேந்தன் தமது நெற்றிக்கண்ணைத் திறந்தார். மன்மதன் உடனே உரு அழிந்து தகனமானுன். இந்நிகழ்ச்சி காமதகனம் எனப் பெயர் பெற்றுள்ளது. ஆசையை வேர் அறுத்த பின்பே ஹரனும் உமையும் மணந்துகொண்டார்கள். காமத்துக்கு அடிமைப்படாத மனைவாழ்வில் மாட்சிமைகள் அனைத்தும் நிறைந்துள்ளன என்பது சிவபெருமானது போதனையாகின்றது.

முக்கண்ணன்

நெற்றிக் கண்ணன் என்றும், கண்மேல் ஒரு கண் உடையான் என்றும் சிவபெருமான் பகரப்பெறுகின்றார். நெற்றியில் இருப்பது ஊனக்கண் அல்ல. அது ஞானக் கண். புலனடக்கம் பழகி முறையாகப் பிரம்மசரிய விரதத்தை அனுஷ்டிக்கின்றவனுக்கு ஞானக்கண் தானே

உண்டாகிறது. முழுமுதல் பொருளாகிய சிவன் முற்றிலும் ஞான சொரூபம். எனவே அவர் முக்கண்ணன் என இயம் பப்படுகிருர். அவர் நெற்றிக் கண்ணைத் திறந்து காமனைக் காய்ந்துவிட்டார் என்பது கொள்கை. இதில் தத்துவம் ஒன்று அடங்கியிருக்கிறது. மங்கிய வெளிச்சத்தில் வழியில் பாம்பு ஒன்று தென்பட்டது. அதை மிதிக்கும் தறுவாயில் இருந்தவன் துள்ளி அப்புறம் குதித்தான். தீபம் பிடித்துப் பார்த்தபொழுது அது பாம்பு அல்ல, கயிறு என்னும் உண்மை வெளியாயிற்று. ஞான விளக்கேற்றிப் பார்த்தால் உலகமாகத் தென்படும் பொருள் கடவுளாகத் தென்படும். ஞானக் கண்ணைத் திறந்து பார்த்தால் உலகம் அவிந்து போம் என்று இக்கோட்பாடு உருவகப்படுத்தி விளக்கப்படு கிறது. ஞானக் கண் திறக்கப் பெறுபவர்க்குப் பிறகு காமம் கிடையாது. எல்லாம் தெய்வ சொரூபமாகத் தென்படுவ தால் காமம் போய் சிவஞானத்தோடு கூடிய பக்தி மிஞ்சு கிறது. கடவுள் தாமே முக்கண்ணனுயிருந்து மாந்தர் முக்கண்ணர் ஆகவேண்டும் என்ற பாடத்தைப் புகட்டுகிருர்.

**திரிபுரதகனம்**

முப்புரம் எரித்த முதல்வன் என்று கடவுள் போற்றப் படுகிருர். ஜீவர்களாகிய நாம் செய்யவேண்டிய செயல் யாது என்பதைக் கடவுள் செய்துகாட்டுகிருர். திரிபுர சம்மாரத்துக்கு அவர் தாமே கர்த்தாவானுர். மூன்று அரக் கர்களுடைய கோட்டைகளை அழிப்பது அவசியமாயிற்று. அதற்கு அவர் பெரிய ஏற்பாடுகளைச் செய்தார். தக்க தள வாடங்களுடன் போருக்குப் போனுர். அம்பு ஒன்று எடுத் தார். அதையும் எய்ய அவசியம் இல்லாது போய்விட்டது. அவருடைய புன்சிரிப்பினுல் முப்புரங்களும் இருந்த இடம் தெரியாது மறைந்தன. சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய

முக்குணங்களும் மூன்று அரக்கர்கள் எனப்படுகின்றன. அவைகளின் ஆதிக்கத்தால் பிரபஞ்சம் அனைத்தும் உரு எடுக்கின்றன. முப்பாழ் ஆகிய இம்மூன்றையும் ஒடுக்கி விட்டால் பிரபஞ்சத்துக்கு அப்பால் உள்ள பெருநிலம் ஜீவனுக்குச் சொந்தமாகிறது. அதாவது ஜீவன் முக்தி யடைகிறான். அதற்குக் கடவுளைச் சார்ந்திருத்தல் வேண் டும். அப்படிச் சார்ந்திருக்கக் கற்றுக் கொள்வது பெரிய ஆயத்தம். அவருடைய அருளால் அம்மூன்று புரங்களும் அழிக்கப்படுகின்றன. சிவ சாயுஜ்யம் கிட்டுகிறது.

**ருத்திரன்**

மஹாதேவனுக்கு ருத்திரன் என்பது ஒரு பெயர். உயிர்களை அழச்செய்பவன் என்று அது பொருள்படுகிறது. அழுகையின்மூலம் உயிர்கள் பண்பாடு அடைகின்றன. சம்மாரம் என்பது ஒரு சீரிய செயல். பழுதுபட்ட உடல் களை அவன் அழிக்கிறான். அதற்குப் புறச் சின்னமாயிருப் பது ருத்திர பூமி அல்லது மசானம். அவனுக்குச் சிறந்த கோயில் சுடுகாடு. ஆங்குச் செல்ல அஞ்சுபவர் அவனை வழுத்தத் தகுதியற்றவர் ஆகின்றனர். சர்வகாலமும் சாந்த சொருபத்தில் இருப்பதே சிவனார் செயல் அன்று. இடை யிடையே உக்கிர சொருபம் எடுப்பதும் அவர் செயல். ருத்தி ரன், வீரபத்திரன் முதலாயினோர் அவருடைய பயங்கரவடிவங் களாம். அவைகளைப் போற்றுபவர் பயத்தை வெல்லுகின்ற னர். மசானத்தில் நுழைய அஞ்சுபவர் கோழைகள். மசா னத்துக்குச் சென்றால் தீட்டு ஏற்பட்டுவிடும் என்று எண்ணு பவர் அக்ஞான இருளில் உழல்கின்றனர். சிவனார் சுடலைப் பொடி பூசியிருக்கிறார். வெள் எலும்பை மாலையாகக்கோத்து அணிந்திருக்கிறார். கபாலத்தைக் கையில் ஏந்தியிருக்கிறார். மரணத்துடன் அவர் விளையாடுகிறார் என்பது பொருள்.

சிவனுக்குச் சொந்தமாவதற்கு விரும்புகின்றவர்களும் அங்ஙனம் மரணத்துடன் விளையாடவேண்டும். "இறப்பு அதனுக்கு என் கடவேன்?" என்பது சிவ பக்தனுடைய வாக்கு. காசி என்னும் சிவக்ஷேத்திரத்துக்கு மஹா ஸ்மசானம் என்று பெயர். சிவனை சேவிப்பவர் மரணத்துடன் விளையாடுகின்றனர்.

### கங்காதரன்

ஆகாசத்தினின்று பூலோகத்துக்குப் பிரசன்னமாகும் புனல் கங்கையைப் பரமேசுவரன் தமது ஜடாபாரத்தில் வாங்குகிறார். அதனால் அதன் வேகம் தணிகிறது. பின்பு அது பூமியில் பாய்ச்சப்படுகிறது. அருள் உலகுக்கும் புற உலகுக்கும் பயன்படும் பொருள் இதில் புதைந்து கிடக்கிறது. இமயமலை சொரூபமாக சிவபெருமான் அசைவற்றிருந்து கங்கையை வாங்கி உலகுக்கு உணவாவதற்கு அனுப்புகிறார். இது நமக்குக் கண்கூடாக விளங்கும் காட்சி. யோகியர்களுக்கு உச்சந்தலையில் ஸஹஸ்ராரத்தினின்று அமிர்ததாரை வடிகிறது. அதைப் புசித்து அவர்கள் பரமானந்தமெய்துகின்றனர். எம்பெருமான் யோகியர்க்கெல்லாம் இறைவன் ஆகின்றார். அவரது உச்சந்தலையினின்று வடியும் கங்கை இந்த அமிர்ததாரையின் சின்னமாகிறது. அதை முன்னிட்டு அவருக்கு கங்காதரன் என்னும் பெயர் வந்தது.

### துறவி வேந்தன்

திரிலோக குடும்பியாக இருக்கின்ற சிவன் பின்பு தியாகராஜனாகவும் இருக்கின்றார். அவர் விசுவத்துக்கே நாதன். அதாவது அகிலாண்டத்துக்கும் அவர் தலைவன். அப்படியிருந்தும் அண்டங்களினின்று தமக்கு உரியவை

களாக விலையுயர்ந்த எதையும் அவர் எடுத்துக்கொள்ள வில்லை. அநாதனாக அவர் வாழ்கின்றார். இரந்துண்பது அவருடைய அன்றாடத் தொழில். குடியிருக்க அவருக்குச் சொந்த இடமில்லை. சிறப்பாக அவர் எங்கு வீற்றிருக்கின் றாரோ அந்த இடத்தைத் தங்களுக்குரியதாக்க வேறு யாரும் போட்டி போடமாட்டார்கள். விசுவநாதனிடம் இத்தகைய முரண்பாடு தென்படுவது வியப்பன்றோ! இவரைப் பெற் றெடுத்தார் யாருமில்லை. அனைத்துக்கும் இவர் முழுமுதற் பொருள். இவருக்குத் தலைவர் யாருமில்லை. இவருக்கு மிக்க நாதன் யாருமில்லையாதலின் இவர் அநாதன். பிற வாத ஒருவர் யாருக்குப் பிள்ளையாவார்? இறைவனுக்குப் புறம்பாக பிரபஞ்சத்தில் பொருள் ஒன்றுமில்லை. தம்மைத் தவிர அவருக்கு வேறு உடைமை ஒன்றுமில்லை. எனினும் சில பொருள்களை அவர் படைத்திருக்கின்றார். ஆபரண மாக அமைந்தவைகள் சில; உபயோகத்துக்காகவென்று அமைந்தவைகள் வேறு சில. ஆபரணமாக அமைந்தவை களுள் முக்கியமானது பாம்பு. ஆதலால் அவர் பன்னக பூஷணன் என்னும் பெயர் பெறுகின்றார். அவருடைய ஆபர ணத்தை அபகரித்துக்கொண்டுபோகவோ, கொஞ்சநாள் உபயோகத்துக்காக இரவல் வாங்கவோ யாரும் முன்வர மாட்டார்கள். ஆக, மற்றவர்களுக்கெல்லாம் உதவாதது, மற்றவர்கள் கண்டு அஞ்சக்கூடிய பாங்கில் அவருக்கு ஆப ரணமாக அமைந்திருக்கிறது. பிணத்தைச் சுட்டெரித்த சுடலைப் பொடியை உடலெல்லாம் அவர் பூசிக்கொண்டிருக் கிறார். பிக்ஷை எடுப்பதற்குக் கபாலம் அல்லது மண்டை ஓடு ஒன்றைக் கையில் வைத்திருக்கிறார். இதையும் விரும்பி வேறு யாரும் கைப்பற்றமாட்டார்கள். எனவே, உலக நாதன் தமக்கு அணியாகவும், உபயோகத்துக்குரியவைகளா

வும் வைத்திருப்பவைகள் அற்ப வஸ்துக்களேயாம். எங்கும் நிறைபொருளாகிய அவருக்குத் தனி மாளிகை ஒன்றும் கிடையாது. சிறப்பாக அவர் ஏதேனும் ஓர் இடத்தில் இருக்கிருர் என்ருல் அது மசானம். அந்த இடத்தை உரி மைப்படுத்திக்கொள்ள வேறு யாரும் அங்கு வருவதில்லே. அவருடைய 'கோயில் சுடுகாடு, கொல் புலித்தோல் நல் லாடை, தாயுமிலி தந்தையுமிலி, தான் தனியன்' என்பது கோட்பாடு.

சிவபெருமான் ராஜபோகத்தில் மூழ்கியிருப்பவர் அல் லர். நாளேக்கென்று அவர் உணவு எதையும் தேடி வைத் துக்கொள்வதும் இல்லே. தினந்தோறும் மண்டை ஓட்டில் அவர் பிக்ஷையேற்று உண்கின்ருர். அப்படி அவர் இரந் துண்பதில் பொருள் ஒன்று உண்டு. துறவியர் பிக்ஷையேற் கின்றனர். யாசகர்கள் பொருள் ஏற்கின்றனர். இவ்விரண்டு செயல்களுக்குமிடையில் பெரிய வேற்றுமை உண்டு. வறு மையினல் வறியவன் ஐயம் ஏற்கிருன். அதற்கடிப்படையாக மனதில் ஐயப்பாடு இருக்கிறது. சோம்பேறி ஒருவன் உழைக்க முன்வருவதில்லே. உழைப்பைக் கண்டால் அவன் அஞ்சுகிருன். கஞ்சியாவது கொஞ்சம் கிடைத்தால் போது மென்று அவன் கெஞ்சுகிருன். அப்படி ஐயம் ஏற்பதால் அவன் தன்னேத் தானே சிறுமைப்படுத்திக்கொள்கிருன். தியாகி ஒருவனுடைய செயல் அத்தகையதன்று. உடல் அபிமானத்தையும், செல்வச் செருக்கையும், குலம், குடும்பம் ஆகியவைகளினின்று உதிக்கும் செருக்கையும் துறந்தவன் தியாகி. அவன் வீடுவீடாகச் சென்று பிக்ஷை ஏற்கின்ருன். அதில் துணிவும் சாந்தமும் உண்டு. தற்செயலாகக் கிடைக் கும் உணவை அவன் ஆசையின்றி ஏற்கின்ருன். உணவு அகப்படாத இடத்து அவன் சஞ்சலப்படுவதில்லே. அகப்

பட்ட உணவை உடலில் உறையும் இறைவனுக்கு நைவேத்தியமாகப் படைக்கிறுன்.

அத்தகைய துறவியர்களுக்குத் தலைவர் சிவபெருமான். தியாகராஜன் என்னும் பெயர் அவருக்கே உரியது. உலகப் பொருள் எதிலும் தாம் உரிமை பாராட்டுகிறதில்லை என்பதற்கு அறிகுறியாக அவர் பிக்ஷை ஏற்கின்றுர். உலகம் முழுதும் அன்னை பராசக்திக்கு உரியவை. ஆகையால் உண்மையான இல்லாள் அன்னை பராசக்தி ஒருத்தியே. சிவபெருமானே ஒன்றும் இல்லான். அம்பிகையிடமிருந்து அவர் அன்னம் ஏற்கிறுர். உடலுக்குத் தேவையாய் இருக்கிற அன்னத்தை ஏற்பதைவிடச் சிறந்த பிக்ஷை ஒன்று உண்டு. உள்ளத்தை உறுதிப்படுத்துவது நல்லறிவு. ஒன்றிலும் பற்று வைக்காது இருப்பதாலும் உள்ளம் உறுதி பெறுகிறது. சிவபெருமான் ஞானத்தையும் வைராக்கியத்தையும் பிக்ஷையாகப் பராசக்தியிடமிருந்து பெறுகிறுர். பிக்ஷைகளுள் இது மிக விசேஷமானது. சக்தியினிடத்திருந்து உலகத்தவர் போகத்தை ஏற்கின்றனர். சக்தியினிடத்திருந்து துறவியர் யோகத்தை ஏற்கின்றனர். துறவியர்க்கு வேந்தனுகிய தியாகராஜன் பிக்ஷாடனராய் வந்து பிக்ஷையேற்கிறுர். உடலுக்கு இன்றியமையாததாயிருக்கும் அன்னத்தையும் உள்ளத்துக்கு இன்றியமையாததாயிருக்கும் ஞானவைராக்கியத்தையும் அவர் ஏற்றுக்கொள்கிறுர். உடலைப் பேணுவது அன்னம். உயிரை ஓம்புவது ஞானவைராக்கியம். வாழ்க்கையின் குறிக்கோள் உயிர், உடல் ஆகிய இரண்டையும் ஒருங்கே ஓம்புதலாம். தியாகிகள் உலகில் இங்ஙனம் வாழ்ந்திருக்கவேண்டும் என்று தியாகராஜா தமது செயலின் மூலம் பாடம் புகட்டுகிறுர்

ஊர் ஊராய் ஓடித்திரிவதால் மட்டும் தியாகம் வந்து விடாது. வாழ்க்கையில் வைத்துள்ள பற்றுதலைப் போக்கு தலே துறவு. பிறப்பு, இறப்பு ஆகிய இரண்டையும் சம ஞகக் கருதுபவன் தியாகி. வாழ்க்கையை அனர்த்தமாகும் படி விட்டுவிடவேண்டுமென்பதல்ல இதன் பொருள். உயிர் வாழ்ந்திருக்கும் தியாகி ஒருவன் எங்ஙனம் உயிர் வாழவேண் டும் என்பதைத் தியாகராஜா விளக்கிக் காட்டுகிறார். நல் லாரும் பொல்லாரும் கூடி வாழ்க்கை என்னும் கடலைக் கடைகின்றனர். புராணபூர்வமாக இதைப் பகருங்கால் தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைதற்கு ஒன்று கூடினார்கள். வாழ்க்கையே பாற்கடல் என்று உருவகப் படுத்தி இயம்பப்படுகிறது. அன்னத்தை உண்டு உயிர் வாழவேண்டும். அன்னமாக உடல் வாழ்க்கை இருக்கிறது. ஆகவே அதைப் பாற்கடல் என்று சொல்லுவது பொருந்தும். அதில் நல்லவர்களுக்கும் பற்று உண்டு; கெட்டவர்களுக்கும் பற்று உண்டு. வாழ்க்கைப் பயனைப் பெறுவதற்கு நல்ல வரும் கெட்டவரும் ஒருவரோடு ஒருவர் ஒத்துழைக்கின்ற னர். மற்ற விஷயத்தில் பகைவர்களாக இருக்கும் தேவர் களும் அசுரர்களும் வாழ்க்கைப் பயனைப் பெறும் விஷயத்தில் ஒத்துழைக்க ஆயத்தமாய் இருக்கின்றனர். வாழ்க்கையில் கிடைக்கும் பலன்களைப் பங்கிட்டுக்கொள்வதற்கும் அவர் கள் இசைகின்றனர். பாற்கடலிலிருந்து நல்லவர்கள், கெட்டவர்கள் ஆகிய இருதரத்தாருக்கும் கிடைக்கக்கூடிய வைகள் செல்வம்,ஆபரணம்,வண்டி வாகனம், கல்வி, கீர்த்தி, படை, ஆதிக்கம் முதலியன. இப்படி அகப்படுபவைகளை உயிர் வாழ்பவர்கள் வேண்டியவாறு தங்களுக்கிடையே பங்குபோட்டுக்கொள்கின்றனர். தேவர்களும் அசுரர்களும் அச்செயலைச் செய்தார்கள் என்று புராணம் பகர்கிறது.

கடைசியாக அவர்களை எடுத்து விழுங்கும் விஷம் வந்தது. அதைப் பங்குபோட்டுக்கொள்ள அவர்கள் முந்தவில்லை. அதனிடத்திருந்து விலகி ஓட முயன்றனர். ஆனால் அது சாத்தியமாகவில்லை. எங்குச் சென்றாலும் விஷம் அவர்களை விழுங்க வந்தது. கடைசியாக மகாதேவனுடைய முன்னிலைக்குச் சென்று அவர்கள் வணங்கி நின்றனர். சங்கரனும் அவர்களை விழுங்க வந்த விஷத்தைத் தாம் எடுத்து உண்டார். அதைக் கண்டத்தில் நிறுத்தினார். ஆதலால் அவருக்கு கறைக்கண்டன் என்றும், நீலகண்டன் என்றும், ஸ்ரீகண்டன் என்றும் பெயர் வந்தது.

உலகை விழுங்கவந்த விஷம் வேறு ஒன்றுமல்ல. மரணம் விஷம் என்று விளக்கப்படுகிறது. உலகப்பொருள்களைப் பங்குபோட்டுக்கொள்கிறவர்கள் உலக வாழ்வினின்று வரும் மரணத்தை ஏற்க மறுதலிக்கின்றனர். ஆயினும் அவர்கள் தப்பித்துக்கொள்ள முடியாது. மரணத்தினின்று தப்பித்துக்கொள்ளுதற்கு ஓர் உபாயம் உள்ளது. சங்கரனிடம் சரணடைவதே அவ்வுபாயம் ஆகும். பின்பு சங்கரன் என் செய்கின்றார்? அவர் செயலில் தியாகத்தின் உச்ச நிலையைக் காண்கிறோம். விஷத்தைத் தாம் ஏற்றுக்கொள்கிறார். மற்ற நலன்களையெல்லாம் மாந்தருக்குக் கொடுத்து விடுகிறார். உலக மக்களுக்கு நலன்களையெல்லாம் வழங்குதலும், கேடுகளையெல்லாம் தமக்குச் சொந்தமாக வைத்துக் கொள்ளுதலும் துறவியர் செயல் ஆகவேண்டும். துறவி வேந்தனாகிய சிவபெருமான் இச்செயலைச் செய்கின்றார். உலகப்பற்றுடையவர் நலன் தருபவைகளைத் தங்களுக்காக வென்று வைத்துக்கொண்டு கேடுவிளைவிப்பவைகளை மற்றவர்களிடம் விட்டுவிடுகின்றனர். உண்மையான துறவியர் உலகுக்கு யாண்டும் நலத்தையே வழங்குகின்றனர். அதனால்

வரும் கேடுகளைத் தாங்களே ஏற்றுச் சகித்து வருகின்றனர். சிவபெருமான் நீலகண்டன் ஆனது தியாகத்தின் உச்ச நிலையாம்.

திருநடனம்

உயிர்களுக்கு வாழ்க்கை ஆரம்பநிலையில் இருக்கும் பொழுது அது சக்தியினுடைய பரிபாலிப்பில் அடங்கியிருக்கிறது. சிவபோதம் அப்பொழுது பின்னணியில் மறைந்து கிடக்கிறது. பல பிறவிகளில் உயிர்கள் பண்பாடு அடைந்து வருகின்றன. ஞானத்துறையில் ஜீவர்கள் மேலே போகப் போக இக்காட்சி மாறியமைகிறது. சிவ சொரூபம் முன்னணிக்கு வரவர சக்தியின் செயல் சிறிது சிறிதாகப் பின்னணிக்குப் போகிறது. கடைசியாக சிவ சொரூபத்தில் சக்தியின் ஆதிக்கம் மறைந்துவிடுகிறது. சிவபோதத்தின் தலையெடுப்பு அங்கு தாண்டவமாடுகிறது. தேவியின் திருநடனமாகத் துவங்கிய வாழ்க்கைமுறை அம்பலக் கூத்தனுடைய திருநடனமாக முற்றுப்பெறுகிறது. முற்பகுதியில் ஆடும் தெய்வமாக இருந்தவள் அம்பிகை. பிற்பகுதியில் ஆடும் தெய்வமாக இருப்பவன் ஈசன். இயற்கை என்னும் சுடுகாடு சக்திக்கு ஆடுமிடம். மற்று சித் ஆகாசம் அல்லது அறிவு வெளி ஐயனுக்கு ஆடுமிடம். இந்த அறிவு வெளியானது சித் அம்பரம் என்றும் சித்சபை என்றும் இயம்பப்படுகிறது. அதனிடத்திருந்து கிளம்பும் ஒளியை முன்னிட்டு அது கனகசபை என்றும் பெயர் பெறுகிறது. ஆரம்ப தசையில் அன்னையினால் பரிபாலிக்கப்படும் குழந்தைகள் யௌவனதசையில் பிதாவினால் பயிலுவிக்கப்படுகின்றனர். ஞானத்துறையில் மேல் நிலைக்கு வந்தவர்கள் சித்சபைக்குத் தலைவனாய் இருக்கும் சபாபதியை வணங்கியாக வேண்டும்.

சபை ஒன்றுக்குத் தலைவனாயிருப்பவனது சாமர்த்தியத்துக்கு ஏற்ப அந்தச் சபையின் நடைமுறை ஒழுங்குப்பாடுடையதாக இருக்கும். அகிலாண்டமும் கூடி ஒரு பெரிய சபை ஆகிறது. அதற்குச் சபாபதியாக சிவபெருமான் வீற்றிருக்கின்றார். சந்திர சூரிய நக்ஷத்திரங்களின் இயக்கங்கள், கோளங்களின் இயக்கங்கள், உயிர் வகைகளின் வாழ்க்கை முறைகள், படிப்படியாக உயிர் வகைகள் முன்னேற்றம் அடையும் முறைகள்—சுருங்கச் சொல்லின் அண்டங்கள் அனைத்தின் இயக்கங்கள் முறைபிறழாது நிகழ்ந்து வருகின்றன. சபாபதியின் அறிவுத் திறமையே அதற்கு முதற் காரணமாகும். சபேசனாய் எழுந்தருளியிருக்கும் பரமன் தமது செயலின் மூலம் உயிர்களுக்கு ஞான வாழ்க்கைக்குரிய நல்ல பாடத்தைப் புகட்டி வருகிறார். நல்லாசிரியர் ஒருவர் மாணாக்கர்களுக்குப் பாடம் புகட்டும்பொழுது தம்மையே மாணாக்கர்களுடைய நிலையில் வைத்துக்கொள்கிறார். மாணாக்கர்களுடன் இருந்து அவர்கள் கற்கவேண்டிய பாடங்களைத் தாமே கற்று வருவது போன்று காட்டி அவர்களுக்குக் கற்பித்து வருகிறார். ஜீவர்கள் வாழ்க்கையின் இறுதி நிலையில் எதைச் செய்யவேண்டும் என்பதை சபாபதி தாமே மகிழ்வோடு செய்து காட்டுகிறார். முயலகன் என்ற அரக்கன் ஒருவன் இருக்கின்றான். அவன் பிரகிருதியின் பிரதிநிதி. சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்கள் மயமாக அவன் அமைந்துள்ளான். அத்தகைய அரக்கனை ஒரு காலால் மிதிக்கின்ற பாங்கில் அண்ணல் ஆடுகின்றார். 'முக்குணமாயுள்ள மாயைக்கு அடிமைப் படாதே; அதை உதைத்துத்தள்ளு. பிரகிருதியின் ஆதிக்கத்தைப் புறக்கணித்தாலொழிய ஞான வாழ்க்கைக்குச் சாதகன் தகுதியுடையவன் ஆகமாட்டான்' என்னும் கோட்

பாட்டை இச்செயலின் மூலம் சிவபெருமான் உயிர்களுக்கு விளக்குகிருர். தூக்கிய பாதமோ மற்ருெரு கோட்பாட்டை விளக்குகிறது. ஜாக்ரதம், சொப்பனம், சுழுத்தி என்பன ஜீவர்கள் நாள்தோறும் அனுபவித்து வரும் அவஸ்தைகள் ஆகின்றன. விழிப்பு, கனவு, உறக்கம் என்பன இவைகளின் பொருள். இம்மூன்று நிலைக்கும் முப்பாழ் என்பது பெயர். துரியநிலை என்பது ஒன்று ஜீவர்களுக்கு உண்டு. அது இந்த மூன்று அவஸ்தைகளுக்கும் பொதுவாய் இருக்கிறது. மேலும் இம்மூன்று அவஸ்தைகளுக்கு அப்பாற்பட்டதாகவும் அது இருக்கிறது. அதை உணர்பவனே ஞான வாழ்க்கைக்குத் தகுதி உடையவனுகின்ருன். அப்பொழுதே உண்மையான ஆனந்தத் தாண்டவம் அவனுக்குத் துவங்குகிறது. குஞ்சிதபாதம் இக்கோட்பாட்டை விளக்குகிறது.

அரசமரத்தின் வேர் மலை இடுக்கில் ஆழ்ந்து பதிந்திருக்கிறது. மேல் கிளைகளை எவ்வளவு வெட்டினுலும் உள்ளிருந்து அது முளைத்துக்கொண்டே வரும். ஆணவ அகங்காரம் அத்தகையது. அரசமரத்து வேர் கொடியது அன்று. ஆனல் அகங்காரமோ கொடியதிலும் கொடியது. புலியைப் போன்று அது பொல்லாதது. துரத்த முயன்ருல் அதன் துஷ்டத்தனம் தோன்றும். அதைக் கொன்ருலொழிய ஆத்ம சொருபத்தின் மகிமை தோன்ருது. அகங்காரம் என்னும் புலியை சிவகுருநாதன் தாமே கொன்று அதன் தோலைத் தமது அரையில் அசைத்திருக்கிருர். அகங்காரத்தை எங்ஙனம் களைய வேண்டும் என்னும் பாடத்தை இச்செயலின் வாயிலாக ஜீவர்களுக்கு அவர் புகட்டுகிருர்.

மனிதனுடைய மனது மான் போன்றது. அது ஓர் இடத்தில் நிலைத்து இராது. துள்ளிக்குதித்து வெவ்வேறு இடங்களுக்கு நொடிப்பொழுதில் ஓடிவிடும். மனது என்னும்

மான் எண்ணிறந்த எண்ணங்களில் துள்ளிக்குதிக்கும் தன்மை படைத்திருக்கிறது. மனதை அடக்கத் தெரிந்தவனே மஹாயோகி ஆகிறான். எம்பெருமான் இப்பெரிய பாடத்தைத் தமது தாண்டவத்தில் அடக்கி வைத்திருக்கிறார். ஆடும் தெய்வமாகிய அவர் ஒரு கையில் மானைப் பிடித்து வைத்திருக்கிறார். அவர் கையில் அகப்பட்ட மான் கையில் இருந்தபடியே புறத்திலுள்ள பல பொருள்களைப் பார்த்துக் கொண்டிருக்கவும் கூடும். ஆனால் அப்படிச் செய்வதற்கு அதற்கு உரிமையில்லை. கையில் அகப்பட்ட மான் சர்வகாலமும் அவருடைய முக விலாசத்தைப் பார்த்த வண்ணமாய் இருக்கிறது. ஆத்ம சாதகர் மனதை அங்ஙனம் முற்றிலும் தங்கள் வசத்திலேயே வைத்திருக்கவேண்டும். அத்தகைய மனது சிவ சொரூபத்தைச் சிந்திப்பதல்லாது வேறு எச் செயலையும் செய்யலாகாது. காந்தம் தீட்டிய ஊசி வட திசையையே நோக்குவது போன்று பேரன்பு நிறைந்த மனது பரமனையே சார்ந்திருக்கவேண்டும் என்பது கோட்பாடு.

டமருகம் அல்லது உடுக்கையை ஒரு கையில் சிவபெருமான் பிடித்துள்ளார். அது ஓசையை உண்டுபண்ண வல்லது. கடவுள் நாதப்பிரம்மம் எனப்படுகிறார். ஓசை ஒலி எல்லாம் ஆனவர் அவரே. அத்தகைய நாதம் விந்துவின் நிலையைப் பெற்றுள்ளது. விந்து அல்லது வித்து இருந்தால் மரத்தை உண்டுபண்ணி விடலாம். நாதம் என்னும் விந்துவிலிருந்து உலகு அனைத்தும் உண்டாயிற்று. நாதத்தைக் கிளப்புதல் மூலம் உலகத்தை உண்டுபண்ண முடியும். நாதத்தை நிறுத்தி விட்டால் பிரபஞ்சமும் ஒடுங்கிவிடும். நாதத்தை முறையாகக் கையாளுதலே கடவுள் வணக்கமாகிறது. ஒவ்வொரு ஜீவனிடத்திருந்தும் ஓசை உதித்துக் கொண்டிருக்கிறது. இறைவனுடைய திருநாமம் என்னும் ஓசையை அவன் தன்னிடத்

திருந்து ஓயாது கிளப்புவாளுகில் அதன் மூலம் ஆத்ம சாதகன் தன் சொரூபத்தை தெய்வ சொரூபமாகத் திருத்தியமைக்கலாம். பிறகு அந்த சொரூபத்தையும் கடந்த பெரிய நிலைக்கு அவன் போக வல்லவனுகின்ருன். ஓசையின் மூலம் ஜீவாத்மன் தன்னை மேலானவனுகவோ, கீழானவனுகவோ மாற்றிக்கொள்ள முடியும் என்னும் பெரிய பாடத்தை சிவபெருமான் உடுக்கையின் மூலம் புகட்டிக் கொண்டிருக்கிருர்.

மற்ருெரு கரத்தில் கடவுள் கனலை ஏந்தியிருக்கின்ருர். அது ஞானத்தின் சின்னம். நல்லது கெட்டது ஆகிய எல்லாவற்றையும் சாம்பலாக்கும் தன்மை தீக்கு உண்டு. எல்லாம் எரிந்துபோன பிறகு எஞ்சியிருப்பது நீறு. அதை மேலும் தகிக்கத் தீக்கு இயலாது. சிவஞானம் என்னும் அக்கினியானது கர்மத்தையும் கர்மத்திலிருந்து வந்துள்ள உலக வாழ்க்கையையும் எரித்து விடவல்லது. பிரபஞ்ச வாழ்வெல்லாம் எரிந்து போன பிறகு எஞ்சியிருப்பது நீறு பூசிய சிவம் ஒன்றே. அத்தகைய சிவஞானம் அமிர்தம் போன்றது. பெருவாழ்வும் பேரானந்தமும் அதனிடத்திருந்து வடிவெடுக்கின்றன. அது பிரகாசம் வாய்ந்தது எனினும் அதனிடத்து சாந்தமும் இனிமையும் நிறைந்திருக்கின்றன. தூய்மைக்கு அது இருப்பிடமாகிறது. இக்கோட்பாட்டைத் தமது ஜடாபாரத்தில் குடியிருக்கும் சந்திரனைக் கொண்டு அவர் புகட்டுகிருர்.

அண்ணலுடைய தாண்டவத்திலே ஊர்த்வ தாண்டவம் என்னும் பகுதி ஒன்று உண்டு. பிரபஞ்சத்தை அமைப்பதிலும் அதை முறையாக நடாத்துதலிலும் சிவமும் சக்தியும் சேர்ந்து பங்கு எடுத்துக் கொள்கின்றனர். முறையாகப் பிரபஞ்சத்தை நடாத்துதலிலேயே அவர்கள் பேரானந்தம் கொள்கின்றனர். அந்த ஆனந்தத்தின் அறிகுறியாக அவர்கள் இருவரும் தாண்டவமாடுகின்றனர். ஆனந்தம் செயலாக

வடிவெடுக்குங்கால் அது தாண்டவமாய் விடுகிறது. பிரபஞ்சத்தை இயக்குதலில் இருவரும் விதவிதமாகத் தாண்டவமாடினர். தாண்டவத்தின் பெரும்பகுதியில் சிவமும் சக்தியும் ஒருவருக்கொருவர் நிகராயினர். ஆனல் ஊர்த்வ தாண்டவம் என்னும் கடைசி நிகழ்ச்சியில் அம்பிகை சிவபெருமானுக்கு நிகராகவில்லை. இதைச் சாமான்யமாகப் பொருள் படுத்துபவர்கள் பெண் ஒருத்திக்கு ஒற்றைக்காலைத் தலைக்கு மேல் உயரத்தூக்கித் தாண்டவம் புரிவது தகாத செயல் எனக் கருதுகின்றனர். ஆனல் இதைப் பற்றிய உண்மை முற்றிலும் தத்துவத்தைப் பற்றிய விளக்கமாகும். ஜீவன் ஒருவன் பலவிதமான ஞானபூமிகளைக் கடந்து உச்சந்தலையிலிருக்கும் சஹஸ்ராரம் என்னும் ஏழாவது ஞானபூமிக்குப் போகும்பொழுது அவனுக்கு ஜீவபோதம் மிச்சமிருப்பதில்லை. கடலில் கலக்கின்ற நதிபோன்று தனது வியக்தியையெல்லாம் அவன் இழந்து விடுகிருன். சுத்த சிவம் ஒன்றே எஞ்சியிருக்கின்றது. சக்தியும் தன் இயல்பை ஆங்கு இழந்து விடுகின்ருள். ஊர்த்வ தாண்டவத்தின் அடிப்படைக் கோட்பாடு இதுவேயாம்.

**அடிமுடி காணுதநிலை**

சிவனைப்பற்றிய மற்ருெரு கோட்பாடு உண்டு. படைக்கின்ற தெய்வமும், காக்கின்ற தெய்வமும் ஆகிய பிரம்மாவும் விஷ்ணுவும் தத்தம் பெருமையை எடுத்து விளக்க ஆரம்பித்தனர். இவ்விருவரும் தம்மையே பெரிய பொருளாக எடுத்துக்காட்ட யத்தனித்தார்கள். அப்பொழுது அவர்களுக்கிடையில் மற்ருெரு பெரிய பொருள் தென்பட்டது. அதன் அடியையும் முடியையும் காண அவர்கள் இருவரும் முயன்றனர். ஒருவர் பன்றியாக மாறி பாதாளமெங்கும் சென்று பார்த்தார். மற்றவர் அன்னமாக மாறி மேல் நோக்கிச்

சென்று பார்த்தார். அப்பொருளின் எல்லையைக் கண்டு பிடிக்க இருவருக்கும் இயலவில்லை. அது ஆதியந்தமில்லாத அகண்டவஸ்து என்னும் முடிவுக்கு வந்தனர். சமயவாதிகள் இக்கோட்பாட்டை தெய்வங்களுக்கிடையில் உயர்வு தாழ்வு பாராட்டப்பயன்படுத்துகின்றனர். ஆனல் உயர்வு தாழ்வைக் காட்டுதற்கென்று அமைந்ததல்ல இக்கோட்பாடு. பரம்பொருள் உருவம் உடையதாகவும் இருக்கின்றது; உருவத்தைக் கடந்த நிலையிலும் இருக்கின்றது. வேதாந்த பூர்வமாகப் பகர்வோமாயின் அதே பொருள் சகுண பிரம்மமாகவும் நிர்குண பிரம்மமாகவும் இருக்கிறது. சகுண பிரம்மத்தின் வெவ்வேறு அம்சங்களாக தேவதைகள் அனைவரும் வந்தமைகின்றனர். அந்த அளவில் அவர்கள் தமக்குரிய வியக்தியை அல்லது வடிவத்தை எடுத்துக் கொள்கின்றனர். வடிவம் படைத்த பகுதி வடிவத்துக்கப் பாலுள்ளதை முழுதும் அறிந்துகொள்ள முடியாது என்பது கோட்பாடு. மெய்ப்பொருள் ஒன்று தான் இருக்கின்றது. அது இத்தனை தெய்வங்களாகத் தன்னைத் தோற்றுவித்துக்கொள்கிறது. இத்தோற்றங்களுக்கெல்லாம் அப்பால் அகண்டவஸ்துவாகவும் அது இருக்கின்றது. அந்த அகண்டவஸ்துவை எப்பெயர் இட்டும் அழைக்கலாம். ஆனல் அதற்கு அடிமுடி காண வடிவம் எடுத்துள்ள எப்புருஷனுக்கும் இயலாது என்பது கருத்து.

### தக்ஷிணமூர்த்தி

மலையுச்சியை எட்டிய ஒருவன் கீழும் மேலும் எல்லாத் திசைகளிலும் வெட்ட வெளியையே காண்கின்ருன். வெட்ட வெளியிலுள்ள மேடுபள்ளங்கள் அவனுக்குத் தென்படுவதில்லை. பரந்த ஒரே வெளியை அவன் காண்கிருன். சிவ சொருபத்தில் பல படித்தரங்கள் இருக்கின்றன. பிரபஞ்சத்

தின் நடைமுறையாக அவருடைய சொரூபம் ஆரம்பிக்கிறது. பிறகு படிப்படியாக அந்த சொரூபம் மேல்நிலைக்குப் போகிறது. சிவசொரூபத்தின் உச்சநிலை என்று தக்ஷிணா மூர்த்தியைச் சொல்லலாம். கல்லால மரத்தடியில் அவர் தென்முகமாக வீற்றிருக்கிறார். தக்ஷிணம் என்னும் சொல் தெற்கு எனப்பொருள்படுகிறது. ஆலமரம் பிரபஞ்ச வாழ்க்கைக்குப் புறச் சின்னமாகும். உலக வாழ்க்கையின் உயர்ந்த லக்ஷியம் எது என்பதை ஆலமரமும் அதன் அடியில் எழுந்தருளியிருக்கும் சிவசொரூபமும் சேர்ந்து விளக்குகின்றன. உத்தமனை அடைவதற்கு உலக வாழ்க்கை உதவி புரிதல் வேண்டும் என்பதே அதன் உட்கருத்து. பரமனை அடைவதற்கென்று பாரினில் வசித்திருப்பவரே பெருமக்கள் ஆகின்றனர். மற்ற லக்ஷியங்களெல்லாம் சிற்றுயிர்களாலும் அடையப்பெறுபவைகள் ஆகின்றன. பாரமார்த்திகப் பெருநிலை என்னும் பேறு அலாதியாக மக்களுக்கே உரியது ஆகிறது. மக்களாக மண்ணுலகில் பிறந்தவர்கள் மெய்ப்பொருளை அடைய முயலுதல்வேண்டும்.

குரு என்பதன் பொருள் பெரியவன். தேவர்க்கெல்லாம் தேவனாகிய மஹாதேவன் தொல்லோன். பழையவைகளுள் அவரே மிகப்பழையவர். ஆயினும் அவர் தென்முக தேசிக வடிவத்தில் எழுந்தருளியிருக்கும்பொழுது ஒரு யுவன் ஆகக் காட்சி கொடுக்கிறார். பரம்பொருளிடத்து எவ்வித மாறுதலும் ஏற்படுகிறதில்லை. ஆதலால் அவர் என்றைக்கும் புத்தம் புதியவராகவே பொலிகின்றார். எல்லாவற்றிற்கும் முன்னையவர் சிவன். எல்லாவற்றிற்கும் பின்னையவராக எஞ்சியிருப்பவரும் சிவன். என்றைக்கும் மாறாதிருப்பதே அவரது இளமைக்குக் காரணம். சிஷ்யர்களாக அவரை அணுகியுள்ள ரிஷிகளோ மிகமிக வயோதிகர்கள். பிறவி

கள் பல எடுத்த பெருமக்கள் அவர்கள். பிரபஞ்சத்தைப் பற்றியும் பரம்பொருளைப்பற்றியும் அவர்கள் பெற்ற அனுபவம் அளவையில் அடங்காதது. அனுபவத்தில் அவர்கள் முதியோர். அவர்கள் பெற்ற பலதிறப்பட்ட அனுபவங்களே அவர்களது முதுமைக்கு முகாமையாகின்றன. ஆக, குரு யுவனாகவும், சிஷ்யர்கள் விருத்தர்களாகவும் கூடியிருப்பதில் வியப்பொன்றுமில்லை.

பரமகுரு ஆகிய தக்ஷிணாமூர்த்தி வீராசனம் பூண்டிருக்கிறார். அவர் ஏன் அப்படிச் செய்யவேண்டும்? வெற்றியடைந்துள்ள ஒருவர் வீராசனத்தில் வீற்றிருக்கின்றார். வீரர்களுள் அவரையே வீரேசுவரன் என்று சொல்லவேண்டும். பரஞானத்தை அடைவதொன்றே உண்மையான வெற்றி. பரஞானம் அடைவதும் பரம்பொருளை அடைவதும் ஒன்றே. பரத்தை அடைந்தவன் பின்பு பெறவேண்டியது ஒன்றுமில்லை. பிரபஞ்சப்பொருள்களை அடைந்தவன் அவைகளை நாளடைவில் இழந்துவிடுவான்; பரத்தை அடைந்தவனோ அதை இழந்துவிடுவதில்லை. ஆதலால் பரத்தை அடைதல் ஒன்றே வெற்றிகளுள் ஒப்பு உயர்வு அற்றதாகிறது. ஏனைய பொருள்களை ஒருவன் பெற்றால் வேறு ஒருவனுக்கு அதனால் நஷ்டம் வருகிறது. ஒருவனுக்கு லாபம் வரும்பொழுது மற்றொருவனுக்கு அது நஷ்டம் ஆகிறது. ஆனால் பரம்பொருளை ஒருவர் அடைவதால் வேறு யாருக்கும் நஷ்டமில்லை. எல்லார்க்கும் அந்நிகழ்ச்சி நன்மை தருவதாகவே நிகழ்ந்து விடுகிறது. அத்தகைய அரும்பெரும் செயலைச் செய்பவர் வீராசனத்தில் வீற்றிருப்பதுதானே முறை! தக்ஷிணாமூர்த்தி வீராசனத்தில் வீற்றிருக்கிறார்.

சின்முத்திரை தரித்துள்ளார் சிவகுரு. சாந்தமும் தூய்மையும் அவர்பால் திகழ்கின்றன. பரஞானமே வடிவெடுத்

தாலன்ன அவர் வீற்றிருக்கிறார். அவர் ஓங்காரத்தின் உட்பொருள். அகண்ட சச்சிதானந்தமாயுள்ள பரமாத்மா தன்னில் தான் திருப்தியடைந்தவராய் இருக்கிறார். மனம் மொழிக்கு எட்டாத பெருநிலை அது. பேச்சுக்கு ஆங்கு இடமில்லை. அந்த ஆனந்தத்தில் ஒரே மௌனம். ஜீவன் அடையவேண்டிய முடிவான நிலை அதுவாகும். பரமசிவன் தாமே அப்பெரு நிலையில் இருந்து பக்குவமடைந்த ஜீவர்களுக்கு அதைக் காட்டியருளுகின்றார். இடையறாத மௌனோபதேசம் அவரது சொரூபத்தில் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. அக்கடவுளை அணுகியிருப்பவர்கள் நேர்மையான வாழ்வே வடிவெடுத்துள்ள மாமுனிவர்கள். கருவி கரணங்கள் ஓய்ந்த தொண்டர்கள் என்று அவர்களையே இயம்புதல் வேண்டும். தெளிந்த கண்ணாடியின் எதிரில் உள்ள பொருள்கள் உள்ளபடி தென்படுகின்றன. தெளிந்த கண்ணாடி போன்ற உள்ளத்தை அம்முனிவர்கள் பெற்றிருக்கிறார்கள். சிவபெருமானது மௌனோபதேசத்தின் உட்கருத்து அவர்களுடைய உள்ளத்தில் உள்ளபடி விளங்கிவிடுகிறது. ஐயம் அறவே அகன்று விடுகிறது. ஆத்மாவின் நிஜசொருபத்தைப் பற்றிய ஞானம் ஒளிர்கிறது. பிறவிப் பெருங்கடலைக் கடந்தாய் விட்டது. பேரானந்தப் பெருநிலை என்னும் கடலினுள்ளே ஜீவன் என்னும் நதி நுழைந்தாய்விட்டது. நதி என்னும் பெயரை இழந்துவிட்டுக் கடலுள் அது கடலாய் விடுகின்றது. வீடு என்பதும் சிவ சாயுஜ்யம் என்பதும் முக்தி என்பதும் இதுவே. ஜடநிலையில் வாழ்க்கையைத் துவக்கிய ஜீவனைப் படிப்படியாகப் பக்குவப்படுத்தி இறுதியில் தம்மில் லயமாக்கிக்கொள்கின்றார். எல்லாம் சிவ சொருபம் ஆய்விடுகின்றது. ஜீவனை இப்பெரு நிலையில் கொண்டு சேர்ப்பவர் தக்ஷிணாமூர்த்தி.

---

## அர்ச்சனைக்குரிய நாமங்கள்

1. ओं महेश्वराय नमः ஓம் மஹேச்வராய நம:
மஹேச்வரன்—பேரிறைவன்

2. ,, भस्मोद्धूलितविग्रहाय नमः ஓம் பஸ்மோத்தூலித விக்ரஹாய நம:
பஸ்மோத்தூலிதவிக்ரஹன்—நீறு பூசியவன்

3. ,, श्मशानवासिने नमः ஓம் ஸ்மசானவாஸினே நம:
ஸ்மசானவாஸீ—சுடுகாட்டில் வசிப்பவன்

4. ,, विश्वनाथाय नमः ஓம் விச்வநாதாய நம:
விச்வநாதன்—உலகு அனைத்துக்கும் இறைவன்

5. ,, महादेवाय नमः ஓம் மஹாதேவாய நம:
மஹாதேவன்—பெரிய பொருள்

6. ,, शूलपाणये नमः ஓம் சூலபாணயே நம:
சூலபாணி—கையில் சூலத்தையுடையவன்

7. ,, त्रिलोचनाय नमः ஓம் த்ரிலோசனாய நம:
த்ரிலோசனன்—முக்கண்ணான்

8. ,, भुजङ्गभूषणाय नमः ஓம் புஜங்கபூஷணாய நம:
புஜங்கபூஷணன்—பாம்பை அணிந்திருப்பவன்

9. ,, मृगपाणये नमः ஓம் ம்ருகபாணயே நம:
மிருகபாணி—மானைக் கையில் பிடித்திருப்பவன்

10. ,, ढक्कावते नमः ஓம் டக்காவதே நம:
டக்காவான்—உடுக்கையுடையவன்

11. ,, शिवाय नमः ஓம் சிவாய நம:
சிவன்—செம்பொருள்

12. **ओं नटनेशाय नमः** ஓம் நடனேசாய நம:
நடனேசன்—நடனம் புரிபவன்

13. ,, **कालकालाय नमः** ஓம் காலகாலாய நம:
காலகாலன்—காலத்தை வென்றவன்

14. ,, **अर्धनारीशाय नमः** ஓம் அர்த்தநாரீசாய நம:
அர்த்தநாரீசன்—மாது ஒருபாகம் ஆனவன்

15. ,, **भिक्षाटनाय नमः** ஓம் பிக்ஷாடனாய நம:
பிக்ஷாடனன்—இரந்துண்பவன்

16. ,, **हुताशनसहायाय नमः** ஓம் ஹுதாசனஸஹாயாய நம:
ஹுதாசனஸஹாயன்—அக்னியைக் கையில் வைத்திருப்பவன்

17. **ओं गङ्गाधराय नमः** ஓம் கங்காதராய நம:
கங்காதரன்—கங்கையைத் தரித்திருப்பவன்

18. ,, **उन्मत्ताय नमः** ஓம் உன்மத்தாய நம:
உன்மத்தன்—பித்தன்

19. ,, **ऊर्ध्वरेतसे नमः** ஓம் ஊர்த்வரேதஸே நம:
ஊர்த்வரேதஸ்—மேல் நோக்கிச் செல்லும் பிந்துவையுடையவன்

20. ,, **कैलासवासिने नमः** ஓம் கைலாஸவாஸினே நம:
கைலாஸவாஸீ—கைலாயத்தில் வசிப்பவன்

21. ,, **नीलकण्ठाय नमः** ஓம் நீலகண்டாய நம:
நீலகண்டன்—கறைகண்டன்

22. ,, **पशुपतये नमः** ஓம் பசுபதயே நம:
பசுபதி—உயிர்களுக்குத் தலைவன்

23. ओं वृषवाहनाय नमः ஓம் வ்ருஷவாஹனாய நம:
விருஷவாஹனன்—காளை வாஹனன்

24. ,, त्यागेशाय नमः ஓம் த்யாகேசாய நம:
த்யாகேசன்—துறவி வேந்தன்

25. ,, त्रिलोककुटुम्बिने नमः ஓம் த்ரிலோககுடும்பினே நம:
த்ரிலோககுடும்பி—உலகனைத்தையும் குடும்பமாகக் கொண்டவன்

26. ,, रुद्राय नमः ஓம் ருத்ராய நம:
ருத்திரன்—அழச்செய்பவன்

27. ,, सदाशिवाय नमः ஓம் ஸதாசிவாய நம:
ஸதாசிவன் – யாண்டும் மங்களமானவன்

---

# 8. ஆலய வழிபாடு

**ஸ்தலம் என்பது யாது?**

இயற்கை முழுதிலும் அழகு உண்டு. சில இடங்களில் அமைந்துள்ள அழகு நம் உள்ளத்தை அறவே கொள்ளை கொண்டு போகிறது. மனத்தகத்து மேலான எண்ணத்தை ஊட்டுதற்கும் அத்தகைய அழகு பயன்படுகிறது. உயர்ந்த எண்ணங்களை எண்ணுதற்கு அழகிய இடங்கள் பெரிதும் பயன்பட்டு வந்திருக்கின்றன. ஓர் இடத்தில் உதித்த உயர்ந்த எண்ணமானது பிறகு அந்த இடத்துக்கே புதிய அருள் சக்தியை நல்குகிறது. உயர்ந்த எண்ணம் அழிவற்றது என்பதும் ஆன்றோர்கள் துணிபு. அவர்கள் எண்ணிய உயர்ந்த எண்ணங்களும் இயற்கையின் பொலிவும் ஒன்று

சேர்ந்து ஓர் இடத்தைப் புண்ணிய ஸ்தலமாக்குகின்றன. புண்ணிய ஸ்தலத்துக்கு மூல மகிமை இங்ஙனம் அமைகிறது.

தபஸ்விகளும் முனிவர்களும் பல காலங்களில் பல இடங்களில் வசித்து வந்துள்ளனர். அன்னவர்களின் உள்ளத்தில் உயர்ந்த எண்ணங்கள் ஓயாது உதித்து வந்தன. இந்த எண்ணங்களின் வலிவால் அவர்களுடைய வாச ஸ்தலங்கள் புண்ணிய க்ஷேத்திரங்கள் ஆயவிட்டன. நாளடைவில் அத்தகைய க்ஷேத்திரங்களில் பெரிய மாறுதல்கள் உண்டாகக் கூடும். அத்தகைய மாறுதல்களை முன்னிட்டு பழைய மகிமை மறைந்துபோய்விடுவதில்லை. மேலாம் கருத்துக்களைத் தங்கள் மனதிலே வளர்க்க முயலுகின்றவர்கள் அப்புண்ணிய ஸ்தலங்களை நன்கு பயன்படுத்திக் கொள்ளலாம். புண்ணிய ஸ்தலங்களுக்கு எதிரிடையாயுள்ள இடங்களையும் உலகில் காணலாம். எங்குக் கீழான எண்ணங்கள் திரும்பத் திரும்ப எண்ணப்படுகின்றனவோ ஆங்குச் செல்லுகின்றவர்களுக்கு இயல்பாக மனது கீழ் நிலைக்குப் போய்விடுகிறது. கீழ்மையில் தாங்களும் சிறிது சிறிதாகக் கலந்துகொள்கின்றனர். ஆத்ம சாதகர்கள் அத்தகைய சூழ்நிலையில் வசிக்கலாகாது. புண்ணிய க்ஷேத்திரங்கள் என்பவை ஆத்ம சாதனத்தில்மேல் நிலைக்குப் போக முயலுகின்றவர்களுக்கு முற்றிலும் அனுகூலமான சூழ்நிலையாகின்றன. சாதகர்கள் எண்ணும் மேலான எண்ணங்களுக்கு ஸ்தலங்கள் என்னும் சூழ்நிலைகள் மேலும் உதவி புரிகின்றன. இந்தக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டே நம் நாட்டில் புண்ணிய க்ஷேத்திரங்கள் பல உண்டாகியிருக்கின்றன. பாடல் பெற்ற ஸ்தலங்களுக்கு என்றென்றும் மறையாத மகிமை இங்ஙனம் வந்தமைவதாயிற்று.

### ஆலயங்களுள் சிறந்தது

இப்பொழுது நம் நாட்டில் தென்படும் பெரிய கோயில்கள் எல்லாம் இடைக்காலத்தில் வந்தவைகள். வேதகாலத்தில் இவைகள் இருந்ததில்லை. இயற்கையின் சூழ்நிலைகளே வழிபாட்டுக்குரிய இடங்களாயின. வேள்வித்தீயின் மூலம் வழிபாடு பெரிதும் நிகழ்ந்து வந்தது. நதிக்கரைகளிலும் மரச் சோலைகளிலும் தெய்வ வணக்கம் நிகழ்ந்து வந்தது. அத்தகைய விருக்ஷங்கள் நாளடைவில் ஸ்தல விருக்ஷங்கள் ஆயின. பின்பு ஆகமத்தை அனுசரித்து ஆலயங்கள் கட்டுவிக்கப்பட்டன. மலையைக் குடைந்தும் ஆலயங்களை அமைத்து வைத்தார்கள். இப்படி அமைந்த ஆலயங்கள் மானுட சரீரம் என்னும் ஆலயத்தின் புறச் சின்னங்களாம். மானுட சரீரமே ஆலயங்களுள் மிகச் சிறந்தது என்று ஆன்றோர்களால் சர்வகாலமும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அண்டமெங்கும் குடிகொண்டிருக்கும் தெய்வம் சிறப்பாக மானுட சரீரத்தில் வீற்றிருக்கிறார். ஆனால் சரீரத்தினுள் தெய்வம் எழுந்தருளியிருக்கிறார் என்னும் கோட்பாட்டைப் பாமரர்கள் எளிதில் அறிந்துகொள்ள முடியாது. பாமரர்களுக்குப் பயன்படுதற்பொருட்டே ஆலயங்கள் அமைக்கப்பெற்றன. உலகிலும் உடலிலும் உள்ள தத்துவங்களை விளக்குதற்கு ஆலயங்கள் வந்துள்ளன. நமக்குத் தோன்றியவாறெல்லாம் ஆலயங்களைக் கட்டலாகாதென்பதும், ஆகமங்கள் விதித்துள்ளபடியே அவைகளை அமைக்கவேண்டும் என்பதும் கோட்பாடு. அதற்குத் தக்க காரணமும் ஒன்று உண்டு. தேசப்படம் ஒன்றை நமக்குத் தோன்றியவாறு வரையலாகாது. முறையாக அமைந்த படத்தின் நகலாக ஏனைய படங்களை அமைக்கலாம். முறையாக அமைந்த தேசப்படமோ இயல்பாக அமைந்துள்ள தேசத்தின் சின்ன

மாகும். மூல அமைப்பு ஆகிய தேசத்தின் வடிவைப் படம் முற்றும் ஒத்திருக்கின்றது. ஆகையினல் அது தேசப்படம் என்று அங்கீகரிக்கப்படுகின்றது.

ஆலயம் ஒன்று உடல் என்னும் ஆலயத்தின் புறச் சின்னமாகும். புறச்சின்னத்தை நமக்குத் தோன்றியவாறெல் லாம் அமைத்துவிடலாகாது. மூல அமைப்பு ஆகிய சரீரத்தி லுள்ள தத்துவங்களுக்கு அது ஒத்திருக்கவேண்டும். ஆகையி னுல்தான் ஆலயங்களை இன்னின்ன பாங்கில் கட்டவேண் டும் என்று ஆகமங்கள் ஆணையிடுகின்றன. அத்தகைய ஆலயங்களின் மூலம் நம் உடல் அமைப்பிலுள்ள மகிமை களையே நாம் மேலும் அறிந்துகொள்ளவேண்டும். தேசப்படத் தின் துணைகொண்டு தேசத்தை நன்கு அறிந்துகொள்வது போன்று கட்டுவிக்கப்பட்டுள்ள ஆலயத்தின் துணைகொண்டு நமக்கு இயல்பாக அமைந்துள்ள சரீரம் என்னும் ஆலயத் தின் தத்துவங்களை நாம் நன்கு அறிந்து கொள்ள முடியும். அந்த அறிவுக்கு ஏற்ப வாழ்க்கையைத் திருத்தியமைப்பதும் நம் கடமையாகும்.

## ராஜ கோபுரம்

பெரிய பிரகாரம் ஒன்று எடுத்து அதற்கு வாயில் ஒன்று வைக்கப்படுகிறது. அந்த வாயிலுக்கு உயர்ந்த கோபுரம் ஒன்று அமைகிறது. கோயிலின் உள்ளிருக்கும் கோபுரங்களையெல்லாம்விட இது உயர்ந்ததாக இருக்கும். நெடுந்தூரத்துக்கு அப்பால் இருந்தும் இதைக் காணலாம். ஸ்தூலலிங்கம் என்று ராஜகோபுரத்தை இயம்புவார்கள். கண்ணுக்கு அது தென்படும்பொழுது அதையே தெய்வ சொரூபமாக எண்ணி வணங்குவது முறை. எட்ட இருப்ப வர்களுக்கும் கடவுளைப்பற்றிய ஞாபகமூட்டுதற்கே அது அமைந்திருக்கிறது.

ராஜ கோபுரத்தின் அருகில் வந்து அதன் அமைப்பைக் கவனித்துப் பார்த்தால் சில அதிசயங்கள் தோன்றும். கணக்கற்ற வடிவங்கள் அதன்கண் அமைக்கப் பெற்றிருக்கின்றன. அவைகளுள் மானுட வடிவங்களை ஏராளமாகக் காணலாம். அவர்களுடைய விதவிதமான வாழ்க்கை முறைகளும் ஆங்கு வடிவங்களில் விளக்கப்பெற்றிருக்கும். தேவர்களும் வேண்டியவாறு அதில் இடம்பெறுகின்றனர். தேவர்களின் செயல்களும் ராஜகோபுரத்தில் விளக்கப் பெற்றிருக்கின்றன. விலங்குகளும் பறவைகளும் ஏனைய சிற்றுயிர்களும் அதில் இடம்பெறுகின்றன. பிரபஞ்ச அமைப்பில் இவையாவுக்கும் இடமுண்டு என்பது கோட்பாடு. சிற்றுயிர்கள், பேருயிர்கள், விலங்கு இனம், மக்கள் இனம், தேவர் கூட்டம் ஆகிய எல்லாரும் பிரபஞ்சத்தில் இருக்கின்றார்கள். அண்டத்தினுள் இன்னதுதான் இருக்கிறது இன்னது இல்லை என்று பாகுபடுத்த முடியாது. எல்லாப் படித்தரங்களிலும் உள்ள அனைத்தும் ஆங்கு இடம் பெற்றிருக்கின்றன. இக்கோட்பாட்டை ராஜகோபுரம் உருவகப்படுத்தி விளக்குகிறது.

ராஜ கோபுரத்தில் அசுசியான சில வடிவங்களையும் அமைத்திருப்பதைக் காணலாம். நாகரிகமான பண்புக்கு அவைகள் அறிகுறிகள் ஆகா. மனத்தகத்து மேலான கருத்துக்களை ஊட்டுதற்கும் அவைகள் உதவிபுரிய மாட்டா. கீழான எண்ணங்களைத் தோற்றுவிப்பதற்கே அவை துணைபுரியும். ஆலய வழிபாட்டுக்குப் பொருந்தாத இத்தகைய பதுமைகளை ஆலயத்தின்கண் அமைப்பானேன் என்கின்ற ஆக்ஷேபம் பலரிடமிருந்து வருவதுண்டு. அப்படி ஆக்ஷேபங்கள் வந்தாலும் அத்தகைய வடிவங்கள் சிலவற்றை அமைத்தே ஆகவேண்டுமென்று சிற்பிகள் சொல்லுவார்கள். ஆகம

விதி அப்படி இருக்கிறதென்றும் அவர்கள் இயம்புவார்கள். அதற்குத் தக்க காரணமும் உண்டு. இயற்கையின் நடை முறையின் புறச் சின்னமாகப் பெரியகோபுரம் அமைந்திருக் கிறதென்ருல் இயற்கையில் உள்ளவைகளையெல்லாம் அதன் மூலம் விளக்கியாக வேண்டும். நாகரிகம், அநாகரிகம் ஆகிய இரண்டும் இயற்கையில் இடம் பெற்றிருக்கின்றன. பாராட்டத்தக்க பெருவாழ்வும் பாராட்டத்தகாத சிற்றியல்பும் சிறு செயல்களும் இயற்கையில் இடம் பெற்றிருக்கின்றன. நம் முடைய உடல் அமைப்பையே ஆராய்ந்து பார்த்தால் இக் கூற்று நன்கு விளங்கும். நம் உடல் அமைப்பில் விளம்பரப் படுத்தக்கூடிய பாங்கிலுள்ள அவயவங்கள் உண்டு.மறைத்து வைக்கவேண்டிய பகுதிகளும் அதில் இடம் பெற்றிருக்கின் றன. அதைக்குறித்து நாம் வருந்துவதில்லை; வெட்கப்படு வதும் இல்லை. அதுதான் உடலமைப்பு என்று உள்ளதை உள்ளவாறு அங்கீகரித்துக் கொள்கின்ருேம். அதேவிதத் தில் இயற்கையில் நலம் கேடு ஆகிய எல்லாம் இருக்கின் றன என்பதைச் சுட்டிக் காட்டுதற்கே இந்தக் கோபுரம் அமைந்துள்ளது. வாழ்க்கையில் நம்முடைய குறிக்கோள் என்ன என்பதையும் இது விளக்குகிறது. ராஜ கோபுரத் தின் வாயில்கள் பொதுவாக ஒற்றைப்படை எண்ணில் அமைந்திருக்கும். மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதி ஞென்று இங்ஙனம் அதில் அமைந்துள்ள வாயில்கள் ஒன் றன்மேல் ஒன்ருகப் பெருகிக்கொண்டே போகும். அத் தகைய வாயில்கள் தத்துவத்துக்கு விளக்கமாக அமைந்துள் ளன. மூன்று வாயில்கள் உள்ளவிடத்து ஜாக்கிரத, சொப் பன, சுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளை அவை குறிக் கின்றன. ஐந்து வாயில்கள் உள்ளவிடத்து ஐம்பொறிகளை அவை குறிக்கின்றன. ஏழு வாயில்கள் உள்ளவிடத்து மனம்,

புத்தி என்னும் இன்னும் இரண்டு தத்துவங்கள் சேர்க்கப் பெறுகின்றன. ஒன்பது உள்ளவிடத்து சித்தம், அகங்காரம் என்னும் இன்னும் இரண்டு தத்துவங்கள் சேருகின்றன. இங்ஙனம் நம்முடைய அமைப்பில் உள்ள வெவ்வேறு தத்து வங்களுக்குக் கோபுர வாயில்கள் சின்னங்களாக அமைந் திருக்கின்றன.

இத்தனை வாயில்களுள் கோயிலினுள்ளே செல்லுதற் குத் தரை மட்டத்திலுள்ள ஒரு வாயில்தான் உதவுகிறது. ஏனையவைகள் ஆங்கு அமைக்கப்பெற்றிருந்தும் ஆலயத்தி னுள் செல்லுதற்குப் பயன்படுவதில்லை. இதன் மூலம் ஒரு கருத்து நமக்குப் புகட்டப்படுகிறது. புறக்கரணங்களும் அகக்கரணங்களும் பல நம்மிடத்து இருக்கின்றனவெனினும் கடவுள் நாட்டம் கொள்ளும்பொழுது மனது என்னும் ஒரு கரணம்தான் நமக்குப் பெரிதும் பயன்படுகின்றது. ஏனைய கரணங்களையெல்லாம் இருக்கிறபடி வைத்துவிட்டு மனது இறைவனை நாடி உள்முகமாகப் போக வேண்டுமென்பது கோட்பாடு. பஞ்சேந்திரியங்களைக் கொண்டும், மனம் புத்தி முதலியவைகளைக் கொண்டும் புற உலகை அறிகிற செயலை அப்படியே நிறுத்தி வைத்துவிட்டு மனதைத் துணையாகக் கொண்டு பரம்பொருளிடத்து உள்முகமாகப் பயணம் போக வேண்டும் என்னும் கோட்பாட்டை ராஜகோபுர வாயிலி னுள் பண்ணும் பிரவேசம் விளக்கிக் காட்டுகிறது.

**ரதம் என்னும் சின்னம்**

ஒவ்வோர் ஆலயத்தோடும் சம்பந்தப்பட்டதாக ரதோற் சவம் என்பது ஒன்று உண்டு. ஆலயம் என்னும் சின்னத் தின் மற்றொரு பகுதியாக அது அமைந்திருக்கிறது. ஓடுதல் என்னும் செயலில் ரதம் உடல் தத்துவத்தை நன்கு விளக்கு

கிறது. சரீரத்தை ரதம் என்றும், அதன் உள்ளிருக்கும் ஆத்மாவை ரதி அல்லது ஊர்ந்து செல்லுபவன் என்றும் கருதவேண்டுமென ஞான சாஸ்திரங்கள் புகட்டுகின்றன. சரீரத்திலுள்ள இயல்புகளையெல்லாம் ரதத்தில் அமைப்பதும் வழக்கமாய் இருந்து வருகிறது. ஒன்று நிலைத்திருக்கும் சின்னம்; மற்றது இயங்குகின்ற சின்னம். அவைகளின் மூலம் விளக்கப்பெறும் கருத்து ஒன்றேயாம்.

**மனம் மாறியமைதல்**

ராஜ கோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றதும் நம் காட்சிக்கு வருவது பலிபீடம். அதனருகில் சென்று வீழ்ந்து வணங்க வேண்டும். வீழ்ந்து வணங்குகின்ற பொழுது வழிபடுகின்ற மனிதன் தன் மனதில் எண்ணும் எண்ணமே மிக முக்கியமானது. வெறுமனே வீழ்ந்து வணங்குவதால் நலன் ஒன்றும் வந்துவிடாது. வீழ்ந்துவணங்கும் பொழுது தனது கீழான இயல்புகளெல்லாம் அந்த இடத்திலேயே பலி கொடுக்கப்பட்டன. இனி அவை தலையெடுப்பதற்கு அவகாசம் இல்லை என்று ஆழ்ந்து எண்ணுதல் வேண்டும். மனிதனிடத்துள்ள கீழ்மையெல்லாம் ஆங்குக் கீழே விழுந்து விட்டன. மேன்மையும் மேலான எண்ணமுமே எஞ்சியிருக்கின்றன என்னும் எண்ணத்துடன் மனிதன் எழுந்திருக்க வேண்டும். விலங்குத் தன்மை வாய்ந்த மனிதன் கீழே வீழ்ந்து மாய்ந்துபோய் விட்டான்; மனிதத்தன்மை வாய்ந்த மனிதன் எழுந்திருக்கின்றான் என்ற எண்ணம் வலிவு பெறுகிறது. அந்த எண்ணத்தின் வலிவு அவன் புதியதொரு பிறவி எடுத்துக் கொண்டதற்குச் சமானமாகிறது. புதியதாக வருவித்துக் கொண்டுள்ள மேலான மனப்பான்மையை இனி தெய்வத்துக்குரியதாக மாற்றி விடவேண்டும். அதன் பொருட்டுச் சாதகன் கோயிலினுள் வலம் வருகின்றான்.

அவன் வலம் வரவேண்டிய முறையைப் பலிபீடத்துக்கு அடுத்தபடியிலிருக்கும் துவஜ ஸ்தம்பம் அல்லது கொடிக் கம்பம் விளக்குகிறது. கொடி உள் முகமாகத் திரும்பிக் கொண்டிருக்கிறது. கோயிலைச் சுற்றி நடக்கும் பொழுது உள்ளிருக்கும் தெய்வம் தனது வலக்கைப் பக்கம் இருக்கும் படி பக்தன் பார்த்துக் கொள்கிறான். அதுவே வலம் வருதல் என்பதன் பொருளாம். வலம் வருதல் பிராணயாமத்தின் சின்னமாகும். ஒழுங்குப்பட்ட மேலாம் மனது பிராணயாமத் துக்குத் தகுதியுடையதாகிறது. மனத்தகத்து உண்டாகும் மாறுதலுக்கு ஏற்ப சுவாசிக்கின்ற வாயுவில் வேறுபாடு உண்டாகிறது. கீழான மனப்பான்மை உடையவர்க்கு சுவாசத்தின் போக்குவரவில் தடுமாற்றம் உண்டு. மேலான மனப்பான்மை உடையவர்க்கு சுவாசத்தின் போக்குவரத்து அல்லது பிராணயாமம் முறையாக நிகழ்கின்றது. தங்கு தடையின்றி அமைதியாக வலம் வருவது போன்று பிராண யாமமும் ஒழுங்காக நிகழ்ந்துவிடுகிறது. சூக்ஷ்மமாக உடலின் கண் நிகழும் நிகழ்ச்சி பிராணயாமம். வலம் வருதல் என்னும் சரீரத்தின் ஸ்தூலமான செயல் அதன் புறச் சின்னமா கிறது.

துவஜ ஸ்தம்பத்துக்கு அடுத்தபடியில் இருப்பது தெய் வத்துக்குரிய வாகனம். சிவபெருமானுக்கு நந்தி வாகனம். மகாவிஷ்ணுவுக்கு கருடன் வாகனம். அம்பிகைக்கு சிங்கம் வாகனம். வாகனம் எதுவாயினும் அது ஜீவாத்மனைக் குறிக் கிறது. மூலப்பொருளாகிய கடவுளைப் பார்த்தவண்ணமாய் வாகனம் அமைந்திருக்கிறது. கடவுளைச் சென்றடைய வேண்டியது ஜீவாத்மாவின் குறிக்கோள். கடவுளைச் சென் றடைதற்குச் சர்வகாலமும் மனது கடவுள் நாட்டத்திலேயே இருக்கவேண்டும் என்னும் கோட்பாட்டை வாகனம் விளக்

கிக் கொண்டிருக்கிறது. சுற்றி வருகின்ற பக்தன் ஆலயத்தின் உள்ளிருக்கும் தெய்வத்தையும் அதைப் பார்த்தவண்ணமாயிருக்கும் வாகனத்தையும் சேர்த்து வைத்து வலம் வருகிறான். குறுக்கே நுழைவது முறையன்று. வழிபடுகின்ற அனைவர்க்கும் வழிபாட்டுக்கு ஒத்தாசை செய்ய வேண்டும். இடைஞ்சல் செய்யலாகாது என்பது அதன் கருத்து. பிறர்க்கு இடைஞ்சல் செய்கின்ற அளவு தானே கடவுள் வழிபாட்டுக்குப் புறம்பாய் விடுகிறான். பிறர் வழிபாட்டுக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து வைக்குமளவு ஒருவன் தானே வழிபாட்டில் முன்னேற்றமடைகிறான். பிறரைப் புறக்கணித்து யாரும் முன்னேற்றமடைய முடியாது. பிறர்க்குப் பணிவிடை செய்து யாரும் முன்னேற்றமடையலாம். இக்கோட்பாடு ஆலயவழிபாட்டில் அடங்கியிருக்கிறது.

**உட்புகுதல்**

கோயிலின் கர்ப்பக்கிருஹத்துக்குச் செல்லும்பொழுது அது இருள் சூழ்ந்திருக்கிறது. காற்றுக்கோ சூரிய வெளிச்சத்துக்கோ ஆங்கு இடமில்லை. ஜன்னல் முதலியன வைத்து ஆலயத்தை ஏன் அமைப்பதில்லை என்று குறை கூறுபவர் உளர். ஆகம விதி அதற்கெல்லாம் இடம் தருவதில்லை என்ற விடை வருகிறது. நம் உடலமைப்பின் புறச் சின்னமாக கர்ப்பக்கிருஹம் அமைந்திருக்கிறது. கருவி கரணங்களை ஒடுக்கி மனதை உள்முகமாகத் திருப்பினால் என்ன அனுபவம் உண்டாகிறதோ அதற்குச் சின்னமாக ஆலயத்தின் கர்ப்பக்கிருஹம் அமைந்திருக்கிறது. உடலுக்குள்ளே நம் நெஞ்சத்தினுள் ஒரே கார் இருளைத்தான் கண்மூடி இருக்கும்பொழுது நாம் காண்கிறோம். புற உலகிலிருந்து ஆங்கு வெளிச்சம் ஒன்றும் வருவதில்லை கர்ப்பக்கிருஹத்தின் அருகில் சென்று தரிசனத்துக்காக பக்தன் காத்திருக்கிறான்.

திரைமூடப்பட்டிருக்கிறது. சிறிது நேரத்துக்குள் மணி ஓசை கேட்கிறது. இனி விரைவில் தரிசனம் கிட்டும் என்று பக்தன் ஆர்வத்துடன் அதை எதிர்பார்த்து நிற்கிருன். திரை நீங்குகிறது. உள்ளே கற்பூர ஆராதனை காட்டப்படுகிறது. அதன் வெளிச்சத்தில் தெய்வத்தின் விக்ரஹத்தைப் பக்தன் தரிசிக்கிருன். விக்கிரஹம் என்னும் எண்ணம் அவன் மனதில் உதிப்பதில்லை; தெய்வத்தையே தரிசிப்பதாக உணருகிருன்.

மனத்தகத்து நிகழவேண்டிய ஞானக்காட்சியின் புறத்தோற்றமாகும் இது. மனதினுள் சிந்தையைச் செலுத்தும் ஆத்மசாதகன் கார் இருளையே தன்னுள் காண்கின்ருன். ஆயினும் மனதை உள்முகத்தில் வைத்திருக்கப்பழகவேண்டும். அப்பழக்கம் உறுதிபெற நெடுங்காலம் பிடிக்கும். மனதை உள்ளத்தினுள் ஒடுக்கிவைத்துப் பழகுபவனுக்கு ஓர் அனுபவம் கிட்டும். தனது உள்ளத்தினுள்ளே ஒருவித இனிய ஓசையை அவன் கேட்பான்; புகை போன்றும், மின்மினிப் பூச்சிகளின் நடமாட்டம் போன்றும் சில காட்சிகளைத் தன்னுள் காண்பான். ஒலி, ஒளி ஆகிய இரண்டும் மனதினுள் உதிப்பது சாதகன் சாதனத்தில் முன்னேறி வருவதின் அறிகுறியாகும். இறுதியில் மனத்தகத்திருக்கும் அக்ஞானம் என்னும் திரை நீங்குகிறது. ஞான ஒளியின் தரிசனம் கிட்டுகிறது. அந்த ஞான ஒளியும் ஆத்ம சொருபமும் ஒன்றேயாம். அங்ஙனம் மனத்தகத்து உண்டாகின்ற ஆத்மதரிசனத்துக்குப் புறச்சின்னமாக ஆலய தரிசனம் அமைந்திருக்கின்றது. மாந்தருக்குத் தோன்றியபடி அதை மாற்றியமைப்பதற்கு ஆகமசாஸ்திரம் இடம் தருவதில்லை. வேண்டுமானல் நம் விருப்பப்படி மாற்றியமைத்துக்கொள்ளலாம். ஆனல் அது ஆத்மதரிசனத்தின் புறச்சின்னமாகாது.

**பூஜாவிதி**

ஆலயத்தினுள் எழுந்தருளியிருக்கும் தெய்வத்துக்குப் பலவிதமான உபசாரங்களுடன் ஆராதனை நிகழ்கின்றது. இத்தகைய ஆராதனைகளெல்லாம் ஆத்ம சாதகன் அடைந்து வரும் மனபரிபாகத்தின் புறச்செயல்களாம். ஆராதனை செய்கின்றவர்கள் சதாசாரமே வடிவெடுத்திருக்கவேண்டும். நல்லொழுக்கம் அவர்களிடம் ஓங்குமளவு வழிபாடு மேம்பாடு உடையதாகிறது. நல்லொழுக்கம் இல்லாதவனுக்கு ஆத்ம சாதனத்தில் முன்னேற்றம் ஒருபொழுதும் கிடையாது. தெய்வத்தின் அபிஷேகத்துக்காகத் தூய நன்னீர் கொண்டு வரப்படுகிறது. அதைக்கொண்டு இறைவன் நீராட்டப்படு கிறார். மனத்தகத்து அன்பை வளர்ப்பதற்கு அறிகுறியாகப் புறத்தே ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் தெய்வத்துக்குத் திருமுழுக்கு செய்விக்கப்படுகிறது. நீராடிய பிறகு நாம் ஓரளவு உள்ளத்தெளிவை எய்துகிறோம். அன்பைப் பெருக்கு மளவு நமக்கு உள்ளத்தெளிவு உண்டாகிறது என்பதை நாம் உணரமுடியும். பால், தயிர், நெய், பஞ்சாமிர்தம் முதலிய வைகளைச் சொரிந்தும் அபிஷேகம் செய்வது வழக்கம். இவை யாவும் உடலை வளர்ப்பதற்கு நல்லுணவு ஆகின்றன. நல்லுணவு படைத்து உடலை வளர்ப்பது போன்று நல்லெண் ணங்களை எண்ணி உள்ளத்தை வளர்க்கவேண்டும் என்பது கோட்பாடு. எண்ணத்துக்கு ஏற்ப உள்ளத்தில் உயர்வோ, தாழ்வோ உண்டாகிறது. நல்லெண்ணத்தை வளர்ப்பதே ஆலய வழிபாடு ஆகிறது. மூர்த்தியை முழுக்காட்டிய பிறகு அவரை அலங்கரிக்கின்றோம். ஆடை, ஆபரணம் முதலியன சாத்தி அலங்கரிப்பது வழக்கம். நம் உடல் வாழ்க்கையை எங்ஙனம் ஓம்புகின்றோமோ அதே கோட்பாட்டைத் தெய் வத்தின்கண் காண அன்பர்கள் முயலுகின்றனர். தெய்வத்

துககு உணவும் உடையும் தேவையானவைகள் அல்ல. இவை யாவையும் கடந்த நிலையில் இருப்பது பரம்பொருள். ஆனால் இத்தகையவைகளை ஏற்று அங்கீகரித்து மகிழ்வுற்றிருக்கும் மூர்த்தியாக சாதகன் தெய்வத்தைப்பற்றிக் கருதுகிறான். அதன்மூலம் அவனுடைய மனது விகசிப்பு அடைவதே ஆலய வழிபாட்டின் பயன் ஆகும்.

மூர்த்தியை அலங்கரித்தான பிறகு அவருக்கு இனிய நல்லுணவு நைவேத்தியமாகப் படைக்கப்படுகிறது. இறைவன் அதை அங்கீகரிக்கின்றார் என்றே அன்பன் உணருகிறான். ஆத்ம சாதனத்தில் முன்னேற்றமடைந்தவர்கள் உணவைத் தெய்வத்துக்கு நைவேத்தியமாகப் படைப்பதில் பொருள் மிக உண்டு என்று உறுதி கூறுகின்றனர். மிக அண்மையில் தோன்றியவரும் ஆலய வழிபாடு செய்துவந்தவருமான ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் இதற்கு அத்தாட்சி கூறுகிறார். அன்புடன் தெய்வத்துக்குப் படைக்கப்படும் நைவேத்தியத்தை மூர்த்தியிடமிருந்து அருட்ஜோதி ஒன்று கிளம்பி வந்து ஸ்பர்சிக்கிறது. அத்தகைய அருள் ஸ்பர்சம் ஆன பின்பே அது பிரசாதமாகின்றது. ஈசுவரப் பிரசாதமாக அன்பன் அதை ஏற்றுக்கொள்கின்றபொழுது அவனுடைய அந்தக்கரண சுத்திக்கு அது பேர் உதவி புரிகின்றது.

நைவேத்தியம் படைத்தான பிறகு தெய்வத்துக்கு ஸ்தோத்திரம், அர்ச்சனை முதலியன சமர்ப்பிக்கப்படுகின்றன. நம் வீட்டுக்கு வரும் நண்பர் ஒருவருக்கு நல்லுணவு படைத்தான பிறகு நாம் அவருடன் உரையாடுகிறோம். உரையாடி அவரை மகிழ்விக்கிறோம். அதே பாங்கில் ஆலயத்தில் கடவுள் வழிபாடு நிகழ்கிறது. தெய்வத்துக்கு உணவு வகைகளை நைவேத்தியமாகப் படைத்தான பிறகு அவரை நாம் புகழ்ந்து பாடுகின்றோம், போற்றுகின்றோம், அர்ச்சிக்

கின்றோம், ஆராதிக்கின்றோம். அதன் மூலம் நமக்கு மனப் பூரிப்பு ஏற்படுகிறது. ஆராதனையின்மூலம் ஆராதிக்கப் பெறும் தெய்வசொருபமாகப் படிப்படியாக நாம் மாறியமை கின்றோம். நாம் மேலோராக மாறியமைவதே பூஜையின் விளைவு. மேலோராக நாம் மாறியமையவில்லை என்றால் நாம் செய்தது சரியான பூஜையல்ல என்னும் முடிவுக்கு வந்தாகவேண்டும்.

**நைவேத்தியம்**

கோயிலுக்குச் செல்லுகின்றவர்கள் வெறுங்கையுடன் செல்லலாகாது என்பது ஐதிகம். இக்கோட்பாடு இன்றும் பரந்த பாங்கில் வழக்கத்தில் இருந்து வருகிறது. பெரியோர் களையும், குழந்தைகளையும், கடவுளையும் தரிசிக்கச் செல்லு கின்றவர்கள் வெறுங்கையுடன் போகலாகாது. நல்ல உண வுப்பொருள் ஏதேனும் ஒன்றை எடுத்துச் செல்லவேண்டும். உணவுப் பொருளின் மூலமாகவே குழந்தைகளோடு நாம் ஒற்றுமை பாராட்ட முடியும். அக்கோட்பாடு பிறகு பெரி யோர்களுடைய இணக்கத்துக்கும் முதற்படியாகின்றது. கடவுள் வழிபாட்டிலும் அதே கருத்து அடங்கியிருக்கிறது. குழந்தைகளுக்கும் பெரியோர்களுக்கும் எடுத்துச் செல்லும் பொருள்கள் அவர்களுக்கு விருப்பமானவைகளாக இருக்க வேண்டும். கடவுளுக்கு எடுத்துச் செல்லும் பொருள் தனக்கு மிக விருப்பமானதாக இருக்கவேண்டும். ஆலய வழிபாட் டுக்கு அது உகந்ததாகவும் இருக்கவேண்டும். தனக்கு விருப்பமான பொருளைக் கடவுளுக்குப் படைப்பதில் நலன் ஒன்று ஆத்ம சாதகனுக்கு விளைகின்றது. கடவுளுக்குப் படையாது தான் அதை உண்பதில்லை என்னும் கொள்கை யிலிருந்து உணவுப்பொருள் மீது வைத்த பற்றுதல் குறை கிறது. கடவுளுக்குப் படைப்பதன் மூலம் அது தூய உண

வாக மாற்றப்பெறுகிறது. அது ஈசுவரப் பிரசாதமான பிறகு மற்றவர்களுக்கெல்லாம் வழங்கியான பின்பே எஞ்சியிருக்கும் ஒரு சிறு பகுதியைத் தான் ஏற்றுக்கொள்ள வேண்டும். தெய்வத்தின் பெயரால் மன்னுயிர்களையெல்லாம் தன்னுயிர் போன்று கருதும் மனப்பான்மையும் இதினின்று உண்டாகிறது. எல்லா உயிர்களும் கடவுளுக்குச் சொந்தம். எல்லா உயிர்களையும் ஓம்புதல் மூலம் கடவுள் நன்கு வழுத்தப்படுகின்றூர். உணவு இல்லாது கடவுள் வழிபாடு நிகழலாகாது என்பதன் கருத்து இதுவேயாம். மாந்தர் சேகரிக்கும் நல்ல உணவுப்பொருள்களில் பெரும்பகுதி ஆலயத்துக்கு வந்துவிடுவது முறை. கடவுளின் பெயரால் பிறகு அது பலருக்குப் பகுத்துக் கொடுக்கப்படுகிறது. கடவுளின் பெயரால் கொடுக்கப்படுகின்றபொழுது கொடுக்கின்றவனுக்குத் தான் கொடையாளி என்கின்ற அகங்காரம் உதிக்காது. ஈசுவரப் பிரசாதத்தை ஏற்கின்றவர்களுக்குப் பிறரிடமிருந்து பொருளை ஏற்பது இகழ்ச்சி என்ற மனப்பான்மையும் வராது. கொடுப்பவரும் ஏற்பவரும் கடவுளுக்குரியவர் ஆய்விடுகின்றனர். மனப்பான்மை மேன்மையடைவதற்குப் பொருளைக் கடவுளுக்கு நைவேத்தியமாகப் படைப்பதே சிறந்த உபாயமாகும். பலர் கருதுகின்றபடி இதில் பொருள் நஷ்டமில்லை. பொது மக்களுக்குப் பொருள் நன்கு விநியோகிக்கப்படுகிறது.

### கிரியைகள்

நமது ஆலயங்களில் கையாளப்படும் கிரியைகள் தத்துவத்துக்கு விளக்கமாக அமைந்துள்ளன. தீப ஆராதனையை அதற்குச் சான்ருக எடுத்துக்கொள்வோம். அக்ஞானம் என்னும் திரை நீங்கியவுடன் ஜோதிப் பிழம்பாகப் பல விளக்குகள் கொண்ட அடுக்குத் தீபம் ஒன்று சுற்றப்படுகிறது. அக்

ஞான இருளினின்று ஞான பூமிக்குள் பிரவேசிக்கின்ற ஆத்மா ஒரே ஒளிப்பிழம்பைக் காண்கின்ருன். அந்த ஒளிப் பிழம்பில் அவன் ஒன்றித்துவிடுவதற்குச் சிறிது நேரமாகின் றது. பரம்பொருள் என்றைக்கும் அணையாத ஆத்மப் பிர காசமாய் இருக்கிருர். அடுக்குத் தீபத்தில் கணக்கற்ற விளக்குகள் இருக்கின்றன. அதன் பிறகு காட்டப்படும் தீபங்கள் எண்ணிக்கையில் குறைந்து வருகின்றன. கடைசி யில் ஒரு தீபத்தில் வந்து ஆராதனை முற்றுப்பெறுகிறது. இதன் அடிப்படைத் தத்துவம் ஏகமாய் உள்ள பரமாத்மனே எண்ணிறந்த ஜீவாத்மாக்களாகப் பிரகாசித்துக் கொண்டிருக் கிருர் என்பதாம்.

கடவுள் ஆராதனையில் பஞ்சேந்திரியங்களும் இடம் பெறுகின்றன. பஞ்சேந்திரியங்கள் பொதுவாகப் பிரபஞ் சத்தை விஷயமாக்குதற்கென்று அமைந்தவைகள். அவ் ஐந்து பொறிகளையும் பரமனை நுகர்தற்கென்று பயன்படுத் துங்கால் அது நல்ல ஆத்ம சாதனமாகிறது. தேவ ஆரா தனையில் கண்கொண்டு காண்பது ஜோதிசொருபமான பரம் பொருள். காதால் கேட்பது அவனிடத்திருந்து உண்டாகும் நாதம். அதற்குச் சின்னமாக மணி ஓசையும், சங்கு வாத்திய மும் அமைகின்றன. வேதமோதுதலும் ஆங்கு நிகழ்கிறது. மூக்கால் முகர்வது ஆராதனையோடு சம்பந்தப்பட்ட நறு மணம் கமழும் தூபமாகும். ஸ்பரிசித்து இன்புறுதற்கு பரம னுக்குச் சாத்திய பூமாலை தரப்படுகிறது. நாவால் சுவைத்து வணங்குதற்கு அவனுடைய பிரசாதம் வழங்கப்படுகிறது. இங்ஙனம் பஞ்சேந்திரியங்களைக் கொண்டும் பரம்பொருளே நுகரப்படுகிருர். இந்நிகழ்ச்சியில் ஆலய வழிபாடு உச்ச ஸ்தானம் பெற்றுவிடுகின்றது. உலகை அறிதற்கென்று அமைந்த பொறிகளைப் பரமனை அறிதற்கென்று பயன்படுத்து மிடத்து அது நல்ல பழக்கமாகிறது.

கோயிலைப்பற்றிய விரிவான தத்துவம் சிதம்பரம் போன்ற ஆலயத்தில் அமைந்திருக்கிறது. உபாசனைக்குரிய மூர்த்தியாகிய நடராஜா நான்கு ஸ்தம்பங்களை உடைய ஒரு கொலுமண்டபத்தில் எழுந்தருளியுள்ளார். அந்த நான்கு ஸ்தம்பங்கள் நான்கு வேதங்களின் சின்னமாகும். அதற்குச் சற்று முன்பு ஆறு தூண்களுடைய மண்டபம் உள்ளது. ஆறு சாஸ்திரங்களுக்கு அவைகள் சின்னமாய் அமைந்துள் ளன. அதற்குச் சற்று வெளியே பதினெட்டு தூண்களுடைய மண்டபம் இருக்கிறது. பதினெட்டு புராணங்களுக்கு அவை கள் அறிகுறியாய் அமைந்துள்ளன. நடராஜாவின் அருகில் செல்லுதற்கு ஐந்து படிகளில் மேலே ஏறியாகவேண்டும். சிவ னுடைய திருநாமமாகிய பஞ்சாக்ஷரம் அல்லது ஐந்தெழுத் தின் சின்னமாக இந்த ஐந்து படிகள் அமைந்துள்ளன. நட ராஜாவுக்கு இடப் புறம் சிவகாமி அம்மையார் எழுந்தருளி யுள்ளார். வலப் புறம் சிதம்பர ரகசியம் அமைந்திருக்கிறது. இதிலும் மேலான கோட்பாடு புதைந்திருக்கிறது. பராசக்தி யின் அருளால் சகுண பிரம்மமாகிய நடராஜமூர்த்தியின் தரிசனம் கிட்டுகிறது. சகுண பிரம்மம் பிறகு நிர்க்குண பிரம்மத்துக்கு வழிகாட்டுகிறது. அது மனம் மொழியைக் கடந்திருப்பதால் ரகசியம் என்று இயம்பப் பெறுகிறது. நிர்க்குண பிரம்மத்தை அடைந்த ஜீவன் திரும்பவும் ஜீவ போதத்துக்கு வருவானாகில் சகுண பிரம்மத்துக்கு வந்து கீழிறங்கி வருகிறான். சிதம்பரத்தில் நிகழும் தீபாராதனை இக்கோட்பாட்டை விளக்குகிறது.

தரிசனத்துக்காகக் கோயிலுக்குள் செல்லும் பக்தன் ஒருவன் கீழே வீழ்ந்து நமஸ்கரிக்க விரும்புவானாகில் அதன் பொருட்டு அவன் ஒரு வாகனத்துக்குப் பின்புறம் வந்துவிட வேண்டும். எல்லா வாகனங்களையும் தாண்டி உள்ளே போன

பிறகு வீழ்ந்து நமஸ்கரிப்பதில்லை. ஜீவபோதத்தைக் கடந்தவன் பரம்பொருளில் ஒன்ருய்விடுகின்ருன் என்பது அதன் அடிப்படைக் கருத்து.

**மனப்பான்மை**

மனம், மொழி, மெய் ஆகிய திரிகரண சுத்தியுடன் ஆலய வழிபாட்டுக்குப் போகவேண்டும் என்பது கோட்பாடு. ஆலயத்துக்குள் நுழையும் பொழுதே உலக வியவகாரங்களை ஒதுக்கி வைத்துவிடவேண்டும். கடவுளைப் பற்றிய சிந்தனையே சித்தமிசை குடிகொண்டிருப்பது அவசியமாகிறது. பதைபதைப்புக்கோ, வேகம் நிறைந்த நடமாட்டத்துக்கோ ஆங்கு இடமில்லை. அமைதியும் சாந்தமும் வடிவெடுத்தவனாக வழிபடுபவன் ஆய்விடுகிருன். கோயிலுக்குள் கூச்சலிட்டுப் பேசுகின்றவர்கள் வழிபடுபவர் ஆகார். கோயிலின் புனிதத்தையும் ஒருவிதத்தில் அவர்கள் பாழ்படுத்திவிடுகின்றனர். ஒருவரோடு ஒருவர் பேசாதிருந்து வழிபாடு செய்வது சாலச் சிறந்தது. வழிபாட்டை முடித்தான பிறகு ஓர் இடத்தில் அமைதியாக அமர்ந்திருந்து தியானம் பண்ணுவது முற்றிலும் அவசியம். பல பெரியோர்கள் ஆழ்ந்து எண்ணிய உயர்ந்த எண்ணங்கள் நிறையப்பெற்ற இடம் ஆலயம். ஆங்கு வழிபடுபவன் அமைதியுற்று அமர்ந்திருப்பானுகில் அந்த உயர்ந்த எண்ணங்கள் அவனது மனத்தகத்து பிரதிபலிக்கும். அதுவே ஆலய வழிபாட்டினின்று வழிபடுபவன் பெறுகின்ற பெரிய பேறு ஆகும். இத்தகைய மனப்பான்மையுடன் எத்தனை பேர் ஆலயத்துக்குள் வந்து வணங்குகின்ருர்களோ அதற்கேற்ப ஆலயத்தினுள் ஏற்கனவே அமைந்துள்ள அருள் பன்மடங்கு பெரியதாகின்றது. அருளைத் தானே அடைவதன் மூலம் ஆலயத்தின்கண் அன்பன் அருளைப் பெருக்குகின்ருன். ஆலய வழிபாட்டின் ஒப்பற்ற பயன் இதுவேயாம்.

---

# 9. பூஜா விதி

**அந்தஸ்தத்துக்கு ஏற்ற இணக்கம்**

ஒருவரோடு ஒருவர் உறவாடுதலில் நெறிமுறை ஒன்று உண்டு. கீழ்மக்களோடு பழகுதல் கஷ்டமானதன்று. அவர்களுடைய இணக்கத்தை எளிதில் பெற்றுவிடலாம். அத்தகைய நட்பு நிலைத்திருப்பினும் அதில் பெருமை ஒன்றுமில்லை. ஓயாத துன்பத்துக்கும் பழிக்குமே அது இடந் தரும். நன்மைக்கும் அதற்கும் வெகுதூரம். மேலோர் கூட்டுறவோ எளிதில் கிடைப்பதன்று. அதற்காகப் பெருமுயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். முயற்சிக்குமேல் தகுதி வேண்டப்படுகிறது. ஏழை ஒருவன் செல்வந்தனோடு சம அந்தஸ்துப் பெற்றுச் சேர்ந்திருக்க முடியாது. முதலில் தானே செல்வந்தன் ஆகவேண்டும்; அல்லது செல்வந்தன் போன்று தோற்றத்தளவிலாவது காட்டிக்கொள்ளுதல் அவசியம். அரசன் ஒருவனோடு உறவாடுவது அதிலும் கடினம். வேந்தனுடைய நட்பை நாடுபவன் எத்தகையவன் என்று முதலில் நன்கு ஆராயப்படுகிறான். அரசனோடு வீற்றிருப்பதற்கு ஏற்ற யோக்கியதை உடையவனே அதைப் பெறுகின்றான். குணசீலர்களது கேண்மை அதனினும் அரிது. வெறும் பகட்டும் போலிப் பெருமையும் ஆங்குப் பலிக்கா. இரண்டு நீர்நிலைகள் இணைக்கப்படும்போது இரண்டிலும் நீர் ஒரேமட்டத்துக்கு வந்துவிடுகிறது. அவ்வாறே அவரவர் மனதின் பரிபாகத்துக்கு ஏற்றவாறு நட்பு உண்டாகிறது,

மக்களுள் மேலோர் கேண்மையைப் பெறுதலே அவ்வளவு சிரம சாத்தியமாயிருக்கும்போது, மேன்மையனைத்துக்கும் உறைவிடமாகிய தெய்வத்தின் துணையைப் பெறு

தற்கு இன்னும் எத்துணைப் பாடுபடவேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும். देवो भूत्वा देवं यजेत् தேவோ பூத்வா தேவம் யஜேத்- என்ற பொய்யாமொழியொன்று உண்டு. தேவனுயிருந்து தேவனை வணங்கு என்பது அதன் பொருள். ஆகத் தெய்வத்தன்மை எய்துவதே தெய்வத்தை வணங்குதற்கு உபாயமாகின்றது. போற்றும் முறையைத் தெரிந்துகொள்ளும் ஒருவன் எதைப் போற்றுகின்றானோ அதுவாய் அவனே ஆய்விடுகின்றான். முறைப்படி கல்வியைப் போற்றுபவன் தானே கல்விக்கு இருப்பிடமாகிறான். பலத்தை நாடுபவன் தானே பலவான் ஆகின்றான். முயற்சியாலும், முறைப்படி தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்வதாலும் எதைவேண்டுமானாலும் மனிதன் பெறக்கூடும். தெய்வத்தை விதிப்படி வணங்குபவன் தானே தெய்வத்தன்மை எய்துகிறான். மனிதனுக்கு உரிமையல்லாத ஒன்றை அவன் பெறமுடியாது. தன்னிடத்து இல்லாத இயல்பை வருவித்துக்கொள்வதும் சாத்தியமன்று. விரும்பியவாறும் விருப்பத்தின்படி முயலுதற்கு ஏற்றவாறும் சிறுமை அல்லது பெருமை அவனை வந்தடைகிறது. சிறுமையை அடைவது எளிது. பெருமைக்கோ தக்க விதிப்படி மிகப் பாடுபட வேண்டும்.

தெய்வத்தன்மை மனிதனுக்கு அன்னியமானதன்று. மேன்மைகளனைத்தும் அவனிடத்துப் பிரியாது அமைந்துள. மறைந்துகிடக்கும் அவைகளை மேலோங்கச் செய்தலே வாழ்க்கையின் சீரிய நோக்கமாகும். உயர் தன்மைகள் ஓங்க ஓங்க மனிதன் இறைவனுக்கு உகந்தவன் ஆகின்றான். கடவுளோடு உறவாடுதற்கு உற்ற உபாயமும் அதுவே. தன்னைத் தான் பக்குவப்படுத்திக்கொள்ளுதலின் மூலம் தெய்வத்தின் சன்னிதி சார மனிதன் தகுந்தவனாகிறான்.

**ஆலயங்களுள் சிறந்தது**

உயிர்க்கு இருப்பிடம் உடல். உடலைக் கொண்டு அல்லாது உயிரை அறிய முடியாது. இருப்பிடத்தின் மூலம் உயிரின் உயர்வு வெளியாகின்றது. உயிர் அனைத்துக்கும் பொதுவாகவும் ஆதாரமாகவும் இருப்பது எதுவோ அது கடவுள். ஆதலால் அது உயிர்க்கு உயிர் என்று சொல்லப் படுகிறது. பேரறிவுக்கும், அன்புக்கும், ஆற்றலுக்கும் உறைவிடம் அதுவே. நீக்கமற அது எங்கும் நிறைந்துள்ளது. அதன் பூரண காட்சி வரும்போது வாழ்க்கையின் மர்மமெல்லாம் நமக்கு விளங்கிவிடும். அக்காட்சியைப் பெறுவதற்கும் வழி ஒன்று உண்டு.

சிற்றுடலின் மூலம் நமது சிற்றுயிர் ஒளிர்கின்றது. பேருடலாகிய இயற்கை முழுதின் மூலம் இறைவன் பிரகாசிக்கின்ருன். இன்னும் இயற்கைக்கு அப்பாலும் அவன் இருக்கின்ருன். இயற்கையின் வாயிலாக அவனது ஒரு சிறு அம்சம் மட்டும் மிளிர்கின்றது. கடவுளை அறிதற்கு இயற்கை அல்லது பிரகிருதியே உற்ற உபாயமாகிறது. எல்லையில் அடங்காது பிரம்மாண்டமாயிருக்கும் பிரகிருதியின் அணுப் போன்ற ஒரு சிறு பாகம் நம் தேகம். பிரமாண்டத்தின் பெருமை முழுதும் சிறு பிண்டமாகிய நம் சரீரத்தில் இருக்கிறது. கைப்பிடி களிமண்ணின் தத்துவத்தைத் தெரிந்து கொண்டால் களிமண் அனைத்தின் உண்மை வெளியாவது போன்று, நம் சரீரத்தையும் அதனுள் ஒளிர்பவனையும் உள்ளபடி தெரிந்து கொண்டால் அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகனையும் தெரிந்துகொள்ள இயலும்.

ஆலயத்தில் இறைவனைத் தொழுகின்ருேம். அத்தகைய ஆலயங்கள் அனைத்திலும் சாலச் சிறந்தது நம் சரீரம். உல

கெங்கும் குடிகொண்டுள்ள இறைவன் நம் உள்ளத்தில் விசேஷமாக இலங்குகின்றான். 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்றார் பெரியார் ஒருவர். யாரோ இரண்டொருவர் மேலெழுந்த வாரியாகச் சொல்லியதன்று இவ்வுண்மை. எல்லாப் பெரியார்களும் மானுட சரீரமே தேவாலயங்களுள் சிறந்ததென்று வற்புறுத்தியிருக்கின்றனர். 'நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம், அன்பே மஞ்சன நீர் பூசைகொள்ள வாராய் பராபரமே' என்றும், 'காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக...' என்றும் இன்னும் அநேக விதங்களிலும் இது கூறப்பட்டுள்ளது.

பெரியார் ஒருவரை வரவேற்பதற்கு வீட்டை அலங்கரித்து வைக்கிறோம்; நம்மை நாமே அலங்கரித்துக்கொள்கிறோம்; இன்னும் எத்தனையோ ஆடம்பரங்களைச் செய்கின்றோம். தூயதும், பெரியதற்கெல்லாம் பெரியதுமாகிய மெய்ப்பொருளை உள்ளத்தின்கண் எழுந்தருளப்பண்ணுதற்கு இன்னும் எத்தகைய பெரிய ஆயத்தம் பண்ண வேண்டியிருக்கிறது என்பதை மறந்து விடலாகாது. ராஜாதிராஜனாகிய கடவுளின் வாசஸ்தலம் நம் உடம்பு. இது நிலை குலைந்து போமாயின் அவன் இதில் கொலுவீற்றிருக்க இசையான். அவனுக்கு ஏற்றதாக இதைப் பண்ணுதலே நம் கடமை. இதற்கு மகத்துவம் வருவதும் ஈசவர சான்னித்தியத்தினாலேயாம். ஆக, இதை யாண்டும் ஈசுவரனுடைய ஆலயமாகச் செய்தல் செயற்கரிய செயல் ஆகின்றது.

### பூஜை என்பதன் பொருள்

ஆழ்ந்து ஆராயுமிடத்து பகவானைப் போற்றாதவர்கள் இல்லவே இல்லை. சிலர் கடவுளை வணங்குவதாக உணர்ந்து செய்கின்றனர்; வேறு சிலர் அத்தகைய உணர்ச்சி இல்லா

மலே வணங்குகின்றனர். நாஸ்திகர் என்பவரும் ஏதேனும் ஓர் உயர்தன்மையில் நம்பிக்கை வைக்கின்றனர். அந்த உயர்தன்மையே அவர்களால் வழுத்தப்படும் இறைமை யாகும். சிலர்க்கு இறைவனுயிருப்பது மற்றும் சிலர்க்கு இறைமையாகின்றது. தெய்வ சம்பத்து உடையதைப் பார்த்து மெச்சுதல் மாந்தர் இயல்பு. உயர்தன்மையை மெச்சும்போது மெச்சுபவரே உயர்தன்மை எய்துகின்றனர். ஆக, மெச்சுதலும் ஒருவகையில் பூஜையாகின்றது. நன்மையனைத்துக்கும் உறைவிடம் கடவுள். அவரை அடைய ஆசைப்படுவதும் நன்மையடைய விரும்புவதும் ஒன்றே. பூஜை என்பதற்கு நன்மையில் விருப்பம் என்று ஒரு பொருள் உண்டு. பேராற்றலைக் காணுமிடத்துத் தன்னையறியாது மனிதனுக்கு வியப்பு வந்துவிடுகிறது. இத்துணைப் பேராற்றல் வாய்ந்தது ஒன்று உண்டா என்று அதிசயிக்கிருன். மெய்ப்பொருளின் மகத்துவத்தை உணர்வதால் உண்டாகும் அதிசயமே பூஜையாகின்றது. பேராற்றல் படைத்துள்ள ஒன்றை நெருங்குதற்கு ஏற்ப தன் துயரங்களும் அச்சங்களும் நீங்கப்பெறுவதை மனிதன் காண்கிருன். அப்போது அவன் அல்லலை நீக்கும் பரம வஸ்துவின்கண் அடிபணிகிருன். வேறு எவ்விதத்திலும் நன்றி செலுத்த அவனுக்கு இயலுவதில்லை. ஆதலால் அச்சத்தைத் தவிர்த்தலும், அடிபணிதலும் பூஜையின் பகுதிகள் ஆகின்றன. இறைவனது சட்டத்துக்கு அடிபணிந்து ஒழுகுமளவு மனிதனுக்குச் சீரும் சிறப்பும் உண்டாகின்றன. அதனுல் தனக்கு உண்டாகும் மகிழ்வை அடக்க முடியாது மனிதன் கடவுளைப் போற்றவும், வழுத்தவும், வணங்கவும் செய்கின்ருன். உள்ளத்தின் உவகையே வணக்கமாக வடிவெடுக்கிறது. பகவானைப் பற்றிய புகழெல்லாம் பொருள் சேர்ந்த புகழ் ஆகிறது. ஏனென்ருல் மனம் எப்

படியோ மொழியும் அப்படியே உருவெடுக்கிறது. மனங் கசிந்து போற்றுதலும், வழுத்துதலும், வணங்குதலும் பூசனை யின் கூறுபாடுகளாகின்றன. பகவானைப் பாவிப்பார் பாபம் அறுபடுகிறது. அவனுடைய மேன்மையைச் சிந்திக்கச் சிந்திக்க மனமே மேன்மையுறுகிறது. தெய்வ சம்பத்தில் தோய்ந்திருப்பவர்க்கு ஆனந்தம் மேலிடுகிறது. ஆக, அவ னைப் பாவிப்பதும் பூஜையேயாம். உலகக் கிருத்தியங்க ளெல்லாம் இறைவனுடைய சங்கற்பத்தின்படி நிகழ்கின்றன. அவனது ஆணையால் அன்றி ஓர் அணுவும் அசையாது. நமக்கு நன்மையாகவும் தீமையாகவும் தோன்றுபவை அவனு டைய ஆதிக்கத்தில் பொருத்தமுடையவைகளாகவே இருக் கின்றன. இப்பரம உண்மையை அறியும் பக்தர்கள் தங்களை ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்து விடுகின்றனர். அவன் ஆட்டி வைத்தபடி ஆட அவர்கள் ஒருப்படுகின்றனர். ஒரு சிறு செய்கையிலும் இச்சா சுதந்திரம் தங்களுக்கு இல்லை என்ற எண்ணம் வந்து விடுகிறது. “நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே” என்னும் எண்ணம் வலுத்து விடுகிறது. இது சரணாகதி அல்லது அடைக்கலம் என்று சொல்லப்படுகிறது. இத்தகைய சீரிய மனநிலையும் ஈசுவரனுக்கு உகந்த பூஜையேயாம். சங்கீத ரசிகர் தங்களை மறந்து சங்கீதத்தில் லயமாவது போன்று ஈசுவர இயல்பில் ஒன்றித்து விடுவார் உண்டு. அவனது அருட்பிழம்பை எண்ணுங்கால், எண்ணுபவர்—எண்ணம்— எண்ணப்படுபொருள் என்னும் மும்மை போய்விடுகிறது. ஜீவபோதம் சிவபோதத்தில் லயமாகின்றது. இரண்டறக் கலத்தல் என்னும் இந்நிலையில் பூஜையானது பரிபூரணமா கின்றது. இங்ஙனம் மனிதனை மேன்மையுறப் பண்ணும் உபாயங்களெல்லாம் பூஜையாகின்றன.

**மானச பூஜை**

நாள்தோறும் உண்பதால் உடல் வளர்கிறது. நீராடுவதால் அது தூயதாகின்றது. உடலை வளர்க்கவும், தூயதாக்கவும் நாம் கடமைப்பட்டிருப்பதுபோன்று, உள்ளத்தைப் பண்படுத்த அறிவுடையோர் கடமைப்பட்டிருக்கின்றனர். மானச பூஜையே அதற்கு உற்ற உபாயம். காயமே கோயில் ஆவதுபோன்று ஒவ்வொருவர் வீட்டிலும் பூஜை அறை ஒன்று இருப்பது அவசியம். நறுமணமும் தெய்விகக் காட்சியும் அமைக்கப்பெற்ற அவ்வறையினுள் ஸ்நானம் செய்துவிட்டுத் தூய ஆடை அணிந்துகொண்டே செல்லுதல் வேண்டும். அப்படிச் செல்லும் சாதகன் தன்னநந்தனியனாய்ப் பூஜை அறையினுள் இருப்பது நன்று. ஆங்கு எழுந்தருளப் பண்ணியிருக்கும் தன் இஷ்ட தெய்வத்துக்கு அவன் கீழே வீழ்ந்து காயத்தால் வணங்குதல் அதற்கு அடுத்த செயல் ஆகும். சரீரத்துக்கு சிரமம் கொடாது நல்ல ஆசனத்தின்மீது இனிது வீற்றிருக்கவேண்டும். மனதை ஒருமைப்படுத்திக்கொண்டு உலகில் உள்ளோர் அனைவரும் இன்புற்றிருக்கவேண்டுமென்று மனமார முதலில் வாழ்த்துவது கடவுள் வழிபாட்டின் முதல்படி. அதற்கு சுவஸ்திவசனம் என்று பெயர். அங்ஙனம் மனமார வாழ்த்துவதால் வேற்றுமை உணர்ச்சியும் பதைபதைப்பும் சித்தத்தினின்று அகலுகின்றன. உள்ளம் இனிமைக்கு உரியதாய் விடுகிறது. சாந்தமும் சந்தோஷமும் அதன்கண் பொலியும். அத்தகைய அமைதியான மனதால் பாவிக்கப்படும் எண்ணங்கள் வலிவு மிகப்பெறுகின்றன.

நியாசம் என்பது அடுத்தபடியாகச் செய்யப்படுவது. சரீரத்தின் பல்வேறு அங்கங்களை மனதால் பலப்படுத்துவது என்பது அதன் பொருள். 'தேகத்துக்கு ஏதுவாகிய பஞ்ச

பூதங்கள் தூயமையடைக. கண்கள் ஒளியுடையவைகள் ஆகுக. மங்களகரமான மொழிகளைக் கேட்பதற்குக் காதுகள் உதவுக. நற்செய்கைகளைச் செய்தற்குக்கைகள் திறம் பெறுக. உடல் முழுவதும் தூயதாகுக. தேஜோமயமாய் அது பிரகாசித்துக்கொண்டிருக்கட்டும். வீரியமும் பலமும் தேகமெங்கும் பொலிக.' இத்தகைய தியானம் வலுக்கும் போது நியாசம் பூர்த்தியாகிறது. இதனால் தூய மனமும் அதற்கு உகந்த தேகமும் அமையப்பெறுகின்றன. இப்போது உடலும் உள்ளமும் கடவுளை வரவேற்பதற்குத் தகுந்தவைகளாகின்றன.

சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே என்று இறைவன் அழைக்கப்படுகிறான். இமைப்பொழுதும் நீங்காது உள்ளத்தில் இருக்கின்ற அவனது சான்னித்தியத்தை ஞாபகபடுத்திக்கொள்ளுதலே ஆவாஹனம் அல்லது வரவேற்பு ஆகின்றது. காலையில் அலர்ந்த தாமரைப் பூ போன்ற உள்ளம் அவனுக்கு உகந்த ஆசனம் ஆகிறது. அதன்மீது சுயப்பிரகாசமான பரம்பொருளை எழுந்தருளப் பண்ணவேண்டும். யார் யாருக்கு எத்தகைய தெய்வ வடிவத்தில் விருப்பமோ அத்தகைய வடிவுடையவனாய் அவனை வரவேற்கலாம். ஹிருதய கமலத்தில் எழுந்தருளியுள்ள அவனுக்கு இனி உபசாரங்கள் பல செய்வது முறைமை. மானச பூஜை என்பதும் அதுவே.

போற்றுதற்கு உரிய பெரியார் ஒருவர் விருந்தாளியாக எழுந்தருளும்போது என்னென்ன விதங்களில் அவருக்கு மரியாதை காட்டுவோமோ அவ்விதங்களிலெல்லாம் கடவுள் மனதால் வழுத்தப்படுகிறார். பாதம் அலம்புதற்கு முதலில் ஜலம் அளிக்கப்படுகிறது. மானச பூஜையில் அன்பே அதற்கு மஞ்சன நீர் ஆகின்றது. பின்பு இறைவனுக்கு

உள்ளம் எனும் ஆசனம் அளிக்கப்படுகிறது. அதே அன்பு நீர் மறுபடியும் ஆசமனம் பண்ணுதற்குக் கொடுக்கப்படுகிறது. நீரைக்கொண்டு முகம் துடைப்பதற்கும் அதைத் துளி அளவு உட்கொள்ளுதற்கும் ஆசமனம் பண்ணுதல் என்று பெயர். உலக வழக்கில் புஷ்பம், பத்ரம் முதலியவைகள் அர்க்கியமாகப் படைக்கப்படுகின்றன. மேன்மை தங்கிய மனதே கடவுளுக்குகந்த அர்க்கியமாகிறது. எல்லாராலும் சொந்தம் பாராட்டப்படுவது அவரவர் மனது. அதைத் தூயதாக்கி இறைவனுக்கு அர்க்கியமாகப் படைக்க வேண்டும்.

பிறகு, அன்பு என்னும் மஞ்சன நீரால் சித்தமிசை வீற்றிருக்கும் இறைவன் நீராட்டப்படுகிறான். அடுத்தபடி அவன் அணிதற்கு ஆடைவேண்டும். சிதாகாசம் அல்லது உள்ளப் பெருவெளியே அவனுக்கு ஆடை. ஏனென்றால் அவனை மூடுதற்கு அதைத் தவிர வேறு ஒன்றுமில்லை. மோப்பம் அல்லது பிராணசக்தி வாசனைத் திரவியமாக அளிக்கப்படுகிறது. மானச பூஜையில் சரீரம் முழுதும் வியாபித்திருக்கும் பிராணன் தூபமாகக் கொடுக்கப்படுகிறது. அதன் பிறகு தீபம் காட்டப்படவேண்டும். ஆத்ம சாதகனுடைய நல்லறிவே மானச பூஜையில் தீபமாகக் கருதப்படுகிறது. சுடர்விட்டு எரியும் தீபமாகத் தனது புத்தி அல்லது நல்லறிவைச் சாதகன் தன் மனத்தகத்து இருக்கும் தெய்வத்தின் முன் வைக்கிறான். உயிர் வாழ்க்கையில் ஜீவர்கள் அனைவர்க்கும் பெரும் பற்றுதல் இருக்கிறது. இத்தகைய வாழ்க்கையைப் பக்தன் தனக்கென்று வைத்துக்கொள்ளாது தன் இஷ்ட தெய்வத்துக்கு நைவேத்தியமாகப் படைத்து விடுகிறான். அனுஹத தொனி என்பது ஒன்று இயற்கையில் உண்டு. அது ஓங்கார வடிவமாக ஓயாது ஒலித்துக்கொண்

டிருக்கிறது. நம் சிற்றுடல் வாழ்க்கை முழுதும் ஒழுங்காகும் போது அதே அனுஹத தொனியை நம்முள் கேட்கலாம். மானச பூஜைக்கு அத்தொனியே மணியாகின்றது. புஷ்பம் சாத்தி அர்ச்சனை செய்யவேண்டும். அதற்கு மனதால் பாவிக்கக் கூடிய ஒவ்வொரு சீரிய எண்ணமும் ஒவ்வொரு புஷ்பமாகின்றது. அஹிம்சை, சத்தியம், விவேகம், வைராக்கியம், சாந்தி, பணிவு, அன்பு, அமைதி, சமம், தமம், திதிக்ஷை, சிரத்தை, உபரதி, சமாதானம், சந்தோஷம், க்ஷமை, தீரம், வீரம் ஆகியவைகளை ஆழ்ந்து எண்ணி ஒன்றன்பின் ஒன்ருக சித்தமிசை குடிகொண்டுள்ள தெய்வத்துக்குச் சாத்துவது புஷ்பாஞ்சலி அல்லது அர்ச்சனை ஆகின்றது.

பாவனை அல்லது மனக்கண்ணுல் உணர்தல் எவ்வளவுக்கெவ்வளவு வலிவும் தெளிவும் பெறுகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு மானச பூஜை பூர்த்தியாகின்றது. ஒருமை மனதாகவும், நிதானமாகவும், திருப்தி உண்டாகுமளவும் பூஜையின் ஒவ்வொரு பாகத்தையும் ஆழ்ந்து பாவித்துக் கொண்டு போகவேண்டும்.

## பாஹ்ய பூஜை

உள்ளத்தில் உறைகின்ற இறைவனை வழுத்துதற்கு உபாயமாயுள்ளது மானசபூஜை. வழிபாடுகளுள் மானச பூஜையே மேலானது. ஆனுல் அதைப் பூரணமாய்ச் செய்ய எல்லார்க்கும் இயலுவதில்லை. சூக்ஷ்ம திருஷ்டியும் சூக்ஷ்ம பாவனையும் உண்டாகும்வரை ஸ்தூல வஸ்துக்களின் உதவியை நாடுதலே முறை. எண்களைக் கூட்டுதற்குப் பாலகர்களுக்கு உருவங்கள் அவசியமாயிருப்பதுபோன்று ஆத்ம சாதனத்தில் முதிர்ச்சியடையுமுன்பு மூர்த்தி வழிபாடு சாத

கர்களுக்குப் பெரிதும் பயன்படுகின்றது. அவரவர் விரும்பிய படி வணங்குதற்கு வீடுதோறும் பூஜையறையொன்றும், அதனுள் வழிபடு தெய்வத்தின் திருவுருவமும் இருப்பது அவசியம். பக்தன் ஒருவனுடைய இல்லத்தில் கோயிலறையே முதன்மை ஸ்தானம் பெற்றிருக்கும்.

மானச பூஜை செய்தானதும், அது மனதில் நன்ருய்ப் படிதற்பொருட்டுத் திரும்பவும் ஒருமுறை பாகியத்தில் பக்தன் அதைச் செய்கிருன். சித்தமிசை குடிகொண்டுள்ள தெய்வம் தன்னெதிரே இருக்கும் விக்கிரகத்தில் அல்லது படத்தில் ஆவிர்பவிக்கும்படி வேண்டுகிருன். இந்நிலையில் அவன் கண் விழித்துப் பார்க்கும்போது முன்னிலையில் உள்ள திருவுருவம் தெய்வத்தன்மையுடன் திகழ்கின்றது. தான் சேகரித்து வைத்துள்ள மஞ்சனநீர், சந்தனம், புஷ்பம் முதலியவைகள் இப்போது பயன்படுகின்றன. பக்தியுடன் பாத்யம் (பாதத்துக்கு நீர்) வார்க்கப்படுகின்றது. சந்தனம், புஷ்பம், வில்வம், துளசி, அறுகு, அட்சதை முதலியவைகளில் ஏதேனும் ஐந்து திரவியங்கள் அடங்கப்பெற்ற அர்க்கியம் படைக்கப்படுகிறது. பின்பு மனதுக்கு உகந்தபடி அபிஷேகம், அலங்காரம், தூபதீபம், நைவேத்தியம், ஆசமனம், அர்ச்சனை, ஸ்தோத்ரம் முதலியவைகளால் பாகிய பூஜை முற்றுப்பெறுகிறது.

பாகிய பூஜையில் கையாளப்படும் சடங்குகளெல்லாம் ஆத்ம சாதனத்தின் பல்வேறு இயல்புகளை விளக்குபவைகளாய் அமைந்துள்ளன. கடவுளுக்கு இவைகளெல்லாம் தேவையா என்னும் கேள்வி எழ இடமில்லை. ஏனெனின், இவை யாவும் சாதகனுக்குப் பயன்படுகின்றன. அவன் ஈசனை நோக்கி ஏகுதற்குப் பயன்படுபவைகளாய் அமைந்தவைகள் இவை. உயிர்களை இறைவன் மாட்டு இட்டுக்

கொண்டு போதலே இயற்கையின் தொழில். ஆதலால் இயற்கையைக் கடவுள் வழிபாட்டுக்கு உபயோகிப்பதே மனிதன் அதைக்கொண்டு செய்யும் அருங்காரியமாகும். இயற்கையைக் கையாளும் விதத்துக்கு ஏற்ப மனிதன் பெருமை அல்லது சிறுமை அடைகின்றான். அற்ப ஆசைகளைப் பூர்த்தி செய்தற்பொருட்டு அதை உபயோகிக்கும் ஒருவன் அற்பத்தன்மை அடைகின்றான். ஈசுவர ஆராதனை போன்ற மேலாம் காரியத்துக்கு உலகப் பொருள்களை உபயோகிப்பவன் ஈசுவர அனுக்கிரகத்தைப் பெறுகின்றான். இந்தியாவின் வடமேற்கு மாகாணங்களில் பழமொழி ஒன்று உண்டு. அதாவது மண்ணால் செய்த விக்கிரகத்தின் மூலம் மனிதன் கடவுளைவணங்குகின்றான். அங்ஙனம் வணங்குகின்ற மனிதன் கடவுள் இயல்பைப் பெறுகின்றான். விக்கிரகத்தின் அமைந்த மண்ணோ பழையபடி மண்ணாய்ப் போகின்றது.

மூர்த்தியின்மூலம் பாகிய பூஜையை முடித்த பிறகு சாதகன் இறைவனிடமிருந்து மன்னிப்புக் கேட்கிறான். ஈசுவர தத்துவம் தனக்குப் பரிபூரணமாக விளங்கவில்லை என்றும், தன் அறிவுக்கு எட்டியவாறே தான் ஆராதனை செய்தான் என்றும், அத்தகைய ஆராதனையில் உள்ள குற்றங்குறைகளை மன்னிக்கவேண்டும் என்றும் சாதகன் வேண்டுகின்றான். மூர்த்தி அல்லது விக்கிரகத்தில் ஆவிர்பவித்துள்ள இறைவன் பழையபடி தன் உள்ளத்தில் எழுந்தருள வேண்டுமென்று இறுதியாக அவன் பிரார்த்திக்கிறான். அத்துடன் பாகிய பூஜை முற்றுப்பெறுகிறது.

## தானே செய்யவேண்டும்

உணவை ஒருவனுக்காக மற்றொருவன் உட்கொள்வதில் பயனில்லை. உடலைப்பேண விரும்பும் ஒவ்வொருவனும்

தனக்குத்தானே போஜனம் பண்ணவேண்டும். கல்வியும் அத்தகையதே. அதை வேண்டுபவன் தானே முயன்று கற்றுகவேண்டும். உதவிபுரிவதோடு பிறர்வேலை நின்றுவிடுகிறது. அறிவு தன்னூடு வளர்ந்து ஓங்கவேண்டும். ஆத்ம சாதனம் இன்னும் மேலானது. சுயப்பிரயத்தனத்தாலன்றி அது அமையாது. பூஜா தத்துவம் முழுதும் ஆத்ம சாதனத்தை ஒட்டியது. ஆதலால் சாதகன் தன் இயல்புக்கேற்றவாறு அதைத் தனக்குத்தானே செய்துகொள்ள வேண்டும். அரைகுறையாகவெனினும் தானே சாதனத்தைச் செய்ய முயல்பவனே முன்னேற்றமடைகின்றான்.

பொருளைப் பெருமிதமாகச் செலவிடுவதால் பூஜை பெரியதாய்விடாது. பொருளுடையோர் அதைத் தங்களுக்கென்று வைத்துக்கொள்ளாது, மற்றவர்களுக்கும் இறைவனின் பெயரால் பகுத்துக்கொடுக்குங்கால் அதனால் பயனுண்டு. தற்பெருமைக்காகவென்று வீண் விரயம் செய்வது இறைவனுக்கு ஏற்காது. பொருள்படைத்திருப்பவர்கள் வெறும் கையுடன் கோவிலுக்குப் போகலாகாது. தாங்கள் விரும்பும் நல்ல கனி, பக்ஷண வகைகளைக் கடவுளுக்குப் படைத்து அவருடைய பிரசாதமாகப் பலருக்கு எடுத்து வழங்கவேண்டும். ஆராதனைகளுள் அது சமாராதனையாகின்றது. கொண்டுள்ள மனப்பான்மையே பூஜையில் முக்கியமானது. கண்ணப்ப நாயனர் வழிபாட்டுக்காகக் கையாண்ட பொருள் போற்றத்தக்கதன்று. அப்படியிருந்தும் கடவுளுக்கு அது உகந்ததாயிற்று. அங்கு உயர்ந்த மனநிலையே அதற்குக் காரணமாயிருந்தது. அன்பும், ஊக்கமும், பணிவும் பூஜைக்கு ஆதாரமாகின்றன. மனம் பண்படுவதே பூஜையின் பயன்.

நாள்தோறும் கடவுளைப் போற்ற மனிதன் கடமைப்பட்டிருக்கிறான். போற்றுமளவு புனிதம் அவன்பால் வந்து

எய்துகிறது. அதனால் வாழ்க்கையே ஓயாது புதுப்பிக்கப் படுகிறது. பொருளைத்தேடும் மனிதன் செல்வப் பெருக்கை உணர்வது போன்று இறைவனை முறையுடன் வழுத்துபவன் மேன்மையுறுவது தனக்கே விளங்கும். நாள் ஏற ஏறப் புதிய ஆனந்தம், புதிய உற்சாகம், புதிய அமைதி, புதிய வலிவு ஆகிய தெய்வ சம்பத்துக்களுடன் வாழ்க்கையானது பொலிவடைந்துகொண்டு வரும். இவ்வுலகம் உண்மையில் இருள் சூழ்ந்ததன்று; அருளே வடிவெடுத்தது என்பதும் அப்போது தோன்றும். பூஜைசெய்து புனிதம் அடைபவர் தங்களுக்கு மட்டும் பயன்படுபவர் அல்லர்; அவர்களுடைய வாழ்வு உலகுக்கே அருள்விருந்து ஆகும்.